தாயுமானவர் இயற்றிய

# சின்மயானந்தகுரு



விளக்கியவர்

ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர்

தாயுமானவர் இயற்றிய

# சின்மயானந்த குரு



प्रज्ञानं ब्रह्म

விளக்கியவர்

ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர்

தாயுமானவர் இயற்றிய

# சின்மயானந்த குரு

ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்களின்
விரிவுரையுடன்



ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்
திருப்பராய்த்துறை-639 115
திருச்சி ஜில்லா
1978

தாயுமானவர் இயற்றிய

# சின்மயானந்த குரு

விரிவுரையுடன்

அங்கைகொடு மலர்தூவி அங்கமது புளகிப்ப
அன்பினு லுருகிவிழிநீர்
ஆருக வாராத முத்தியின தாவேச
ஆசைக் கடற்குள்மூழ்கிச்
சங்கர சுயம்புவே சம்புவே எனவுமொழி
தழுதழுத் திடவணங்குஞ்
சன்மார்க்க நெறியிலாத் துன்மார்க்க னேனையுந்
தண்ணருள் கொடுத்தாள்வையோ
துங்கமிகு பக்குவச் சனகன்முதல் முனிவோர்கள்
தொழுதருகில் வீற்றிருப்பச்
சொல்லரிய நெறியைஒரு சொல்லா லுணர்த்தியே
சொரூபாநு பூதிகாட்டிச்
செங்கமல பீடமேற் கல்லா லடிக்குள்வளர்
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிண மூர்த்தியே
சின்மயா னந்தகுருவே.

இரண்டுபேர் முடவர் ஆய்விட்டார்கள். வலது கையை இழந்தவர்களாக ஒரு கூட்டத்தினுள் அவர்கள் தென்பட்டார்கள். அங்கஹீனன் ஆவது குறைபட்ட உடல் வாழ்க்கையாகிறது. ஆயினும் இவ் இரண்டு முடவர்களின் நிலைகள் வெவ்வேறு பாங்குடையவைகள் ஆயின. ஒருவன் திருடினன். திருடுகின்றபொழுது கைப்பிடியாக அகப்பட்டுக்

கொண்டான். அவன் கையைத் துண்டித்து அவனைத் துரத்தி விட்டார்கள். வாழ்நாள் முழுதிலும் அது ஒரு வெளிப்படையான தண்டனையாய் இருக்கட்டுமென்று அவர்கள் அப்படிச் செய்துவிட்டார்கள். அத்தகைய விருத்தாந்தத்துடன் சபை நடுவே வந்தவன் அவமானத்துக்கு உட்பட்டவன் ஆனான். ஆனால் மற்றவனுடைய விருத்தாந்தம் வேறு விதமானது. இயங்கும் யந்திரம் ஒன்றனுள் அகப்பட்டுக் கொண்ட குழந்தை ஒன்றை மரணத்தினின்று வெற்றிகரமாகக் காப்பாற்றினான். அப்பெருமுயற்சியில் அவனுடைய கை யந்திரத்தில் துண்டிக்கப்பட்டது. இவன் சபை நடுவே வந்தபொழுது அங்கஹீனத்தை முன்னிட்டுப் பாராட்டப்பட்டான். இவனுடைய துண்டிக்கப்பட்ட கை ஒரு விதத்தில் அழகுடன் பொலிந்த கை ஆனது. அரும்பெரும் செயலைச் செய்ததே அதற்குக் காரணமாயிற்று. கை ஒன்றுக்கு அழகு உண்டாவது ஆபரணங்களை முன்னிட்டன்று. ஆபரணங்கள் பூட்டி யாருடைய கையையும் அலங்கரித்துவிடலாம். ஆனால் நற்செயலே செய்து கொண்டிருக்கும் கை அழகிய கை ஆகிறது. நற்செயல்களிலெல்லாம் சிறந்தது ஆண்டவனை ஆராதிப்பது. இறைவனைப் போற்றுவதால் மேன்மையுண்டாகிறது. இறைவனைப் போற்றுதற்கு உபாயங்கள் பல உள. அத்தனைவித உபாயங்களின் வாயிலாக மனதைக் கடவுளிடம் ஒப்படைக்க வேண்டும். ஆராதனையின் உட்கருத்து அதுவேயாம். நொந்தமனதைக் கடவுளிடம் ஒப்படைப்பது முறையன்று. பண்பட்ட நல்ல மனதையே கடவுளுக்கு உரியதாக்க வேண்டும். நல்ல மனதுக்குப் புறச்சின்னமாய் அமைந்திருப்பது மலர். அதனிடத்துப் புதுமையும், எழிலும், மணமும் திகழ்ந்துகொண்டிருக்கின்றன. மனது யாண்டும் மலர்போன்று இருத்தல் வேண்டும்.

அத்தகைய மனதைக் கடவுளிடத்து ஒப்படைப்பதற்கு அறி குறியாகக் கையால் வழிபடுபவன் ஒருவன் மலரை எடுத்துக் கடவுளுக்குத் தூவுகிறான். அச்செயல் பாராட்டத்தக்க சிறந்த செயல் ஆகிறது. அங்கை என்பது அழகிய கை. அதனால் செய்யப்படுகிற சிறந்த செயலை அங்கைகொடு மலர் தூவி என்கிறார் தாயுமானவர்.

உடலின் உறுப்புக்களுக்கு அங்கங்கள் என்று பெயர். அங்கங்களின் தொகையே உடல் ஆகிறது. உள்ளத்தில் உண்டாகிற உணர்ச்சி உடலில் உண்டாகிற சில மாறுதல் கள் வாயிலாக வெளியாகிறது. உணர்ச்சி வெவ்வேறு வடி வெடுக்கிறது. அன்பு, அச்சம், சினம், பொறாமை ஆகிய இவை யாவும் உணர்ச்சியின் வெவ்வேறு தோற்றங்கள். புளகித்தல் என்னும் சொல் மயிர் சிலிர்த்தல் எனப் பொருள் படுகிறது. அச்சத்தாலும், ஆச்சரியத்தாலும், பேர் அன்பினா லும், சினத்தாலும் உடல் புளகிப்பதுண்டு. உணர்ச்சி யின் வேறுபாட்டுக்கு ஒப்ப புளகிப்பு ஆனது உடலில் வெவ் வேறு பயன்களை விளைவித்து விடுகிறது. சினத்தால் உண் டாகும் புளகிப்பு உடலை நஞ்சு ஆக்குகிறது. பயத்தால் உண்டாகும் புளகிப்பு உடலை மாய்த்துவிடுவது போன்று தேய்க்கிறது. அன்பால் அல்லது ஆனந்தத்தால் உண்டா கும் புளகிப்பு உடலைப் பண்படுத்தித் தூயதாக்குகிறது. உள்ளத்தில் உண்டாகிற உணர்ச்சிகளில் எல்லாம் உயர்ந் தது இறைவனிடத்துக் கொண்டுள்ள பேரன்பு. அது ஆனந்த மாக வடிவெடுக்கிறது. அதன் புறச்சின்னம் உடலிலும் தென் படுகிறது. அத்தகைய தோற்றத்தை அங்கமது புளகிப்ப என்கிறார் தாயுமானவர்.

உடலும் உள்ளமும் உருகுதற்குப் பல காரணங்கள் இருக்கின்றன. துயரத்தால் உருகுதல், கோபத்தால் உருகு

தல், பொருமையினுல் உருகுதல் முதலியன வாழ்க்கையைக் குலேத்து விடுகின்றன. காமத்தால் உருகுவது அதைவிடக் கொடியது. தூய அன்பினுல் உருகுவதும் உண்டு. தூய அன்பினுல் உருகுகின்றபொழுது அது வெண்ணெயை உருக்குவதற்கு ஒப்பாகிறது. வெண்ணெயை உருக்கி மாசை நீக்கி மணம் நிறைந்த நெய்யாக மாற்றுகிருேம். மனிதனுக்குக் கடவுளன்பும் அதற்கு ஒப்பான தூய அன்பும் உண்டாகுமாளுல் அவன் உருகி உயர்ந்த மனிதனுக வடி வெடுக்கின்ருன். அப்படி அவன் மேலோனுக மாறி அமை வதை அன்பினுல் உருகி என்கிருர் அண்ணல்.

கண்ணீர் சிந்துவது உயிர்களின் செயல். உள்ளத்தில் உண்டாகும் விதவிதமான விகாரங்களுக்குச் சிந்துகின்ற கண்ணீர் புறச் சின்னமாகிறது. மாண்டவர்களேக் குறித்துப் புரண்டு அழுது குடம் குடமாகக் கண்ணீர் கொட்டுபவர் உளர். பேரும் புகழுக்காகப் பரிதவித்துக் கண்ணீர் உகுப் பார் இருக்கின்றனர். காம நோயால் வருந்திக் கண்ணீ ரைப் பெருக்குவாரும் இருக்கின்றனர். இத்தகைய கண் ணீர்கள் எல்லாம் உண்மையில் மனிதனைச் சிறுமைப் படுத் துபவைகளாம். இவை யாவும் துன்பக் கண்ணீர். இவை களுக்கு மாருக இன்பக்கண்ணீர் என்பது ஒன்று உண்டு. அது அருள் தாகத்தால் வருவது. கடவுள் நாட்டத்தால் ஏற்படும் கண்ணீர் அது. உணர்ச்சியின் வேகத்துக்கு ஒப்ப விழிநீர்ப் பெருக்கு மிகைபடுவதுண்டு. மனிதனிடத் துள்ள பாபங்களேயெல்லாம் கழுவவல்லது கடவுளே நாடிச் சிந்தும் கண்ணீர் என்கிருர் ஸ்ரீ ராமகிருஷ்ணர். நிலேயற்ற உலக வாய்ப்புக்களுக்காகக் குடம் குடமாகக் கண்ணீர் சிந்துபவர் இருக்கின்றனர். கடவுளுக்காகவென்று கண் ணீர் சிந்துவாரைக் காண்பது அரிதிலும் அரிது என்று

மேலும் அதே பரமஹம்ஸர் பகர்ந்துள்ளார். பாராட்டத்தக்க அத்தகைய இன்பக் கண்ணீரை விழிநீர் ஆறு ஆக என்கிறார் தாயுமானவர்.

பலதரப்பட்ட கடல்கள் இருக்கின்றன. பரந்த நீர்நிலைகளைக் கடல்கள் என்று நாம் பகர்கிறோம். இனி, லக்ஷியார்த்தத்தில் வேறு சில நிலைகள் கடல்கள் என்று கொள்ளப்படுகின்றன. பிறவியை ஒருவர் பெருங்கடல் என்றார். இன்னொருவர் ஆசையைக் கடல் என்றார். ஆசைக் கடல்களுள் இருதரப்பட்டவைகள் இருக்கின்றன. மனிதனை மரணத்தினுள் ஆழ்த்தும் கடல் உண்டு. மண் ஆசை, பொன் ஆசை, போகத்தில் ஆசை மயமான கடல்கள் மனிதனைக் கெடுத்துவிடுகின்றன. கடவுள் மீது வைத்துள்ள ஆசையே மனிதனைப் படிப்படியாக மேல்நிலைக்கு எடுக்கின்றது. ஆசையினுடைய வேகம் அதிகரித்து விட்டால் அது ஆவேசம் என்று பொருள்படுகிறது. பயித்தியம் பிடித்தவன் போன்று பேராசைக்காரன் நடந்துகொள்கிறான். இங்கும் அங்கும் அலைந்து திரிகின்றான். ஓய்வு ஒழிச்சல் அவனுக்கு இல்லை. பெரும் பிரயத்தனம் எடுத்துக் கொள்கின்றான். பொருந்தியவைகளையும், பொருந்தாதவைகளையும் பெருமிதமாகப் பேசுகின்றான். கடவுள் நாட்டத்தில் செல்லுகிற ஒரு மனிதனுக்கும் அத்தகைய ஆவேசம் வந்துவிடுகிறது. கடவுளை நாடுவதும் முக்தியை நாடுவதும் ஒன்றேயாம். உலக பந்த பாசங்களினின்று விடுபடுவது முக்தி. உலக வாழ்க்கையிலுள்ள குறைபாடுகள் அனைத்தினின்றும் விடுபடுவது முக்தி. கடவுளை அடைகின்றவனிடத்து இக்குறைபாடுகள் அனைத்தும் அகன்று விடுகின்றன. முக்தியை அடைவதும் கடவுளை அடைவதும் ஒன்றே. ஏனைய ஆசைகள் தெவிட்டிப்போய் விடுகின்ற சிறிய

இன்பங்களை நல்குகின்றன. கடவுள் நாட்டம் என்கின்ற ஆசை தெவிட்டிப்போகாத பேரானந்தத்தையும், பேரன்பை யும் உண்டுபண்ணுகிறது. அத்தகைய தெவிட்டாத நிலை ஆராத நிலை எனப்படுகிறது. இக்கோட்பாடுகளையெல்லாம் தொகுத்தெடுத்து ஆராத முக்தியினது ஆவேச ஆசைக் கடற்குள் மூழ்கி என்கிறார் தாயுமானவர்.

கடவுளும் கடவுளுடைய பெயரும் இணைபிரியாதவை கள். மக்களுக்கு நாம் வைக்கும் பெயர் அத்தகையதன்று. ஞான சம்பந்தன்என்று ஒருவனுக்குப் பெயர் வைக்கின்றோம். உண்மையில் அவனுக்கும் ஞானத்துக்கும் ஒரு சம்பந்தமும் இல்லாது போய்விடக்கூடும். இயற்கையினுடைய அமைப்பு அத்தகையதன்று. இயற்கையில் ஒவ்வொரு பொருளும் ஒரு சப்த சொரூபமாக இருக்கிறது. ஒரு பொருளிடத் திருந்து எத்தகைய ஓசை அல்லது ஒலி உதித்துக்கொண் டிருக்கிறது என்பது நமக்கு விளங்குவதில்லை. ஆயினும் ஒவ்வொரு பொருளும் ஓசை சொரூபமே. அதை முன்னிட்டே பொருளுக்குப் பதார்த்தம் என்கின்ற பெயர் வந்துள்ளது. பதம் என்பது சொல் அல்லது ஓசை. அதற்கு அமைந்த பொருள் அர்த்தம் எனப்படுகிறது. பதமும் அதனுடைய அர்த்தமும் சேர்ந்தே இயற்கையிலுள்ள ஒவ்வொரு பொருளு மாம். எப்பொருளிடத்திருந்து எத்தகைய ஓசை வந்து கொண்டிருக்கிறது என்பதை ஆன்றோர் அறிந்துகொள்கின்ற னர். அத்தகையவர்களே மெய்ப்பொருளை அறிந்துகொள்ள வல்லவர் ஆகின்றனர். கடவுளிடத்திருந்து வரும் ஓசையை அவர்கள் உணர்கின்றனர். பின்பு அதை அவர்களே எடுத்து ஓதுகின்றனர். அவர்கள் கேட்டறிந்த ஓசையைத் தான் சிவன் என்றும், சங்கரன் என்றும், நாராயணன் என் றும் இன்னும் பலபெயர்களாக வெளியிட்டிருக்கின்றனர்.

இத்தகைய ஓசைகள் வலிவு வாய்ந்தவைகள். அவைகளை நாம் உறுதியாகப் பிடித்துக்கொண்டால் அந்த ஓசைக்கு அடிப்படையாய் இருக்கும் மூலப்பொருளை அறிந்துகொள்ள வல்லவர் ஆகின்றோம். இக்காரணத்தை முன்னிட்டே கடவுளும் கடவுளுடைய நாமமும் ஒன்றே என்று சொல்லப் பட்டிருக்கிறது. கடவுளுக்கு எண்ணிறந்த நாமங்கள் இருக் கின்றன. அவைகளில் சிலவற்றை ஆராய்ந்து பார்ப்போம். சங்கரன் என்பது அவனுக்கு அமைந்த பெயர்களில் ஒன்று. நலத்தைச் செய்பவன் என்று அது பொருள்படுகிறது. அது மட்டுமல்லாது இந்தச் சொல்லைத் திரும்பத் திரும்ப நாம் உச்சரித்தால் நலத்தைச் செய்யும் பாங்கு நமக்கே வந்து அமைந்துவிடுகிறது. சுயம்பு என்பது அவனுக்கு அமைந் துள்ள மற்றொரு பெயர். தானாகத் தோன்றியவன் என அது பொருள்படுகிறது. தோற்றுவித்தபடி தோன்றுவது செயற்கைப் பொருளின் இயல்பு. கண்ணாடிப் பாத்திரம் ஒன்று நாம் தோற்றுவித்த பிரகாரம் அமைகிறது. இயற்கை நாம் தோற்றுவித்த பிரகாரம் அமையாது. நம் உடலில் வளரும் உரோமம் ஒன்றை மாற்றி அமைக்க நமக்கு முடியாது. அது தானாகவே தோன்றுகிறது என்று சொல்ல லாம். இப்பிரபஞ்சம் முழுதுமாய்த் தோன்றியிருப்பவர் கடவுள். யாராலும் ஏவப்பட்டு அல்லாது, தன் பெருமை யைத் தானே விளக்குகின்ற பாங்கில் அவன் இவ்வுலகனைத் துமாய் இருக்கின்றான். சுயம்பு என்னும் சொல் இக் கருத்தை விளக்குகிறது. சில பொருள்களோடு தொடர்வு வைப்பதால் துன்பம் வருகிறது. நஞ்சு நிறைந்த நீரும், நில மும், காற்றும் இருக்கின்றன. அவைகளோடு தொடர்வு வைத்தால் நமக்குத் துன்பம். நமக்குச் சுகம் தரும் வேறு சில பொருள்கள் இருக்கின்றன. தூய நிலையில் உள்ள

அனலும், புனலும், நிலனும் தத்தம் போக்கில் நமக்குச் சுகம் நல்குகின்றன. இனி, கடவுளோவெனின் எல்லா உயிர்களுக்கும் யாண்டும் சுகம் விளைவிப்பவராவார். அக் கருத்தை அடிப்படையாகக் கொண்டிருக்கிறது சம்பு என் னும் சொல். இறைவனுக்கு அமைந்துள்ள பெயர்கள் எல் லாம் அவனுடைய மகிமைகளை விளக்குதற்கென்றே அமைந் தவைகளாம். அத்தகைய பெயர்களைக் கொண்டு நாம் அவனை அழைக்கின்ற பொழுதெல்லாம் அவனுடைய மகிமை களையே நமது மனத்தகத்துள் அமைத்துக் கொள்கின்றோம். இக்கோட்பாட்டை சக்கர சுயம்புவே சம்புவே என்று தாயு மானவர் இயம்புகின்றார்.

இறைவனைக் கூவியழைக்கின்ற பாங்கிலும் பல படித் தரங்கள் இருக்கின்றன. பேசும் யந்திரங்கள் இக்காலத்தில் அமைக்கப் பெற்றிருக்கின்றன. இறைவனுடைய திரு நாமத்தை ஓலமிட்டுக்கொண்டிருப்பது அந்த யந்திரங்களுக் கும் இயலுகிறது. மக்களுள் பலர் இறைவனுடைய திரு நாமத்தை ஓதுகின்றனர். உணர்ந்து ஓதினாலும் உணராது யந்திரம் போன்று ஓதினாலும் ஓதுதற்கு ஏற்ற அளவு உள் ளத்தில் சிறு மாறுதல் அமையப் பெறுவது உயிர் வாழும் மக்களுக்கு சாத்தியமாகிறது. ஆதலால் யந்திரம் ஓலமிடு வது போன்றே மனிதன் ஒருவன் இறைவனுடைய நாமத்தை ஓயாது ஓலமிட்டுக்கொண்டிருந்தால் அவனுக்கு நலன் ஏற் படுகிறது. அவனுக்கு அமைகிற நலன் யந்திரத்துக்கு உண்டாகாது. ஏனென்றால் மனிதன் உணர்ச்சியுடன் கூடியவன். யந்திரத்துக்கு அந்த உணர்ச்சியில்லை. இந்த உணர்ச்சியைப் பன்மடங்கு வலிவுடையதாக்கும் வல்லமை மனிதனுக்கு இருக்கிறது. உணர்ச்சியைப் பேருணர்ச்சி யாக மாற்றுமளவு மனிதன் அதிவிரைவில் தன் அமைப்

யையே மாற்றிவிட வல்லவன் ஆகின்றான். பேருணர்ச்சியை எப்படி அறிந்துகொள்ள முடியும் என்பது அடுத்த கேள்வி. ஒருவன் உணர்ச்சியோடு பேசுகிறான். மற்றொருவன் உணர்ச்சியின்றிப் பேசுகிறான். உணர்ச்சியோடு பேசுகின்றவன் மற்றவர்களுடைய உள்ளத்திலும் உணர்ச்சியை ஊட்ட வல்லவனாகின்றான். உணர்ச்சியற்றுப் பேசுகின்றவனுக்கு அது சாத்தியமாவதில்லை. உணர்ச்சி மிக மேலான நிலைக்குப் போய்விட்டால் நா குளற ஆரம்பித்து விடுகிறது; சொல்லே தெளிவற்றதாய்ப் போய்விடுகிறது. எனினும் உள்ளத்தை அவ்வுணர்வு ஆழ்ந்து பற்றிப் பிடிக்கிறது. இறைவனுடைய திருநாமத்தை அத்தகைய பேருணர்வு நிலையிலிருந்து நா குளறிக்கொண்டு சொல்லுகின்ற இடத்து அது மிகப் பெரிய போற்றுதல் ஆகின்றது. மொழி தழுதழுத்திடல் என்பது நா குளறுதலுக்கு அமைந்துள்ள மற்றொரு சொல்தொடர். போற்றப்படும் பொருளிடத்து ஒன்றுபடும் நிலை வணங்குதல் எனப் பெயர் பெறுகிறது. இக்கருத்தைச் சங்கர சுயம்புவே சம்புவே எனவும் மொழி தழுதழுத்திட வணங்கும் என்று அவர் இயம்புகின்றார்.

மார்க்கம், நெறி, ஆறு, பாதை, வழி ஆகிய இவை யாவும் ஒரே கருத்தை விளக்கும் பல சொற்களாம். ஓடுகின்ற நீர்ப்பெருக்கை ஆறு என்று சொல்லுகிறோம். ஓர் இடத்தில் நின்றுவிட்டால் அது ஆறு ஆகாது. இடம் மாறி அது ஓயாது போய்க்கொண்டே இருக்க வேண்டும். அப்பொழுது அது ஆறு என்னும் பெயர் பெறுகிறது. மனிதனும் அந்த நீர்ப் பெருக்குப் போன்று ஓயாது போய்க்கொண்டே இருக்கிறான். தான் போய்க்கொண்டிருப்பது பெரிதும் அவனுக்கு விளங்குவது இல்லவேயில்லை. ஓயாது

போய்க்கொண்டிருக்கின்ற பூமி இருந்த இடத்திலே இருப்பது போன்று தென்படுகிறது. பூமி இடம் மாறிப் போய்க்கொண்டிருந்தாலும் நிலைமாறிப் போய்விடுவதில்லை. மனிதன் இருந்த இடத்திலே இருக்கலாம். ஆனால் அவன் ஓயாது நிலைமாறிப் போய்க்கொண்டிருக்கின்றான். ஓடுகின்ற நீரோடை ஓட ஓட சுவறிப் போய்விடுமானால் ஒரு விதத்தில் அந்த சுவறிப்போன நிலை அதற்கு துன்மார்க்கமாகிறது. ஓடுகின்ற ஓடை உயிர்களுக்கும் பயிர்களுக்கும் வளத்தை வழங்க ஓடுமானால் நீரோடைக்கு அது சன்மார்க்கமாகிறது. நிலைமாறி அமைந்துகொண்டிருக்கிற மனிதன் உயர்ந்தநிலைக்குப் போய்க்கொண்டிருப்பானாகில் அது சன்மார்க்க நெறி. சத் பொருளை நோக்கிப் போயிருப்பதென அது பொருள் படுகிறது. கடவுள் ஒருவரே சத்பொருள். மெய்ப்பொருள் என்பதும் சத்பொருள் என்பதும் ஒன்றே. நிலைமாறிப் போய்க்கொண்டிருக்கிற மனிதன் பெருநிலையினின்று வழுவிச் சிறுநிலைக்கு இறங்கிவிடுவதும் உண்டு. அப்படி இறங்குபவன் துன்மார்க்கத்தில் போகின்றவன் ஆகின்றான். முறையாகக் கடவுளை வணங்குபவர்கள் எல்லாம் சன்மார்க்கத்தில் போய்க்கொண்டிருக்கிறார்கள். கடவுளை மறந்து கீழ்மையில் புகுகின்றவர்கள் எல்லாம் துன்மார்க்கத்தில் போகின்றவர்களாகிறார்கள். இவ்விரண்டையும் தெளிவுபட தாயுமானவர் பிரித்துக் காட்டுகிறார். பிறகு தெய்வத்திடத்து தமது பணிவைத் தெரிவித்தல் பொருட்டும், தாம் தீவிரமாகப் பெருநெறியில் போகவில்லை என்பதை விண்ணப்பித்தல் பொருட்டும் சன்மார்க்க நெறியிலா துன்மார்க்கனேனையும் என்று முறையிடுகின்றார்.

மலையுச்சியிலிருந்து கீழே உருட்டப்பட்ட கல் திரும்பவும் உச்சிக்கு வந்துவிட முடியாது. கீழ்மையை நோக்கியே

அது உருண்டு போய்க்கொண்டிருக்கிறது. உயர் நிலையி லின்று தாழ்ந்த நிலைக்கு இறங்குகின்ற மனிதனுக்கு உய்வு இல்லையா என்னும் கேள்வி வருகிறது. அப்படிக் கீழ்மை யடையும் மனிதனுக்கும் உய்வு உண்டு. அந்த உய்வுக்குக் கடவுளுடைய அருளைப்பற்றிய உணர்வே உற்ற உபாய மாகிறது. சகோர பக்ஷி என்பது ஒன்று வானத்திலேயே வாழ்ந்திருக்கிறது என்னும் ஐதிகம் ஒன்று உண்டு. அது கீழ்நிலையில் பூமிக்கு இறங்குவதில்லை. மிக உயரத்தில் வானத்தில் வாழும் அது அங்கு முட்டையிடுகிறது. முட்டை பூமியின் ஆகர்ஷண வேகத்தால் கீழே விழுகிறது. அப்படி விழும் வேகத்தில் அது வெப்பம்பெற்று குஞ்சு உரு எடுத்து மேல் ஓட்டை உடைத்துக்கொண்டு வெளிவந்து விடுகிறது. பொரித்த பின்பும் அது கீழே விழுந்துகொண்டிருக்கிறது. அப்படி விழுகின்றபொழுது அதற்கு ஓர் உணர்வு வருகிறது. தனக்கு நிலையான இடம் வானத்தில் உயர இருக்கிறதென் றும், கீழே தரையில் தான் இறங்கிவிடலாகாதென்றும் அது மேல் நோக்கிப் பறந்து தன் யதாஸ்தானமாகிய வான வெளியைப் போய்ச் சேர்ந்துவிடுகிறது. அது போன்று ஜீவர்களாக ஆன்மாக்கள் மண்ணுலகுக்கு வந்திருப்பது இறங்கிய நிலை. கடவுளிடத்திருப்பது தங்களுக்குச் சொந்த மான நிலை. கீழ்நிலைக்கு வந்துள்ள தாம் இன்னும் கீழ்மை யில் போகின்றோமே என்று உணர்ந்து கடவுளிடத்து விண் ணப்பிக்கின்றபொழுது அவருக்கு அருள் சுரக்கின்றது. அந்த உயிரைக் காக்கவேண்டும் என்கிற கருணை அவருக்கு வந்துவிடுகிறது. எல்லாவிதமான இனிமையையும் அமைதி யையும் தரவல்லது அந்த அருள். தாகத்தை அடக்கவல்லது தண்ணீர். இறைவன்பால் உயிரை எடுத்துச் செல்ல வல்லது அந்த இறைவனுடைய தண் அருள். இறைவனுடைய

அருளும் உயிரினுடைய அருள் நாட்டமும் ஒன்று சேர்ந்து விட்டால் சகோரபக்ஷியின் குஞ்சு சகோர பக்ஷியிடத்தே போவது போன்று ஜீவாத்மன் பரமாத்மாவிடம் மேல் நோக்கிப் போக ஆரம்பித்து விடுகிறான். அந்நிலையில் அவன் ஆட்கொள்ளப் பெறுபவன் ஆகின்றான். சன்மார்க்கத்தின் விளைவே அப்பொழுது அவனுக்கு வந்துவிடுகிறது. ஜீவாத்மாக்கள் உய்வு அடைவதற்கு இது ஒன்றே உற்ற உபாயம். இக்கோட்பாட்டை உணர்ந்துள்ளதாயுமானவர் தண்ணருள் கொடுத்து ஆள்வையோ என்று பரிந்து கேட்கின்றார்.

சகோரபக்ஷி வானத்தில் உயர்ந்த நிலையிலேயே இருந்து விடுவதுபோன்று உடலெடுத்தவர்களுள் சிலர் உயர்ந்த நிலையிலேயே இருந்து விடுகின்றனர். பிரம்மா விடத்திருந்து உலகனைத்தும் தோன்றி வந்தபொழுது உயிர் வகைகளுள் நிவிருத்தி மார்க்கத்திலேயே நிலைபெற்றிருந்தவர்கள் நால்வர் பிரம்மாவுடைய மானச புத்திரர்களாகத் தோன்றினார்கள். அவர்கள் முறையே சனகன், சனந்தன், சனாதனன், சனத்குமாரன் என்று அழைக்கப்படுகிறார்கள். இப்பிரபஞ்ச நிலைக்கு அவர்களுடைய மனது எப்பொழுதும் இறங்கி வருவது கிடையாது. பாரமார்த்திக மகோன்னத நிலையிலேயே அவர்கள் யாண்டும் நிலைத்திருக்கிறார்கள். பாரமார்த்திக நிலை ஒன்றே பரிசுத்த நிலையும் ஆகிறது. துங்கம் என்னும் சொல் உயர்வையும் பரிசுத்தத்தையும் குறிக்கிறது. இந்த நால்வரிடத்தும் தூய்மையும் உயர்வும் எப்பொழுதுமே மிகுந்திருக்கின்றன. ஆத்மாக்கள் அடையக்கூடிய பக்குவம் எது என்பதற்கு எப்பொழுதுமே இந்த நால்வரும் நல்ல சான்றுகள் ஆகிறார்கள். கடவுள் நீக்கமற எங்கும் நிறைந்துள்ள பொருள். ஆதலால் உயிர்களாகிய நாம் எப்பொழுதும் கடவுளுடைய சன்னிதியிலேயே இருந்து

வருகிறோம். அப்படியிருந்தும் கடவுளுக்கும் நமக்கும் வெகு தூரம் எனத் தோன்றுகிறது. அத்தகைய தொலைவு இடத்தை முன்னிட்டு அல்ல; மனபரிபாகம் அடையாமையை முன்னிட்டே கடவுளுக்கும் நமக்கும் வெகுதூரமாகத் தோன்றுகிறது. முற்றும் பக்குவம் அடைந்துவிட்டால் கடவுளுக்கு அருகிலேயே நாம் இருப்பது நமக்குப் புலனாகும். மேலோர்க்குப் பக்கத்தில் வந்திருப்பவர்கள் எப்பொழுதும் மேன்மை பொருந்தியவர்களாக நடந்துகொள்வார்கள். மேலோர்களுள் எல்லாம் மேலோன் கடவுள். அவருடைய முன்னிலைக்கு வருகின்றவர்கள் மேன்மையனைத்தும் அடையப்பெற்றவர்களாக இருப்பார்கள். அத்தகையவர்கள் அமர்ந்திருக்கும் பாங்கிலேயே பெருமை ஒன்று உண்டு. பெருமை பொருந்திய பாங்கில் அமர்ந்திருப்பதை வீற்றிருத்தல் என்று இயம்புகிறோம். இக்கோட்பாடுகளை எல்லாம் தொகுத்தெடுத்து துங்கமிகு பக்குவச் சனகன் முதல் முனிவோர்கள் தொழுது அருகில் வீற்றிருப்ப என்கின்றார் தாயுமானவர்.

சனகன் முதலிய நால்வரும் சிவபெருமானுடைய முன்னிலையில் வீற்றிருக்கிறார்கள். சிவபெருமான் அவர்களை எப்படி வரவேற்கின்றார், அவர்களுடன் எத்தகைய இணக்கம் வைக்கின்றார் என்னும் கேள்வி எழக்கூடும். சிவபெருமான் அவர்களைக் கருணையோடு வரவேற்கின்றார். இணக்கங்களுள் எல்லாம் உயர்ந்த இணக்கத்தையும் அவர்களோடு வைக்கின்றார். சொல்லின் மூலம் விளக்கப் பெறுபவைகள் எல்லாம் இப்பிரபஞ்சத்தோடு சம்பந்தப்பட்டவைகளாம். எது சொல்லால் விளக்கப்படுகிறதோ அது காலத்திலும், இடத்திலும், செயலிலும் கட்டுப்பட்டதாகிறது. இம் மூன்றனுள் கட்டுப்படாது சொல்லையே கடந்து விடுகிறது சிவ

சொரூபம். காலத்திலும் இடத்திலும் செயலிலும் அது உட்பட்டதன்று. சிவ சன்னிதிக்குச் செல்லுதற்கேற்ற நெறியும் காலதேச வர்த்தமானத்தைக் கடந்தது ஆகிறது. உணர்வினுள் உயர்ந்த உணர்வைச் சொல்லால் விளக்க நமக்கு இயலாது போய்விடுகிறது. நெறிகளுள் மேலாம் நெறியை ஒரு சொல்லில் விளக்கலாம்; ஒரு சைகையால் விளக்கலாம்; அல்லது சொல்லையும் சைகையையும் கடந்த நிலையில் இருந்து காட்டி விளக்கலாம். தம்மை அணுகிய நல்லோர்க்குச் சிவபெருமான் அதைத்தான் செய்துகாட்டினார். அவர் தாமே மௌனமுற்றிருந்தார். மௌனமுற்ற நிலை ஒரு சொல்லில் அடங்குகிறது. பிறகு அந்த ஒரு சொல்லையும் கடந்ததாய்ப் போய்விடுகிறது. பரமன் பண்ணுவது அவ்வளவே. அதைச் சொல்லரிய நெறியை ஒரு சொல்லால் உணர்த்தியே என்கிறார் தாயுமானவர்.

ஆசிரியர் வியப்புக்குரியவர் என்றும், அவர் புகட்டுகிறதை அப்படியே ஏற்றுக்கொள்ளும் வல்லமை வாய்ந்தவர் சிஷ்யர்கள் என்றும் உபநிஷதங்கள் யாண்டும் முறையிடுகின்றன. இங்கு ஆசிரியர்களுக்கெல்லாம் பேராசிரியராக எழுந்தருளியிருப்பவர் சிவபெருமான். அவர் செய்தது மௌனோபதேசம். அதனால் வல்லமை வாய்ந்த சிஷ்யர்களாகிய நால்வரும் பெற்ற நலன் யாது என்னும் கேள்வி எழக்கூடும். சிவ சொரூபம் யாது என்பதை அவர்கள் அறிந்துகொண்டார்கள். சிவ சொரூபத்தை அறிந்துகொண்ட அதே வேளையில் தங்கள் சொரூபத்தையும் உள்ளபடி அவர்கள் அறிந்துகொண்டார்கள். உயிர்கள் எல்லாம் தங்கள் யதார்த்த சொரூபத்தை அறிந்துகொள்ளாது பிறவிப் பெருங்கடலில் தத்தளித்துக்கொண்டிருக்கின்றன. தங்கள் சொரூபத்தை அவர்கள் உள்ளபடி அறியும்பொழுது கடவுள் சொரூ

பத்தை அறிந்துவிடுகின்றனர். கடவுள் சொரூபத்தை உள்ளபடி அறிகின்றவர்கள் தங்கள் சொரூபம் அதுவே என்பதை அறிந்துகொள்ளுகின்றனர். உயர்ந்த தூய நிலைக்கு உயிர்கள் வருகின்றபொழுது தங்களின் சொரூப ஞானம் அவர்களுக்கு உண்டாய்விடுகிறது. அது வாசா ஞானம் அல்ல. சர்க்கரை தித்திப்பாய் இருக்கும் என்பதைக் காதால் கேட்பது வாசா ஞானம். சர்க்கரையைச் சுவைத்துப் பார்ப்பது அனுபூதி ஞானம். கடவுள் சொரூபத்தையும், உயர்ந்த தூய நிலையில் இருக்கிற உயிர்களின் சொரூபத்தையும் ஏட்டுக் கல்வியின் மூலமாக அறிந்துகொள்ளுதல் ஞானமாகாது. சுவானுபூதியில் உணர்வதே ஞானமாகிறது. அத்தகைய உணர்வு சிவசன்னிதிக்கு வந்தவுடனே அந்த நால்வருக்கும் வந்துவிட்டது. சிவன் செய்தது மௌனோபதேசம். தமது யதார்த்த நிலையில் இருக்கிறபடி அவர் இருந்து காட்டினர். வல்லமை வாய்ந்த சிஷ்யர்கள் நால்வருக்கும் சந்தேகங்கள் அனைத்தும் அப்பொழுதே அகன்றுபோய்விட்டன. சூரியன் முன்னிலையில் இருள் இல்லாது போய்விடுவது போன்று அஞ்ஞானத்தினின்று வரும் சந்தேகங்கள் எல்லாம் அகன்று போய்விட்டன. இக்கோட்பாட்டை சொரூப அனுபூதி காட்டி என்று அண்ணல் இயம்புகின்றார்.

இந்த நால்வர்க்கும் காட்சிகொடுத்த கடவுள் எப்படியிருந்தார் என்னும் கேள்வி எழக்கூடும். அதற்கும் விடை வருகிறது. செந்தாமரைப்பூப் போன்ற ஆசனம் ஒன்று ஒரு மேடையின்மீது அமைக்கப்பட்டிருந்தது. அந்த மேடை ஒரு கல்லால மரத்தடியில் இருந்தது. அத்தகைய ஆசனத்தின் மீது வீராசனம் போட்டவராகக் கடவுள் எழுந்தருளியிருந்தார். ஆல் வகைகளுள் கல்லால் என்பது ஒன்று. கடவுள் ஏன் அதனடியில் இருந்தார் என்னும் எண்ணம் நமக்கு

உண்டாகலாம். ஆலமரம் இயற்கையின் அமைப்புக்கு அறிகுறியாகிறது. ஆலமரத்தில் விழுதுகள் தோன்றியிருக்கின்றன. இந்த விழுதுகள் மேலே இருக்கும் கிளைகளில் சத்தை வாங்கிக்கொண்டு கீழே இறங்கி வருகின்றன. பூமிக்குள் இருக்கும் வேர்கள் சத்தை வாங்குவதற்கு மாறுன முறையில் விழுதுகள் சத்தை வாங்குகின்றன. பூமியின் கீழே சத்தை வாங்கி அதை மேலே எடுத்துச் செல்வது வேர்களின் இயல்பு. மேலே சத்தை வாங்கி கீழே கொண்டு வருவது விழுதுகளின் இயல்பு. விழுதை உடையது ஆலமரம். அந்த ஆலமரம் போன்றது இப்பிரபஞ்சம். மேலே பரமாத்மாவிடமிருந்து சத்தை வாங்கிக்கொண்டு பிரபஞ்சம் படிப்படியாகக் கீழே ஜடநிலைக்கு இறங்கி வருகிறது. ஆக; ஆலமரம் இயற்கைக்குச் சின்னமாக அமைந்துள்ளது. அதனடியிலே எம்பெருமான் எழுந்தருளியிருப்பது இயற்கை எதற்காக அமைந்துள்ளது என்பதை விளக்குகிறது. உலகனைத்தும் கடவுளின் சொரூபத்தை படிப்படியாக விளக்குதற்கும், கடவுளை உபாசித்து அவரை அடைவதற்கும் ஏதுவாக அமைந்துள்ளது. இக்கோட்பாட்டை செங்கமல பீடமேல் கல்லால் அடிக்குள் வளர் என்னும் சொல்லடுக்கில் அண்ணல் அமைத்து வைத்துள்ளார்.

பிரபஞ்சத்திலேயே பிரபஞ்ச மயமாகப் பரம்பொருள் எழுந்தருளியுள்ளார் என்னும் கோட்பாட்டை கல்லால மரம் குறித்துக் காட்டுகிறது. இங்கு வீற்றிருக்கும் தெய்வம் எதைப் புகட்டுகிருர்? பரிபக்குவம் அடைந்திருந்த நால்வர்க்குத் தமது சொரூபத்தையே விளக்கிவிட்டார். பேராசிரியர் ஒருவர் பக்குவம் அடைந்தவர்களுக்கும் பாடம் புகட்டவல்லவர்; பக்குவம் அடையாதவர்களுக்கும் அவர் நன்கு பாடம் புகட்டுகிருர். பக்குவம் அடையாத ஆத்மாக்களுக்கு அவர்

கள் கடைப்பிடிக்கவேண்டிய நெறியை விளக்கிக் காட்டு கிறார். ஓர் ஊரிலிருந்து மற்றோர் ஊருக்குப் போவதற்குப் பல பாதைகள் இருக்கின்றன. போக்குவரத்து சாதனங் களும் பல இருக்கின்றன. நீர்மீது கப்பலில் மிதந்து செல்ல லாம், தரையில் விதவிதமான வண்டி வாகனங்களில் ஊர்ந்து செல்லலாம், வானத்திலே விமானத்தில் பறந்து செல்லலாம். இத்தனை விதமான உபாயங்களுள் நமக்குப் பொருந்தியது எது என்று நாம் தீர்மானிக்கிற பொழுது நமக்கு உற்ற நெறியை நாம் சித்தாந்தப்படுத்தியவர் ஆகிறோம். சித்தாந் தப்படுத்துதல் என்பது முடிவு செய்தல் எனப் பொருள்படு கிறது. நெறி இன்னதென்று முடிவு செய்கின்றபொழுதே குறியைப் பற்றியும் முடிவு செய்கிறோம். உயிர் வகைகள் வாழ்வு என்னும் பெரும்பயணம் போய்க்கொண்டிருக்கின் றன. அப்பயணம் கடவுளை அடையும் பொழுது பூர்த்தி யாகிறது. கடவுளை அடைதலும் முக்தியடைவதும் ஒன்றே. உயிர்களுக்கும் இயற்கைக்கும் முதல் காரணமாய் இருப்பவர் கடவுள். இவை யாவுக்கும் பிறப்பிடம் அவர். இவை யாவுக்கும் புகலிடமும் அவர். எனவே இவை யாவுக்கும் அவர் முதல் ஆகிறார். இக்கருத்தை சித்தாந்த முத்தி முதலே என்று தாயுமானவர் பகர்கின்றார். இக் கருத்துக்கள் யாவையும் தொகுத்து மேற்கூறிய பாடலின் கண் தாயுமானவர் அமைத்து வைத்துப் பாடியிருக்கிறார்.



42-2

## சின்மயானந்த குரு - 2

ஆக்கையெனும் இடிகரையை மெய்யென்ற பாவிநான்
அத்துவித வாஞ்சையாதல்
அரியகொம் பில்தேனை முடவன் இச் சித்தபடி
ஆகும்அறி வவிழஇன்பந்
தாக்கும்வகை யேதிநாட் சரியைகிரி யாயோக
சாதனம் விடுத்ததெல்லாஞ்
சன்மார்க்க மல்லஇவை நிற்கஎன் மார்க்கங்கள்
சாராத பேரறிவதாய்
வாக்குமனம் அணுகாத பூரணப் பொருள்வந்து
வாய்க்கும் படிக்குபாயம்
வருவித் துவட்டாத பேரின்ப மானசுக
வாரியினை வாய்மடுத்துத்
தேக்கித் திளைக்கநீ முன்னிற்ப தென்றுகாண்
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிண மூர்த்தியே
சின்மயா னந்தகுருவே.

*ஜீவாத்மா குடியிருக்கும் இடத்துக்கு உடல் என்றும், தேகம் என்றும், சரீரம் என்றும், ஆக்கை என்றும், மெய் என்றும் பல பெயர்கள் இருக்கின்றன. உடலின் கூறு எத்தகையது என்பதை விளக்குதற்கே இப்பெயர்களில் பல அமைந்திருக்கின்றன. எது ஓயாது தகனமாய்க்கொண்டிருக்கிறதோ அது தேகம். எது இடையறாது ஜீரணமாய்க் கொண்டிருக்கிறதோ அது சரீரம். பல பொருள்களைக் கொண்டு ஆக்கப்பட்டது ஆக்கை. ஒரு காலத்தில் இருந்து இன்னொரு காலத்தில் இல்லாது போய் விடுவது பொய்*

யானது. உடல் காலமெல்லாம் இருப்பதன்று. காலக்கிரமத்தில் அது அடிபட்டுப் போய்விடுகிறது. ஆகவே அது பொய்யானது. எனினும் அதை மெய் என்று மொழிவது உபசாரத்துக்காகவேயாம். பொய்யான உடலை மெய் என்று பகர்வது அமங்களத்தினின்று மங்களத்தை உண்டு பண்ணுதல் பொருட்டேயாம். நிலையற்ற இவ்வுடலின் துணைகொண்டு நிலையாயுள்ள தெய்வத்தை அடையலாம். தெய்வம் என்னும் மெய்ப்பொருளை அடைதற்கு இவ்வுடலம் உபாயமாய் இருப்பதால் இதற்கும் மெய் என்னும் பெயர் வந்துள்ளது. அதற்கு நாம் வைத்திருக்கும் பெயர்கள் எத்தகையவையாயினும் உடலின் இயல்பை உள்ளபடி அறிந்து கொள்வது அவசியமாகிறது. அது இடையறாது மாறி அமைந்து கொண்டிருக்கிறது. உணவின் மூலம் புதிய பொருள்கள் உடலினிடத்துச் சேர்க்கப்படுகின்றன. வாழ்ந்திருத்தல் என்னும் செயலின் மூலம் அது ஓய்வின்றித் தேய்ந்துகொண்டு வருகிறது. ஒரு விதத்தில் அதை ஆற்றங் கரையோடு ஒப்பிடலாம். ஆற்றங்கரையில் வண்டலைக் கொண்டுவந்து பிரவாகம் சிலவேளைகளில் புதைத்து வைக்கிறது. வேறுசில வேளைகளில் அந்தக்கரையை அது இடையறாது இடித்துக்கொண்டே போகிறது. அப்படி அழிந்து பட்டுப்போம் நிலையிலிருக்கும் கரைக்கு இடிகரை என்னும் பெயர் வந்துள்ளது. இடிந்து கொண்டே இருக்கும் கரை என்பது அதன் பொருள். ஆற்றின் இடிகரைக்கு ஒப்பானது நம் உடல். உணவைக் கொடுத்து அதை நாம் பத்துப் போட்டுக் கொண்டிருக்கிறோம். ஆயினும் அதைக் காலம் தேய்த்துக் கொண்டே வருகிறது. நம் அமைப்பில் முற்றிலும் நிலையற்றது நம் உடலம் என்பதை நாம் நன்கு ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும். இவ்வுலக வாழ்க்கையில்

பெரும் பற்று வைத்திருக்கிறவர்கள் உடலையும் உறுதியாக நிலைத்திருக்கும் பொருள் என்று கருதுகின்றனர். ஆனால் ஆத்ம சாதகன் உடல் நிலையற்றது என்னும் எண்ணத்தில் உறுதிப்பெற்றவனாக இருக்கவேண்டும். உடலை நிலையானது என்று அவன் கருதுவானாகில் ஞான வாழ்க்கைக்கு அவன் தகுதியற்றவன் ஆய்விடுவான். மேலாம் நெறியினின்று கீழ்மைக்கு இறங்குகின்றவர்கள் எல்லோரும் பாவிகள் ஆய் விடுகின்றனர். நிலையற்ற உடலை நிலையானது என்று கருதும் ஆத்மசாதகன் பாபியாய் விடுகிறான். இக்கோட்பாட்டை **ஆக்கையெனும் இடிகரையை மெய்யென்ற பாவி நான்** என்று தாயுமானவர் பகர்கின்றார்.

ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் இடையிலுள்ள இணக்கம் மூன்று படித்தரங்களில் அமைந்திருக்கிறது. ஜீவாத்மாவைப் பரமாத்மாவுக்கு அந்நியமாகக் கருதுவது துவைதம். ஜீவாத்மாவைப் பரமாத்மாவின் ஓர் அம்சமாகக் கருதுவது விசிஷ்டாத்வைதம். பரமாத்மா ஒருவர்தான் இருக்கிறார். அவர் பல ஜீவாத்மாக்களாகத் தோற்றத்தளவில் தம்மைக் காட்டிக் கொண்டிருக்கின்றார். அவருக்கு அந்நியமாக இரண்டாவது பொருள் இல்லை என்னும் கோட்பாட்டுக்கு அத்துவிதம் என்று பெயர். இந்த மூன்றுவித மதங்களுக்கு ஏற்ற ஆத்ம சாதனங்கள் இருக்கின்றன. கடவுளை ஆண்டானாகவும் ஜீவனை அவனுடைய அடிமையாகவும் கருதுவது துவைதமத சாதனம். கடவுளின் அவயவமாக ஜீவனைக் கருதுவது விசிஷ்டாத்வைதமத அனுஷ்டானமாகும். ஜீவபோதத்தை முற்றிலும் கரைத்துவிடுவது அத்வைதமத அனுஷ்டானமாகும். இன்னும் தேக உணர்வில் ஊன்றியிருப்பவனுக்கு துவைதமத அனுஷ்டானமே முற்றிலும் பொருத்தமானது. தேக உணர்வைத்

தாண்டும் தறுவாயில் இருப்பவனுக்கு விசிஷ்டாத்வைத மத அனுஷ்டானம் பொருந்தும். தேகாத்ம புத்தி அல்லது தேகத்தைத் தான் என்று கருதுகின்ற உணர்ச்சி அத்வைத அனுஷ்டானத்துக்குச் சிறிதும் ஒவ்வாது. சுகப்பிரம்மம், சங்கரர் போன்றவர்கள் சின்னஞ்சிறு வயதிலிருந்தே உடல் உணர்வுக்கு அப்பாற்பட்ட நிலையில் இருந்தார்கள். அத்வைத அனுஷ்டானத்துக்கு அத்தகையவர்களே தகுதியுடையவர்கள் ஆகின்றார்கள். அதற்கு மாறாக உடல் உணர்வில் அழுந்திக் கிடக்கின்ற சாதகன் ஒருவன் அத்வைத வேதாந்தத்தை அனுஷ்டிக்க முயன்றால் அதனால் அவன் சிறிதேனும் முன்னேற்றம் அடைய முடியாது. பல தடவைகளில் அது அவனுக்குக் கேடாய் முடிந்துவிடுவதும் உண்டு. கையில்லாதவன் முடவன். மரம் ஏறுவதற்கு கைகால் ஆகிய இரண்டு வித உறுப்புகளும் இன்றியமையாதவைகள். மரக்கொம்பிலிருக்கும் தேனை எடுக்க முயலுகின்றவனுக்கு திடகாத்திரம் வேண்டும். முடவன் ஒருவன் அதைப்பெற வாஞ்சை கொள்வானாகில் அது பொருளற்ற ஆசையாய் விடுகிறது. இக்கோட்பாட்டை அத்துவித வாஞ்சையாதல் அரிய கொம்பில் தேனை முடவன் இச்சித்தபடி ஆகும் என்று அவர் இயம்புகின்றார்.

அறிவு அவிழ்தல் என்னும் செயல் இரண்டுவித வடிவெடுக்கிறது. கட்டுகளைத் தளர்த்தி விடுதற்கு அவிழ்த்தல் என்னும் சொல்லைக் கையாளுகிறோம். நமது அறிவு ஒரு விதத்தில் நம்மைக் கட்டிப் பிடித்திருக்கிறது. உடலை 'நாம்' என்று நாம் எண்ணி வருகிறோம். இப்படி எண்ணுதற்கு அறிவு வேண்டியவாறு இடம் தருகிறது. தளைகளில் மிகக் கொடிய தளை தன்னைத் தேகம் என்று எண்ணிக்கொள்ளுதலாம். தேகத்தைத் தான் என்று எண்ணுபவனுக்கு

அத்துவித நிலை ஒருநாளும் எட்டாது என்பது ஏற்கனவே ஆராயப்பட்டது. தேகத்தைத் தான் என்று எண்ணுபவன் தொடர்ந்து வேறு பல எண்ணங்களிலும் தன்னைத் தளைத்துக் கொள்கிறான். தேகம் எந்த ஊரில் பிறந்து வளர்ந்ததோ அந்த ஊரைத் தனக்குச் சொந்தமானது என்று மனிதன் பந்தத்தை உண்டுபண்ணிக் கொள்கிறான். உடலின்கண் உள்ள இளமை, முதுமை, நோய் முதலியன தன்னை வந்து சார்ந்துள்ள நிலைகள் என்னும் மயக்கம் மனிதனுக்கு வந்துவிடுகிறது. உடலுக்குரிய நிறம், இனம் முதலியவைகள் ஆத்மாவாகிய தனக்குரியவைகள் என்று மனிதன் எண்ணுகிறான். இத்தனை விதமான தளைகளை அறிவு உண்டுபண்ணுகிறது. இத்தளைகளினின்று விடுதலை யடைவது குறிக்கோள். வானத்தினின்று தூயதாகத் தரையில் வந்து விழுகின்ற தண்ணீர் ஒவ்வோர் இடத்தி லும் ஒரு புதிய உபாதியைப் பெற்றுவிடுகிறது. ஆற்றுநீர், சேற்றுநீர், கிணற்றுநீர், கடல் நீர், சாக்கடை நீர் இப்படி யெல்லாம் இடபேதத்தை முன்னிட்டு அதற்கு பெயர்கள் வந்துவிடுகின்றன. திரும்பவும் அதைத் தூயநீர் ஆக்கு தற்கு அதை உருக்கி ஆவியாக மாற்றி, திரும்பவும் நீராக உறையும்படிச் செய்தால் இத்தனைவித உபாதிகளினின்று நீர் விடுதலையடைந்து நன்னீர் ஆகிறது. அவிழ்தல் என்னும் சொல்லுக்கு இளகுதல் என்ற பொருள் ஒன்று உண்டு. ஆத்ம சாதகனுடைய அறிவு பெரிதும் இளகவேண்டும். இள கிய பின்பு அதைப் பிடித்துள்ள பொருளற்ற பல எண்ணங் களை அவ் அறிவினின்று போக்கிவிடலாம். ஊரும் பேரும் இனமும் உற்றாரும் உறவினரும் தனக்குரியதென்று எண்ணி யிருந்த அறிவு இளகிவிடுகின்றபொழுது இந்த எண்ணங் கள் எல்லாம் அதைவிட்டு அகன்று போய்விடுகின்றன.

பூமியில் படிந்து கெட்டுப்போயிருந்த நீர் நன்னீர் ஆவது போன்று அறிவு இளகி தூய அறிவு ஆகுங்கால் அது ஆனந்த சொரூபமாகவும் மாறிவிடுகிறது. அறிவு தூயதாகின்ற அளவு அது ஆனந்தமே வடிவெடுத்தது என்பதும் வெளியாகும். அழுக்குப்படிந்த அறிவு துன்பத்தை வருவித்துக் கொள்கிறது. தூய அறிவு ஆனந்த சொரூபமாக இலங்குகிறது. அறிவைத் தூய அறிவாகத் துலக்குதலே ஆத்ம சாதனமாகிறது. அதற்கு உற்ற உபாயங்கள் பல இருக்கின்றன. எந்தச் சாதகனுக்கு எந்த உபாயம் முற்றிலும் பொருத்தமானதென்பதை அவன் அறிந்துகொள்ளவேண்டும். வெவ்வேறு வகைப்பட்ட நீர்களை நன்னீர் ஆக்குதற்கு வெவ்வேறு உபாயங்கள் இருக்கின்றன. மனிதனுடைய அறிவைத் தாக்கியிருக்கும் விதவிதமான உபாதிகளை அகற்றுதற்கு வெவ்வேறு சாதனங்கள் இருக்கின்றன. அவைகளைக் குறித்து அறிவு அவிழ இன்பம் தாக்கும் வகை ஏது என்று தாயுமானவர் வினவுகின்றார்.

ஆத்ம சாதனங்கள் எவை என்பதைக் குறித்துச் சான்றோர்கள் ஏற்கனவே பாகுபடுத்தி வைத்துள்ளார்கள். அவைகளைப்பற்றிக் கேட்கவும் கையாளவும் பலர் முன்வருகின்றனர். அப்படியெல்லாம் செய்தும் சாதகர்களில் பல பேர் முன்னேற்றமடையாது பழைய கீழ்நிலையிலேயே நின்றுவிடுகின்றனர். அதற்குக் காரணம் யாது என்பதைத் துருவி ஆராய்ந்து பார்த்தால் உண்மை விளங்கும். இரண்டொரு சான்றுகளை எடுத்துக்கொள்வோம். ஆலயம் தொழுவது சாலவும் நன்று என்னும் கோட்பாடு பிறந்துள்ளது. ஆனால் தொழுவதற்கு ஆலயம் செல்லுபவர்களில் சிலர் சாதனத்தில் முன்னேற்றம் அடைவதற்கு மாறாக பிற்போக்கில் போய்விடுகின்றனர். வழிபாட்டின் மூலமாக அறிவைப்

பண்படுத்துதற்குப் பதிலாக அன்னவர்கள் எளிதில் இக லோக வாய்ப்புக்களைப் பெற்றுவிட இறைவனுடைய துணையை நாடுகின்றனர். தாங்கள் எதற்குத் தகுதியற்ற வர்களாய் இருக்கின்றார்களோ அதைத் தங்களுக்குத் தந்தரு ளும்படி இறைவனிடம் வேண்டுகின்றனர். இத்தகைய வேண்டுதலால் அறிவு மேலும் மழுங்கிவிடுகிறது; பந்தபாசம் அதிகரிக்கிறது. ஓயாது ஆலய வழிபாடே செய்துகொண் டிருக்கும் அர்ச்சகர்களில் பலர் மனநிலையில் மிகமிகக் கீழ்மை யுற்றிருப்பதைக் காணலாம்.வழிபாட்டை வெறும் ஜீவனோபா யத்துக்காகவென்று முறைதவறிக் கையாண்டதே அவர்கள் அடைந்த கீழ்மைக்குக் காரணமாகும். சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய நான்கும் மேலோர்களால் அங்கீ கரிக்கப்பட்டுள்ள நல்ல ஆத்ம சாதனங்களாகும். நல் லொழுக்கமே வடிவெடுத்திருப்பது சரியையாகும். நல்ல ஆசாரம் சரியையில் அடங்குகிறது. ஒருவன் நித்தமும் நீராடி நெற்றியில் ஏதோ அணிந்து அங்கீகரிக்கப்பட்டுள்ள சில அனுஷ்டானங்களை யந்திரம் போன்று ஒழுங்காகச் செய்து வருகின்றான். அதற்கிடையில் அப்படி அவ் அனுஷ் டானங்களைச் செய்யாதவர்களைவிட தான் மிக மேலானவன் என்று அவன் அகங்கரித்துக் கொள்கின்றான். எனவே சரியை என்னும் ஆத்ம சாதனத்தில் அவன் நலன் ஒன்றும் அடைந்தவன் அல்லன். ஆண்டவனுக்கும் ஆருயிர்களுக்கும் பணிவிடை பண்ணுவது கிரியை. அதைப் பணிவுடன் பண்ணவேண்டும். சிலர் தற்பெருமைக்காக என்று கிரியை புரிகின்றனர். அத்தகையவர்க்கு அந்தச் சாதனம் நலன் ஒன்றும் செய்வதில்லை. யோகம் இறைவனை அடைவ தற்கு உற்ற உபாயம். பின்பு யோக சாதனங்கள் சில சித்தியை உண்டுபண்ணுகின்றன. சித்தியில் மயங்கி விடு

கின்றவர்கள் இறைவனுடைய அருளுக்குப் புறம்பாய்விடு கின்றனர். இங்ஙனம் ஆத்ம சாதனங்களை நல்ல மனப் பான்மையுடன் செய்யாவிட்டால் அவைகளினின்று நலன் ஒன்றும் வருவதில்லை. அறிவு ஆனது முறையாக அவிழ்ந்து போகாததே அதற்குக் காரணமாகும். இறைவன்பால் இந்தச் சாதனங்கள் மனிதனை எடுத்துச் செல்லுவதால் இவைகளுக்குச் சன்மார்க்கம் என்றுபெயர் வந்துள்ளது. கடவுள் சத்பொருள். மெய்ப்பொருள் என்பது அதன் விளக்கம். சத்பொருளிடத்து எடுத்துச் செல்லும் வழிக்கு சன்மார்க்கம் என்னும் பெயர் வந்துள்ளது. விவேகத் தோடும், பக்தியோடும், பணிவோடும் கூடிய நெறிமுறை யோடு செய்யாத சாதனம் நெடுநாளாக நடைபெற்றுக் கொண்டிருந்தாலும் அது நிஷ்பிரயோஜனமாய்ப் போய்விடு கிறது. இக்கோட்பாட்டை நாள் சரியை கிரியா யோக சாதனம் விடுத்ததெல்லாம் சன்மார்க்கமல்ல என்று நெறி வழுவிய சாதனங்களைத் தாயுமானவர் விமர்சனம் செய் கின்றார்.

மார்க்கம் என்பதற்கு வழி அல்லது நெறி என்பது பொருள். வழியில் செல்லுகிறவன் விரும்புகிற இடத்தைப் போய்ச் சேருகிறான். சேரும் இடமே அவன் கொண்டுள்ள குறி ஆகும். நெறியைப் பின்பற்றுபவன் குறியை அடை கிறான். பின்பு நெறியே குறியாய் விடாது. அதாவது நடந்துகொண்டே இருப்பது வாழ்வின் நோக்கமல்ல; நாடிய இடத்தைப் போய்ச் சேருவதே நோக்கமாகும். கடவுளை அடைவது பெருவாழ்வின் நோக்கமாகும். அக் கடவுள் எத்தகையவர் என்னும் கேள்வி அடுத்தபடியாக எழுகிறது. அவர் பேரறிவு சொரூபம். பேரறிவுப் பொருள் எங்கே இருக்கிறது என்னும் கேள்வி அடுத்தபடியாய்

வருகிறது. பேரறிவு வடிவினனாகிய பெம்மானுக்கு போக்கு இல்லை, வரவு இல்லை, புணர்வு இல்லை. நீக்கமற அவரே எங்கும் நிறைந்துள்ளார். எனவே பரம்பொருளை அடைதற்குப் பயணம் போதல் என்னும் செயல் புரியவேண்டியதில்லை. இருந்தபடி இருந்த இடத்தில் இறைவனை உணரலாம். அலை எங்ஙனம் சர்வகாலமும் கடலிலேயே இருக்கிறதோ அங்ஙனம் ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் பிரிக்கமுடியாத தொடர்வு இருந்து வருகிறது. அலையானது தன் வடிவத்தைக் கலைத்து விட்டால் கடல் மயமாய் விடுகிறது. ஜீவாத்மன் தன்னுடைய ஜீவபோதத்தைக் கலைத்து விட்டால் பரபோதம் எஞ்சியிருக்கிறது. ஜீவனாக இருக்கின்ற பொழுதும் ஜீவபோதத்தைக் கலைத்தபொழுதும் பரமாத்மாவுக்கு அன்னியமானவனாக ஜீவாத்மன் எப்பொழுதாவது இருந்தது கிடையாது. இக் கோட்பாட்டை அடிப்படையாகக் கொண்டே ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் உள்ள இணக்கத்தை அஸ்பர்ச யோகம் என்று சாஸ்திரம் இயம்புகிறது. சென்றடையாத இணக்கம் என அது பொருள்படுகிறது. பிறரைப் பார்ப்பதற்கு நாம் புறப்பட்டுப் போகிறோம்; பேட்டிக்காகக் காத்திருக்கிறோம். தன்னைத்தானே உணர்தற்கு எங்கும் போக வேண்டியதில்லை. வசதியான வேளை வரவேண்டுமென்று காத்திருக்க வேண்டிய அவசியமுமில்லை. தன் அறிவுக்கு அறிவாய் இருக்கும் பேரறிவின்கண் தன்னைப் பொருந்தப் பண்ணுதல் அதை விட மிக எளியது ஆகிறது. அதாவது பரமாத்மா போதத்தைப் பெறுவதை விட மிக எளியது ஜீவாத்மனுக்கு வேறு ஒன்றுமில்லை. அதற்குச் சாதனங்கள் பல புரிதல் என்பது உண்மையன்று. மனதைப் பக்குவப் படுத்துதற்கே சாதனங்கள் பல அமைந்துள்ளன. பரம்

பொருளை அடைதல் எண்ணிய மாத்திரத்தில் நல்லறிவு படைத்தவனுக்குக் கைகூடி விடுகிறது. இக்கோட்பாட்டை இவை நிற்க என் மார்க்கங்கள் சாராத பேரறிவதாய் என்று தாயுமானவர் இயம்புகின்றார்.

நகைகள் எத்தனைவிதமாக அமைந்திருப்பினும் அவை யாவும் பொன்னால் செய்யப்பட்டவைகள். பொன் இன்னதென்று பகருமிடத்து நகைகளுக்கு மூலப்பொருள் விளக்கம் பெறுவதாகிறது. அதே பாங்கில் பேரறிவாய் இருக்கின்ற பெரிய பொருளே பூரணப்பொருள் என்று இயம்பப்படுகிறது. அப்படி இயம்புகின்ற இடத்து அதை உண்மையில் நாம் விளக்கி விட்டோமா என்னும் கேள்வி எழுகிறது. ஜீவர்களாகிய நமக்கு மூலகாரணமாய் இருக்கும் பூரணப் பொருளை வாக்கால் விளக்கவும் முடியாது; மனதால் கிரகிக்கவும் முடியாது. எதையெல்லாம் மனது கிரகிக்கிறதோ அது பிரபஞ்சத்தைச் சார்ந்தது. மனது கிரகிக்கிற அறிவும் ஆனந்தமும் அந்த மனதோடு கலந்த ஆத்ம சொரூபம். பாத்திரத்துக்குள்ளிருக்கும் நீருக்கும் அரிசிக்கும் அடுப்பிலிருக்கும் அக்கினியின் உஷ்ணம் எட்டுகிறது. அவ் உஷ்ணத்தை ஏற்று நீரும் அரிசியும் கொதிக்கின்றன. கொதிக்கின்ற இவ்வஸ்துக்களின் மூலம் அக்னியின் உஷ்ணத்தை ஒருவாறு நாம் உணர்ந்து கொள்கிறோம். உண்மையில் அக்னி இந்த நீரோடும் அரிசியோடும் சம்பந்தப்படாத தனி பூதமாகிறது. அதே விதத்தில் பரமாத்மாவின் பேரறிவு மனதோடு கலந்து வருகிறபொழுது நாம் படைத்துள்ள அறிவு ஆகிறது. அதை வாக்கால் எடுத்து விளக்குகிறோம். இந்த மனமும் வாக்கும் அற்ற நிலையிலேயே பூரணப்பொருள் முற்றிலும் தன்மயமாய் இருக்கிறது. இந்த மனமும் வாக்கும் நமக்கு உற்றவைகளாய் இருக்கின்றபொழுது இவைகள் மூலம் உணரப்படு

கின்ற அறிவு மூல அறிவின் தோற்றமேயாம். மூல அறிவு யாண்டும் வாக்குக்கும் மனதுக்கும் எட்டாதது. இக்கோட்பாட்டை வாக்கு மனம் அணுகாத பூரணப்பொருள் வந்து வாய்க்கும்படிக்கு உபாயம் வருவித்து என்கின்றார் தாயுமானவர்.

வந்து வாய்த்தல் என்னும் கோட்பாடு பெயரளவிலேயாம். மனம் ஒடுங்கிய விடத்துப் பூரணப்பொருள் உள்ளபடி இருக்கிறது. அந்த முழு உணர்வு மனதற்ற நிலையாய் விடுவதால் மனம் அற்றுப் போவதற்குப் பரபோதம் வந்து வாய்த்தல் என்று மொழியின் மூலம் பகரப்படுகிறது. இப்படிப் பரபோதம் வந்து வாய்ப்பதற்கு எடுத்துக்கொள்ள வேண்டிய உபாயம் யாது என்னும் கேள்வி வருகிறது. சாதனங்கள் பல புரிந்து மனதைத் தூயதாக்குகின்றோம். தூய மனது ஒடுங்கிப்போய் மனதற்ற நிலையாய் மாறிவிடுவது மிக எளிது. ஆக, ஆத்ம சாதகர்கள் கையாளும் சாதனங்கள் அனைத்தும் மனதை மாய்த்துவிடுதற் பொருட்டேயாம். மனது ஒடுங்கியும் ஒடுங்காதும் இருக்கின்ற நிலை ஒன்று உண்டு. அதை ஒரு உபமானத்தைக்கொண்டு விளக்கலாம். தூய மனது சுத்தமான கண்ணாடியைப் போன்றது. சுத்தமான கண்ணாடியின் வாயிலாக அப்புறம் இருக்கிற பொருளை உள்ளபடி காணமுடியும். கண்ணாடியின்மீது தூசி படிந்துவிட்டால் அப்பால் உள்ள பொருளை உள்ளபடி காண முடியாது. கண்ணாடியை உடைத்தெறிந்துவிட்டால் அப்பால் உள்ள வெட்ட வெளி தன்மயமாய் எஞ்சியிருக்கிறது. ஜீவன் ஒருவன் தன் மனதை அறவே ஒடுக்கிவிட்டால் அலையும் கடலும் ஒன்றுவது போன்று ஜீவனும் பரமாத்மாவும் யாண்டும் உள்ளபடி ஒன்றாய் விடுகின்றன. மனது அற்றுப்போன தறுவாயில் அந்தத் தூய மனதைக்கொண்டே அனுபவிக்

கின்ற இன்பத்துக்குத் தெவிட்டாத பேரின்பம் என்று பெயர். அது இன்பத்தைத் தருகின்ற நல்ல நீர் என்று சொல்லுவது உலக வழக்கை முன்னிட்டேயாம். தாகத்தில் தவித்திருப்பவனுக்கு நல்ல நீர் ஒரு சுகத்தைத் தருகிறது. அதை அவன் வாயில் வைத்து அருந்துகின்றான். தாகம் அடங்கும் வரையில் வேண்டியவாறு ஏராளமாகவும் அருந்துகிறான். அருந்துதல் மூலம் தாக சாந்தியையும் திருப்தியையும் அவன் அனுபவிக்கிறான். தாகம் எடுத்திருப்பவனுக்கு நல்ல நீர் கைக்கு அகப்படுகின்றபொழுது, அதை அவன் எடுத்துப் பருகுகின்றபொழுது இத்தகைய அனுபவம் அவனுக்கு வருகிறது. ஆத்ம சாதகனோ பரம்பொருளில் கலந்திருத்தல் என்னும் நாட்டம் கொண்டவனாய் இருக்கிறான். நல்ல மனம் அடையப்பெற்றான பிறகு அப் பரம்பொருள் முற்றிலும் தனக்குரியது, தான் அப் பரம்பொருளுக்கு உரியவன் என்பதை நன்கு அறிந்துகொள்கின்றான். பரம்பொருளே தன் உயிர்க்குயிராய் உள்ளிருப்பதையும், தன் நண்பர்களில் எல்லாம் தலையாய நண்பனாகத் தன்முன் நிற்பதையும் காண்கின்றான். இதற்காகத்தான் பல பிறவிகளில் அவன் சாதனங்கள் புரிந்து வந்திருக்கின்றான். இப்பொழுது சாதனம் சாத்தியமாய்க்கொண்டு வருகிறபொழுது பேரின்ப அனுபவம் தானாக முன்வந்து நிற்கிறது. அது முன்வந்து நிற்கின்ற நாளை நல்ல நாள் என்று சொல்லவேண்டும். அது என்றைக்கு வருமோ என்று சாதகன் ஏக்கம் பிடித்தவனாக இருக்கின்றான். இக்கோட்பாடுகளையெல்லாம் **தொகுத்தெடுத்து உவட்டாத பேரின்பமான சுகவாரியினை வாய்மடுத்துத் தேக்கித் திளைக்க நீ முன்னிற்பது என்று காண்** என்று தாயுமானவர் வியப்புறுகின்றார். உவட்டாத பேரின்பம் என்பது தெவிட்டிப் போகாத பரமானந்தம் எனப்

பொருள்படுகிறது. பஞ்சேந்திரியங்களுக்கு விஷயமாகின்ற இன்பங்கள் தெவிட்டிப் போய்விடுகின்றன. இந்திரியங் களுக்கும் மனதுக்கும் அப்பால் இருக்கின்ற பேரின்பமோ தெவிட்டாதது. சுகவாரி என்பது இன்பத்தை விளைவிக்கும் நன்னீர் எனப் பொருள்படுகிறது. வாய் மடுத்தல் என்ருல் வாயில் வைத்து அருந்த ஆரம்பிப்பது எனப் பொருள்படு கிறது. தேக்கித் திளைத்தல் என்பது நிறைய அனுபவித்தல் எனப் பொருள்படுகிறது. சித்தம் என்பது மனம் புத்தி ஆகிய அந்தக்கரணத்துக்கு அமைந்துள்ள மற்ெருரு பெயர் ஆகும். சித்தத்தின் அந்தம் சித்தாந்தம். அது மனதற்ற நிலை. அந்தக்கரணங்கள் யாவும் ஒடுங்கியநிலை அது. அந்தக்கரணங்கள் அகன்று போய்விடுமிடத்து ஜீவ னுக்கு முக்தி அல்லது விடுதலை கிட்டிவிடுகிறது. மனதி னின்று விடுதலையடைதலே உண்மையான முக்தி. மனிதனைப் பந்தப்படுத்தியது மனது. அம்மனதை அகற்றிவிடுகிற இடத்து பந்தங்களிலிருந்து மனிதன் முக்தியடைகின்ருன். இவை யாவையும் தொகுத்து அவர் மேற் கூறிய பாடலில் படம்பிடித்துக் காட்டியிருக்கிருர்.

---

## சின்மயானந்த குரு - 3

அவ்விய மிருக்கநா னென்கின்ற ஆணவம்
அடைந்திட் டிருக்கலோபம்
அருளின்மை கூடக் கலந்துள் ளிருக்கமேல்
ஆசா பிசாசமுதலாம்
வெவ்விய குணம்பல இருக்கஎன் னறிவூடு
மெய்யன்நீ வீற்றிருக்க
விதியில்லை என்னிலோ பூரண னெனும்பெயர்
விரிக்கிலுரை வேறுமுளதோ
கவ்வுமல மாகின்ற நாகபா சத்தினால்
கட்டுண்ட உயிர்கள்மூர்ச்சை
கடிதகல வலியவரு ஞானசஞ் சீவியே
கதியான பூமிநடுவுட்
செவ்விதின் வளர்ந்தோங்கு திவ்யகுண மேருவே
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிண மூர்த்தியே
சின்மயா னந்தகுருவே.

ஒழுக்கத்திற்கும் ஈசுவர சாக்ஷாத்காரத்திற்கும் இடையில் என்ன இணக்கம் இருக்கிறதென்பதைத் தெரிந்துகொள்ளவேண்டும். ஒழுக்கம் தன்னளவில் ஈசுவர சாக்ஷாத்காரம் ஆகாது. ஒழுக்கத்தினின்று நேரே கடவுளைப்பற்றிய ஞானமும் உண்டாவதில்லை. ஆயினும் ஒழுக்கம் இல்லாதவர்களுக்குக் கடவுளின் காட்சி ஒருபொழுதும் கிட்டாது. கடவுளை அடைதற்குத் தன்னைப் பக்குவப்படுத்துதற்கு ஒழுக்கம் பயன்படுகிறது. ஒழுக்கத்தில் நிலைநிற்குமளவு

ஈசுவரநாட்டத்துக்கு மனிதன் தன்னைப் பக்குவப்படுத்திக் கொண்டு வருகிறான்.

கூடா ஒழுக்கங்களில் ஒன்று அவ்வியம். பொறாமை என்பது அதன் பொருள். அவ்வியம் பேசேல் என்னும் கோட்பாடு பிறந்துள்ளது. பொறாமையை அடிப்படையாகக் கொண்டுள்ள சொற்களைச் சொல்லவேண்டாம் என்பது அதன் கருத்து. சிந்தித்தல், சொல்லுதல், செய்தல் என்பன திரிகரணங்களின் செயல்கள். மூன்று கரணங்களுள் ஒரு கரணம் எச்செயலில் ஈடுபடுகிறதோ அச்செயலை மறைமுகமாக மற்ற இரண்டு கரணங்களும் செய்கின்றன. பொறாமையினின்று வருகிற சொற்களைப் பேசாது ஒழித்தல் வேண்டும் என்னும் கோட்பாட்டில் பொறாமைப்படுகிற மனப்பான்மை இருக்கலாகாது என்பதும், அதினின்று வருகின்ற செயலைச் செய்யாது ஒழித்தல் வேண்டும் என்பதும் அடங்கி விடுகின்றன. பிறர் அடைகிற முன்னேற்றத்தைப் பார்த்துச் சகிக்க முடியாத நிலைக்குப் பொறாமை என்று பெயர். உயிர்களனைத்தும் முன்னேற்றம் அடைய வேண்டுமென்பதே படைப்பின் நோக்கமாகும். மற்ற உயிர்கள் அடைகிற முன்னேற்றத்தைப் பார்த்துப் பொறுக்க முடியாதவன் படைப்பின் நோக்கமே நிறைவேறலாகாது என்று அதைத் தடைப்படுத்தும் பாங்குடையவன் ஆகிறான். மனிதனால் இயற்கையின் நடைமுறையைத் தடுக்கமுடியாது. எப்படியும் அது நிறைவேறிவிடும். ஏனென்றால் இயற்கையின் நடைமுறையே ஈசன் செயல். அதைத் தடுக்க அல்லது மாற்ற யாருக்கு இயலும்? பொறாமைப்படுகிற மனிதன் உண்மையில் மற்றவர்களுடைய முன்னேற்றத்தைத் தடைப்படுத்துபவன் அல்லன்; பொறாமைப்படுதல் மூலம் தன்னுடைய முன்னேற்றத்தையே அவன் தடுத்துவிடுகிறான். மற்ற

வர்களுக்கு மனிதன் எதை எடுத்து வழங்குகின்றானோ அது தன்னுடையதாகிறது என்பது வாழ்க்கையைப் பற்றிய ஒரு தத்துவம். பிறர் முன்னேற்றத்துக்குத் துணைபுரிகிறவன் தானே முன்னேற்றமடைகிறான். பிறர் முன்னேற்றத்துக்குத் தடை செய்ய முயலுகின்றவன் தானே தடுமாற்றம் அடைகின்றான். ஆகவே பிறருடைய ஆக்கத்தைக் கண்டு பொறாமைப்படுபவன் தனக்கு ஆக்கம் வந்து அமையாது அதை அடைத்து விடுபவன் ஆகிறான். பொறை என்பதின் எதிரிடை பொறாமை. மனிதனுக்கு வெறும் பொறை இருந்தால் மட்டும் போதாது. பிறர் அடைகின்ற பேற்றினைப் பார்த்துப் பெருமகிழ்ச்சி அடையவேண்டும். அவர்கள் அடைகிற பேறுகள் அனைத்துக்கும் பெருந்துணை புரியவேண்டும். யார் ஒருவன் அத்தகைய பரந்த பாங்குடையவன் ஆகின்றானோ அவனுக்கு எல்லாவிதமான முன்னேற்றமும் உண்டு. அவன் மனத்துக்கண் மாசு இலன் ஆவதற்கும், மனம் மேன்மையடைவதற்கும், பிறர் முன்னேற்றத்துக்கு மகிழ்வோடு தொண்டுபுரிவதே உற்ற உபாயம். அவ்வியம் அதற்கு நேர் மாறானது. எங்கு அவ்வியம் இருக்கிறதோ ஆங்கு ஒருவிதமான முன்னேற்றமும் இல்லை. மனிதன் மேலும் மேலும் சிறுமை அடைவதே அதன் விளைவு ஆகும். தம்மிடம் அத்தகைய அவ்வியமிருக்க என்று மனத்தகத்துப் படிந்துள்ள தமது கீழான நிலையைத் தாயுமானவர் படம் பிடித்துக் காட்டுகிறார்.

ஆணவம் என்பது அகங்காரத்தின் புறத்தோற்றம். படாடோபமான வாழ்வு பணம் படைத்திருப்பதின் முறை தவறிய வெளித் தோற்றமாய் இருப்பது போன்று ஆணவமலம் ஒரு மனிதனிடத்துள்ள அக்ஞான நிலையை விளக்குகிறது. ஒவ்வோர் உயிரும் 'நான்' என்னும் கோட்பாட்டின்

மூலம் தன்னைத் தானே விளக்க முயலுகிறது. நான் என்பதற்கு இலக்காக உள்ள பொருள் யாது என்று பரிசீலனை செய்து பார்க்கவேண்டும். முறையாக ஆராய்ந்து பார்க்குமிடத்து நான் என்னும் சொல்லுக்கு இலக்காக ஒன்றுமில்லை. சுழல் காற்று ஒன்று உரு எடுக்கிறது. மண்ணுலகினின்று தோன்றி அது விண்ணுலகையே எட்டிப்பிடிக்கிறது. பூமியிலுள்ள குப்பை தூசிகளையெல்லாம் அது தன்னிடத்து எடுத்துக்கொள்கிறது. சுழன்றுகொண்டு அது இடம் மாறி நெடுந்தூரம் போகிறது. அது ஒரு தனி வியக்தியாகத் தென்படுகிறது. நான் என்னும் சொல்லுக்கு இலக்காக இருக்கிற மனிதனும் அத்தகையவனேயாம். ஆணவத்தினின்று விருப்பு வெறுப்பு என்னும் ஒன்றையொன்று மோதுகின்ற இரண்டுவித வேகங்கள் அவனுக்கு உண்டாகின்றன. பஞ்சபூதங்களினின்று அந்த வேகத்துக்கேற்றபடி தனக்கு உடல் ஒன்றை அவன் உண்டுபண்ணிக்கொள்கின்றான். அந்த உடலைக் குறித்தே அவன் நான் என்று பொருள் படுத்துகிறான். நான் சிறியவன், நான் பெரியவன், நான் மதிப்பு வாய்க்கப்பெற்றவன் என்பதெல்லாம் உடலையும் உடலின் செயலையும் குறிப்பனவாம். அலை ஒடுங்கிய இடத்து, கடல் மிச்சமிருக்கிறது. நான் என்னும் ஆணவம் அகன்று போனவிடத்து கடவுளைப்பற்றிய பேருணர்வு மிச்சமிருக்கிறது. ஆனால் நான் என்னும் ஆணவமிருக்கின்ற இடத்து அப்பேருண்மை மறைந்து பட்டுப்போவது போன்று ஆய்விடுகிறது. சுழல் காற்றில் வெட்டவெளி எங்ஙனம் தடைபட்டுபோய்விடுவதில்லையோ அங்ஙனம் ஆணவத்தில் ஆத்மசொரூபம் அழிந்து பட்டுப்போவதில்லை. அதன் உணர்வு இருந்தும் இல்லாததுபோல் ஆய்விடுகிறது. ஜீவர்கள் எல்லோரும் இத்தகைய அக்ஞான நிலையில் உழன்று வருகின்

றனர். இந்நிலையை நான் என்கின்ற ஆணவம் அடைந் திட்டிருக்க என்கிறார் தாயுமானவர்.

ஈதல் அறம் என்பது கோட்பாடு. அதாவது அறநெறியில் செல்பவன் பொருளைத் தேடத் தெரிந்து கொள்வது போன்று பொருளை எடுத்து வழங்கவும் தெரிந்துகொள்ள வேண்டும். அது விஷயத்தில் மனிதன் ஒருவன் பாலம் போன்று இருக்கவேண்டும் என்று ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் பகர்ந்துள்ளார். பெருகி வரும் வெள்ளத்தைத் தடைப்படுத்துவதற்காக பாலம் அமைந்துள்ளதன்று. ஒரு புறமிருந்து நீர் வந்துகொண்டே இருக்கிறது. மற்றொரு புறம் அது போய்க்கொண்டே இருக்கிறது. அங்ஙனம் மனிதன் ஒருவன் பணத்தைப் பெறவும் வேண்டும், அதைப் பிறர்க்கெடுத்துப் பகிர்ந்து கொடுக்கவும் வேண்டும். இவ்விரு செயலில் ஏதேனும் ஒன்று குறைபட்டுவிட்டால் மானுட வாழ்வு நல்வாழ்வு ஆவதில்லை. பொருளை வேண்டியவாறு மனிதன் பெற விரும்புகின்றான். பாத்திரத்திற்கேற்றவாறு அதைப் பங்கிட்டுக்கொடுக்க அவன் ஆயத்தமாய் இல்லை. அதாவது ஈகை என்பதை அறியாத நிலையில் மனிதன் இருக்கின்றான். தேடிய பொருளைப் பங்கிட்டுக் கொடுக்காவிட்டால் அப்பொருள் பாழ்பட்டதாகிறது. பொருளைத் தேடிய மனிதனுடைய மனதும் பாழ்பட்டுவிடுகிறது. கிணற்றிலே நீர் ஊறுகிறது. ஊறிய நீரை ஏன் இறைக்க வேண்டும் என்று கருதி நீரைக் கிணற்றிலேயே அடைத்து வைத்திருந்தால் அந்த நீர் கெட்டுப்போய்விடும். நாளடைவில் அது நச்சு நீர் ஆய்விடும். உண்ணுதற்கும் ஏனைய காரியங்களுக்கும் அது பயன்படாது போய்விடும். எடுத்து வழங்குதற்கென்று அமைந்த நீரை இறையாது அடைத்துவைத்ததின் விளைவு அது. கிணற்று நீரை இறைக்கு

மளவு புதிய நன்னீர் அதனுள் வந்துகொண்டே இருக்கிறது. ஆக,நீரின் வரவும் செலவும் ஒன்றுக்கொன்று துணைபுரிகிறது. வாழ்க்கையின் தத்துவமும் இதுவே. முறையாகப் பொருளைத் தேடுதல் மூலம் ஒருவன் திறமை வாய்ந்தவன் ஆகின்றான். முறையாக அதை வழங்குதல் மூலம் ஒருவன் பரந்த மனப்பான்மை உடையவன் ஆகின்றான். ஈயாதவனுக்கோ மனப்பான்மை குறுகிவிடுகிறது. தன்னுயிர் வேறு, மற்றுயிர் வேறு என்ற வேற்றுமை புத்தி அவனுக்கு உண்டாகிறது. உண்மையில் உயிர்களுக்கிடையில் வேற்றுமை இல்லை. எல்லா உயிர்களும் ஒரு பேருயிரில் ஒன்றுபட்டிருக்கின்றன. தான் தேடியவைகளைப் பிற உயிர்களுக்குப் பண்புடன் வழங்குதல் மூலம் உயிர்களுக்கிடையிலுள்ள ஒற்றுமையை ஒருவன் அறியவல்லவனாகின்றான். தன்னிடத்திருக்கும் பொருள்களை எடுத்து வழங்க மறுப்பதன் மூலம் மனிதன் வேற்றுமையையே வளர்க்கிறான். கிணற்றிலுள்ள நச்சு நீர் போன்று அம்மனிதனும் மிகக் கீழ்மகன் ஆய்விடுகிறான். பிறர்க்குக் கொடுக்க மறுப்பதினின்று வரும் கேடு இது. உவந்து ஈயாத மனநிலைக்கு லோபம் என்று பெயர். தம்மிடத்து அத்தகைய லோபம் இன்னும் சிறிது பாக்கியிருக்கிறதென்று தாயுமானவர் தம்மையே மதிப்புப்போடுகிறார்.

அருளுடைமை என்பது ஒரு மனநிலை. அருளின்மை என்பது அதற்கு நேர்மாறான மனநிலை. அருள் என்பது யாது என்று ஆராய்ந்து பார்க்க வேண்டும். சர்க்கரையினால் செய்யப்பட்ட பக்ஷணம் என்ன வடிவத்திலிருந்தாலும், வெவ்வேறு பொருளோடு கலந்திருந்தாலும் தித்திக்கும் இயல்பு அதை விட்டுப் பிரிந்துபோய் விடுவதில்லை. காரணப் பொருளாகிய சர்க்கரைக்கு உரியது தித்திக்கும் இயல்பு. ஆதலால் காரியப் பொருளாகிய பக்ஷணத்துக்கும்

த்திக்கும் தன்மை வந்துவிடுகிறது. இப்பிரபஞ்சத்துக்கும் அதிலுள்ள உயிர்வகைகள் அனைத்துக்கும் காரணப் பொருள் கடவுள். பிரபஞ்சத்திலுள்ள சராசரம் அனைத்தும் காரியப்பொருள்கள். காரணத்துக்கு அன்னியமாகக் காரியம் இல்லை. ஆதலால் உயிர்கள் அனைத்தையும் கடவுள் மயமாய் உணர்ந்து பழகுதல் அருளுடைமை ஆகிறது. நிகழ்கின்ற செயல்கள் யாவும் கடவுள் செயலாய் உணர்வதும் அருளுடைமை ஆகிறது. எல்லாம் அவர் மயம் என்றும் எல்லாம் அவருடைய செயல் என்றும் ஆழ்ந்து உணர்ந்து பழகுகின்றவர்கள் தவறுதல் ஒன்றும் செய்துவிடுவதில்லை. மேலும் மேலும் கடவுளிடம் அவர்கள் கருவிகள் ஆகின்றனர். இறைவனிடம் அடைக்கலம் புகுதல் என்னும் கோட்பாடு அருளுக்குப் பாத்திரமானவர்கள் மூலம் வெளியாகிறது. ஆனால் அருளோடு கூடிய உணர்வு உயிர்களுக்கு எளிதில் அமைவதில்லை. தங்களுடைய அகங்கார ஆணவத்தோடு கூடிய உணர்வே முன்னணியில் வந்து நிற்கிறது. தங்களுடைய செயல்களுக்கெல்லாம் தாங்களே கர்த்தாக்கள் என்கின்ற எண்ணமும் அருளைப் புறக்கணிக்கின்றவர்களுடைய உள்ளத்தில் முன்னணியில் வந்து நிற்கிறது. முற்றிலும் பரிபாகம் அடைந்தவர்களே பிரபஞ்சத்திலுள்ள யாவையும் அருளோடு இணைத்து உணருகின்றனர். அத்தகைய மனபரிபாகம் தமக்கு இன்னும் வந்து அமையவில்லை என்பதை அருளின்மைகூடக் கலந்து உள்ளிருக்க என்று தாயுமானவர் கூறுகிறார்.

உயிர்களனைத்தும் ஆசையினால் தூண்டப்பெற்று வெவ்வேறு விதமான செயல்களைப் புரிந்து வருகின்றன. உயிர்களின் முன்னேற்றத்துக்கு ஆசையே முதல் காரணமென்றும் இயம்பலாம். சிற்றுயிர்கள் பேருயிர்களாகப் பரிணமித்து

வருவதற்கு ஆசையே மூலகாரணமாகிறது. ஆசையில்லா விட்டால் முன்னேற்றமும் இல்லை. ஆயினும் இந்த ஆசைக்கு முடிவு ஒன்று உண்டு. மானுட நிலையை அடையும் பரியந் தம் ஆசை பெரிதும் பயன்படுகிறது. நல்லறிவோடு கூடிய மானுடன் ஆகிய பிறகு அருள் நிலையில் மனிதன் அடைய வேண்டிய மேன்மைக்கு ஆசை இடைஞ்சலாய் விடுகிறது. எல்லாம் தம் செயல் என்று உணருகின்றவர்களுக்கு ஆசை முற்றிலும் வேண்டப்படுகிறது. எல்லாம் ஈசன் செயல் என்று அருள் நிலையில் நிலைத்திருக்க விரும்புகின்றவர் களுக்கு ஆசை பேரிடைஞ்சல் ஆகிறது. அது ஓயாது மனி தனுக்குத் துன்பத்தைத் தருகிறது. வாழ்க்கையில் கீழ்நிலை யில் எது பெருந்துணையாய் இருந்ததோ அது மேல்நிலையில் பெருந்தொல்லையாய் விடுகிறது. மேல் நிலைக்குப் போயிருக் கிறவர்களுக்கு ஆசை என்பது ஒரு பிசாசுக்கு ஒப்பாகிறது. உண்மையில் பிரபஞ்சத்தில் பிசாசு என்பது ஒன்று இருக்கு மாகில் அது ஆசை. எது அமைதியற்று ஓயாது அலைந்து திரிகிறதோ அது பிசாசு. அலைந்து திரியும் உயிர்களைப் பார்த்துப் பிசாசு என்று அழைப்பது உலக வழக்கம். உயிர்களை அலைந்து திரியும்படி தூண்டுவது ஆசை. அருள் நிலையை எட்டிய பிறகு ஆசையை அறவே ஒழித்துவிட வேண்டும். 'ஆசை அறுமின், ஆசை அறுமின்; ஈசனோ டாயினும் ஆசை அறுமின்' என்பது கோட்பாடு. மேல் நிலைக்கு வந்துள்ள ஜீவர்களுக்கு இக்கோட்பாடு முற்றிலும் பொருத்தமானது. ஒரு சான்றின் மூலம் இதை விளக்கு வோம். மத்தை இட்டு மோரைக் கடைகிறோம். அதனால் மோரிலுள்ள வெண்ணெய் முழுதும் பிரிந்து வந்துவிடுகிறது. வெண்ணெய் முழுதும் பிரிந்தான பிறகு மேலும் அதைக் கடைந்துகொண்டேபோவதில் காரியமொன்றுமில்லை. அதை

அமைதியுற்றிருக்க விட்டுவிடுவதிலேயே நலன் அனைத்தும் உண்டாகிறது. அப்பொழுது வெண்ணெய் திரண்டு ஒரு வடிவெடுத்து பிரிந்து நிற்கிறது. அதே விதத்தில் மன பரிபாகம் அடைந்திருக்கிறவர்கள் அருள் நிலையை எட்டி விடுகின்றனர். அந்த அருள்நிலை திரட்டியெடுத்த வெண் ணெய்க்கு ஒப்பானது. ஆசையானது மேலும் மனதுக் குள்ளே புகுந்துகொண்டு அதை அல்லல் என்னும் நிலையில் வைத்து அசைக்க வேண்டிய அவசியமில்லை. அமைதியுற் றிருப்பதற்கு மாருக மனது ஆசையில் அல்லல்படுமாகில் அதைப் பிசாசின் செயல் என்றே பகரலாம். அருள் ஆன வர்க்கு அத்தகைய அல்லல் இல்லை. இறைவனுடைய பெரிய திட்டத்தில் கருவியாக இருந்துகொண்டு இறைவ னுடைய பெரும் செயல்களை அமைதியோடு ஆற்றுவதே அம்மேன்மக்கள் இறைவனுக்குச் செய்யும் வழிபாடாகிறது. அந்நிலை தமக்கு இன்னும் வந்து அமையவில்லை என்பதை மேல் ஆசா பிசாசுமுதலாம் வெவ்விய குணம் பல இருக் கும் என்னும் சொற்களால் தாயுமானவர் குறிப்பிடுகின்றார். வெவ்விய குணம் என்பது கொடிய இயல்பு எனப் பொருள் படுகிறது. மனிதனுடைய நாவில் ஊறுகின்ற எச்சில் ஜீரண சக்திக்குப்பெருந்துணைபுரிகிறது. ஆனால் இந்த எச்சில் வாயி னின்று வெளிப்பட்டு நிற்கின்றபொழுது நஞ்சாக மாறுகின் றது. எவ்வுடலில் உண்டாயிற்றோ அவ்வுடலுக்கே பிறகு அது தீங்குசெய்ய வல்லது. ஆசை அத்தகையது. கீழ்நிலை யில் இருக்கின்ற உயிர்களின்முன்னேற்றத்துக்கு அது உதவி புரிகிறது. மேல்நிலையில் வந்துள்ள உயிர்கள் அருளுக்குப் பாத்திரமாவதற்கு அது இடைஞ்சல் ஆகிறது. ஆகவே ஆசைகள் அனைத்தும் மேல்நிலைக்கு வந்தவர்களுக்கு வெவ் விய குணங்கள் ஆகின்றன.

ஒவ்வோர் உயிரும் தான் குடியிருப்பதற்கேற்ற இடத்தைத் தேடிக்கொள்கிறது. பெரிய பட்டணமொன்றில் வித விதமான பாங்குடைய மக்கள் குடியிருக்க வருகின்றனர். அப்படி வருகின்றவர்களுள் பொருள் மிகப் படைத்தவர்கள் உண்டு; பொருள் இல்லாதவர்களும் இருக்கின்றனர்; தூய வாழ்க்கை வாழ்கின்றவர்கள் இருக்கிருர்கள்; தூய்மையை அறியாத கீழோர் இருக்கின்றனர்; நல்லார் பொல்லார் ஆகிய வெவ்வேறு பாங்குடையவர்கள் இருக்கின்ருர்கள். மாறுபடும் பாங்குடைய மக்களுள் அவரவர்க்கேற்ற இடத்தை அப்பட்டணத்தில் தேடிக்கொள்கின்றனர். நல்லார் நிறைந்துள்ள பகுதியில் நல்லவர்கள் குடியிருக்கப் போகின்றனர்; கீழான பாங்குடையவர்களுக்கிடையில் அந்நிலைமையில் உழல்கின்றவர்கள் போய்ச் சேருகின்றனர். பணம் மிகப் படைத்துள்ளவர்களுக்கிடையில் பணக்காரர் போய் வாழுகின்றனர். ஏழை எளியவர்களுக்கிடையில் எளியோர் போய்ச் சேருகின்றனர். இனி, உயிர்கள் உடலை எடுப்பதும் இக்கோட்பாட்டுக்கு உட்பட்டதாம். விலங்கியல்பு படைத்த உயிர் விலங்கு உடலை எடுத்துக்கொள்கிறது. பறவை இயல்பு படைத்த உயிர் பறவையின் உடலை எடுத்துக்கொள்கிறது. மக்களின் இயல்பு படைத்த உயிர் மகனாகப் பிறக்கிருன். இங்ஙனம் வெவ்வேறு படித்தரங்களில் உள்ள உயிர்கள் வெவ்வேறு உடலங்களை எடுத்துக்கொள்வதும் வாழ்க்கையைப்பற்றிய விதியாம். கடவுளுக்கு மெய்யன் என்பது ஒரு பெயர். அவருடைய சொரூபம் ஒரு பொழுதும் பொய் போய்விடுவதில்லை. எல்லாக் காலத்திலும் அவர் இருந்தபடி இருக்கிருர். காலமோ கடந்து போகும் தன்மையது. ஒரு நிலையில் அது இருக்கிறது. மற்ெருரு நிலையில் அது இல்லை. எனவே காலத்துக்கு

மெய்ம்மை கிடையாது. மெய்யனுகிய கடவுளோ காலத்தை யும் கடந்தவர். கேடிலி என்பதும் நிர்மலன் என்பதும் அவருக்கு அமைந்துள்ள வேறு சில அடைமொழிகளாம். இந்த இரண்டு அடைமொழிகளுக்கும் பொருள் ஒன்றே. கேடானது கடவுளிடத்தில்லை. அவர் நலமுடையான், கேடில்லான். கேடு கச்மலம் என்று அழைக்கப்படுகிறது. வெறுப்புக்குரிய அழுக்கு எதுவோ அது கச்மலம். ஆனல் இறைவனே நிர்மலன், அழுக்கில்லாதவன். அழுக்கு இல்லாத பொருள் அழுக்கினிடையில் அமையாது. தூயவாழ்வு வாழுகின்ற மக்கள் தூய இடத்தையே நாடுகின்றனர். தூய்மையே வடிவெடுத்துள்ள கடவுள் தூய்மையில் நிலை பெற்றுள்ள தொண்டர்கள் உள்ளத்தில் குடிகொண்டிருக்கிறுர் என்பது கோட்பாடு. அசுசியான இடத்தில் குடியிருக்கத் தூய்மையே வடிவெடுத்தவர் வருவதில்லை. பொய்ம்மை என்னும் பொல்லாங்கு நிறைந்தவர் உள்ளத்தில் மெய்யன் ஆகிய தெய்வம் எழுந்தருளமாட்டார் என்று கருதுவது பொருத்தமானதே. கெட்டவர்களுடைய உள்ளத்தைக் கோயிலாகக் கடவுள் கொள்ளமாட்டார் என்னும் கோட்பாட்டில் உண்மை ஒன்று இருப்பது போன்று தோன்றுகிறது.

இனி, கடவுளுக்குப் பூரணன் என்பது மற்றொருபெயர். நிறைபொருள் என்பது அதன் கருத்து. ஓர் இடத்தில் இருந்து மற்றோர் இடத்தில் இல்லாது போய்விடுகின்ற வஸ்து நிறைபொருள் ஆகாது. நீக்கமற அது எங்கும் நிறைந்திருக்க வேண்டும். கடவுள் சொர்க்கத்தில் இருக்கின்றுர்; நரகத்தில் இல்லை என்று கருதுபவர் உளர். கடவுள் மேல் உலகில் இருக்கிறுர்; பாதாளத்தில் இல்லை என்று பகர்கின்றவர்கள் இருக்கின்றனர். அப்படி அவர்

ஓர் இடத்தில் இருந்து மற்றோர் இடத்தில் இல்லாது போய் விடுவாராகில் அவர் பூரணன் ஆகமாட்டார். நிர்மலமாகிய பரம்பொருள் கச்மலம் நிறைந்த பிரபஞ்சத்திலோ, பிரபஞ் சத்திலுள்ள உயிர்களுடைய உள்ளத்திலோ இருக்கமாட் டார் என்று கருதுவோமாகில் அவர் பூரணப் பொருள் அல்ல என்று நாம் முடிவுகட்டிவிடுகிறோம். பொல்லாதவர் இப்பிரபஞ்சத்தில் இருக்கின்றனர். அவர்களுடைய உள் ளத்தில் கடவுள் இல்லையா? இருக்க அவர் மறுத்து விடு வாரா? அவ்வியமும், ஆணவமும், லோபமும், அருளின்மை யும், ஆசையும், அவைபோன்ற கொடிய குணங்கள் பல தம் மிடத்து இன்னும் குடிகொண்டிருக்கின்றன என்பதைத் தாயுமானவர் ஒத்துக்கொள்கின்றார். அதற்கு மேல் கடவு ளிடத்து அவர் கேள்வி ஒன்று கேட்கின்றார். தம்மிடத்து இருக்கும் குணக்கேடுகளை முன்னிட்டு கடவுள் தமக்கு வேற் றாராகப் போய்விடுவாரா? கேள்வியை அவருடைய சொல் லிலேயே காண்போம். வெவ்விய குணம் பல இருக்கும் என் அறிவூடு மெய்யன் நீ வீற்றிருக்க விதியில்லை என் னிலோ பூரணன் என்னும் பெயர் விரிக்கில் உரைவேறும் உளதோ? பூரணன் என்னும் பெயருக்கு வேறு உரை எதையும் நாம் கொண்டு வரமுடியாது. கடவுள் பூரணன் ஆதலால் அவர் நீக்கமற எங்கும் நிறைந்திருக்கிறார் என் பதுவே பொருந்திய உரை ஆகின்றது. ஆதலால் மனபரி பாகம் அடையாதவர்களுடைய உள்ளத்திலும் கடவுள் வீற் றிருக்கிறார். சூரியப்பிரகாசம் நல்லது கெட்டது ஆகிய எல்லாப் பொருள்கள் மீதும் சமமாகப் படிகிறது. பாதரசம் பூசிய கண்ணாடியின்மீது அது சுயம்சோதியாய் இலங்கு கிறது. மண்ணாங்கட்டியின் மீது அதன் வெளிச்சம் படுகிறது. ஆயினும் சூரியனுடைய சான்னித்தியத்தை ஆங்கு உள்ளபடி

காணமுடியாது. கெட்டவர்களுடைய உள்ளத்திலும் கடவுள் வீற்றிருக்கிருர். அவருடைய சொரூபத்தை உள்ளபடி வெவ்விய குணம் படைத்தவர்களுடைய உள்ளத்தில் காண முடியாது.

இதுகாறும் இயம்பியுள்ள வெவ்விய குணங்கள் யாவும் மனத்தகத்து அமைந்துள்ள மலமாகின்றன. ஜீவனை ஜீவ போதத்தில் பற்றிப் பிடிக்கின்ற பாங்கு இந்த மலங்களுக்கு உண்டு. நச்சுப் பாம்பு ஒன்று திடீரென்று தோன்றி ஒருவனைக் கவ்விப் பிடிக்கின்றது. இன்னும் கடித்துத் தன் விஷத்தை உடலினுள் செலுத்தவில்லை. ஆயினும் அது கவ்வியமாத்திரத்திலேயே மனிதன் ஒருவன் மூர்ச்சைபோய்விடுகின்ருன். மூர்ச்சைபோய்க் கிடக்கும் அம்மனிதனைப் பாம்பானது சுற்றிப் பிடித்துக்கொள்கிறது. அந்த நிலையை நாகபாசம் என்று சொல்லலாம். செத்துப்போனவர்களுக்கு உயிர்தரவல்லது சஞ்சீவி. அது எல்லோர்க்கும் எளிதில் அகப்படுவதில்லை. யாருக்குச் சஞ்சீவி கிட்டுகிறதோ அவர் உயிருக்கு ஆபத்து இல்லை. நாகபாசத்திஞல் கட்டுண்ட மனிதன் ஒருவன் உயிர்போய்விட்டவன் போன்று மூர்ச்சையடைந்து கிடக்கின்ருன். அத்தகையவனுக்கு திரும்பவும் தெளிந்த நிலையை உண்டுபண்ணுவதற்கு நல்ல ஞானம் அல்லது விவேகத்தை நல்குவது ஒன்றே உற்றஉபாயமாகும். பாம்பாட்டி ஒருவன் இருக்கின்ருன். வேண்டியபடி பாம்பை எடுத்து ஆட்டுகின்ருன். தன் கழுத்திலும் உடலின் வெவ்வேறு இடங்களிலும் பாம்புகளைப் போட்டுக்கொண்டு அவன் விளையாடுகின்ருன். அச்சத்தால் மூர்ச்சையடைந்து கிடக்கிற மனிதனுக்கு அத்தகைய விளையாட்டைக் கொஞ்சம் விளக்கிக் காட்டவேண்டும். பாம்பாட்டி பாம்போடு விளையாடுகின்றபொழுது அவன் மட்டும் ஏன் அஞ்சி உயிர்

போனவன் போன்று கிடக்கவேண்டும் என்கின்ற ஞான விசாரத்தை அவனுக்கு ஊட்ட வேண்டும். பாம்பு கவ்வி யிருக்கிறதே ஒழிய இன்னும் கடித்து விஷத்தைச் செலுத்த வில்லே. தன் உயிர் போய்விடாது என்கின்ற உறுதி அவ னுக்கு வருகின்றபொழுது அது ஞானேதயத்தின் ஆரம்ப நிலேயாகின்றது. மனத்தகத்து ஏராளமாக மலிந்து கிடக் கும் வெவ்விய குணங்கள் நாகபாசம் போன்று மனித னுடைய நிஜசொரூபத்தை மறைத்துவைத்து விட்டாலும் அவனே மாய்த்துவிட அம்மலங்களுக்கு இயலாது. நல் லறிவையும் விவேகத்தையும் பெறுகின்றவளவுக்கு இந்த மலங்கள் இருக்குமிடம் தெரியாது போய்விடுகின்றன. இறைவனுடைய அருளோடு மனிதன் முற்றிலும் கலந்து கொள்வானகில் அவனுக்கு மெய்ஞ்ஞானம் வந்துவிடுகின் றது. ஜனன மரண சொரூபமாய் இருக்கின்ற சிறு வாழ்வு அகன்றுவிடுகிறது. இறைவனேடு சேர்ந்துள்ள மரண மிலாப் பெருவாழ்வு அந்த ஞானேதயத்தில் அவனுக்கு வரு கிறது. ஆக வெவ்விய குணங்கள் என்கின்ற மலத்தை நீக்குதற்கும் கேடில்லாத பாரமார்த்திகப் பெருநிலேயாகிய இறைவனுடைய மெய்யான சொரூபம் ஜீவனுக்கு வந்து அமைவதற்கும் கடவுளேப்பற்றிய மெய்ஞ்ஞானமே உற்ற உபாயமாகிறது. சஞ்சீவி என்னும் கிடைப்பதற்கரிய மருந்து கடவுளேயாம். இக்கோட்பாடுகளே எல்லாம் கவ்வு மலமாகின்ற நாகபாசத்திஞல் கட்டுண்ட உயிர்கள் மூர்ச்சை கடிதகல வலியவரு ஞான சஞ்சீவியே என்று தாயுமானவர் இயம்புகிருர்.

நீர் ஆனது வெவ்வேறு நிலேகளில் இருக்கிறது. நிலேக்கு ஏற்ப அதன் பெயரும் மாறி அமைகிறது. ஆற்று நீர், கிணற்று நீர், கடல் நீர், சாக்கடை நீர் இப்படியெல்

லாம் அதற்குப் பெயர்கள் வந்தமைகின்றன. பெயருக்கு ஏற்ப அந்த நீரினிடத்து அன்னியமான பொருள் ஏதோ ஒன்று கலந்திருக்கிறது. கிணற்று நீரில் பூமியின் இயல்பு கலந்திருக்கிறது. ஆற்று நீரில் வண்டல் முதலியன படிந்திருக்கின்றன. கடல் நீரில் உப்பு இருக்கிறது. ஒவ்வொரு பொருளுக்கும் அந்நியமானது ஒன்றன் சேர்க்கையால் அதன் சுயநிலை கெட்டுவிடுகிறது. அந்நியமான பொருளை அழுக்கு என்றும் மலம் என்றும் சொல்லலாம். சுத்தமான பால் இருக்கிறது. தூய நன்னீர் இருக்கிறது. ஒவ்வொன்றும் தன்னளவில் சுத்தமானது. ஆனால் பாலினுள் நல்ல நீரைக் கலந்து விட்டால் அது சுத்தமான பால் அல்லாது போய் விடுகிறது. மண் தன்னளவில் நல்லது. ஆனால் அது நீரில் படிகின்றபொழுது நீர் தூய நீர் ஆவதில்லை; மலினப்பட்டு விடுகிறது. அந்த மலங்களையெல்லாம் நீக்கிவிடுகின்ற பொழுது நீருக்கு சுயநிலை வந்துவிடுகிறது. அது ஆவியாக இருந்தாலும் சரி, உறைபனியாயிருந்தாலும் சரி, தூய நீராய் இருந்தாலும் சரி வேற்றுப்பொருள் அதனோடு கலவாதிருக்கின்ற பொழுது தன் யதார்த்த நிலையில் அது இருக்கிறது. அதுநீருக்கு உண்மையானகதி ஆகிறது. அதனுடைய முக்தி நிலை என்றும் அதைச்சொல்லலாம். ஜீவாத்மன் குணக்கேடுகள்பலவற்றோடு கலந்து பத்தாத்மாவாயிருக்கிறன். அந்தக் குணக்கேடுகளை எல்லாம் அகற்றிவிட்டால் தனக்குச் சுயமாயுள்ள சுத்தநிலை வந்துவிடுகிறது. தனக்குச் சொந்தமாயுள்ள சுத்தநிலையே ஜீவனுக்குரிய முக்தி நிலையாகிறது. ஈண்டு மற்றோர் கோட்பாட்டை ஆராய்வோம். அழுக்குப் படியாத தூய நன்னீர் பெருமிதமாய் மழையாகப் பொழிந்து வருகிறது. சாக்கடையினின்று அழுக்குப் படிந்த நீரில் ஒரு சிறு பகுதியைக் காய்ச்சி ஆவியாக மாற்றிப் பிறகு அதை

நீராக உறையும்படிச் செய்தால் சாக்கடை நீரும் நன்னீர் ஆகிறது. வானத்தினின்று மழையாக வந்துள்ள நன்னீருக்கும் சாக்கடையினின்று பிரித்தெடுத்த நன்னீருக்கும் பிறகு வேற்றுமையில்லாது போய்விடுகின்றது. அதே விதத்தில் ஜீவாத்மாவிடத்துள்ள அழுக்கையெல்லாம் நீக்கிவிட்டால் ஜீவாத்மனுக்கும் பரமாத்மனுக்கும் ஒரு விதமான வித்தியாசமும் இருப்பதில்லை. இந்த நிலையை கதியான பூமி நடுவு என்று தாயுமானவர் இயம்புகின்றார். தான் இருக்க வேண்டிய நிலையை அடைகின்றபொழுது அது கதி என்றும், அதற்குச் சொந்தமாயுள்ள பூமி என்றும் பகரப்படுகிறது. விருப்பு வெறுப்பற்ற நடுநிலை அது ஆதலால் நடுவு என்றும் அது நவிலப்படுகிறது. பரம்பொருள் யாண்டும் அந்நிலையிலேயே இருந்து வருகிறார். ஜீவனே தன்னிடத்துள்ள மலங்களையெல்லாம் அகற்றிவிட்டு அந்நிலையை அடைந்தாக வேண்டும். அதை அடையும்பொழுது ஜீவன் முக்தி பெற்றுவிடுகின்றான். கடவுளோ நித்திய முக்தனாகி, நித்திய சுத்தனாக யாண்டும் அப்பெருநிலையிலேயே இலங்கி வருகின்றார். ஆதலால் **செவ்விதின் வளர்ந்தோங்கு திவ்விய குணமேருவே** என்று அவர் இயம்பப்படுகிறார். எல்லா மேன்மைகளும் பரம்பொருளிடத்து இருக்கின்றன. அப்பரம்பொருளோடு சார்கின்ற அளவு ஜீவனுக்கே மேன்மைகள் எல்லாம் மேலும் மேலும் வந்தமைகின்றன. மலம் நீங்கப்பெற்ற யாவும் சுயப்பிரகாசமுடையவைகள் ஆகின்றன. எது பிரகாசமுடையதோ அது திவ்வியமானது. நலன்கள் அனைத்துக்கும் இருப்பிடம் எதுவோ அது குணமேரு அல்லது குணக்குன்று. சிறப்புக்கள் யாவும் குவிந்துள்ள இடம் என அது பொருள்படுகிறது. இறைவனுடைய சிறப்புக்களை எவ்வளவுதான் நாம் விரித்துக்கொண்டு போனாலும்

அதை முழுதும் அளந்து சொல்லிவிட நமக்கு இயலாது. ஏனென்றால் நமது மனது ஒரு எல்லைக்கு உட்பட்டது. பரம்பொருளோ எல்லையைக் கடந்தவர். எல்லை கடந்த ஒரு பொருளை எல்லையில் உள்ள ஒரு அளவையைக் கொண்டு அளந்துவிட முடியாது. இக் கருத்தைக்கொண்டே சித்தாந்த முத்தி முதலே என்று பரம்பொருளைத் தாயுமானவர் வருணிக்கின்றார். சித்தம் என்பது மனது. அந்தம் என்பது முடிவு. சித்தாந்தம் என்பது மனதற்ற நிலை. மனதுக்கு எட்டுகின்ற அளவு பரம்பொருளின் பெருமைகளை அம்மனதானது விளக்கிக்கொண்டே போகுமாகில் பிறகு அம்மனது பரம்பொருளில் கலந்து கரைந்துபோய்விடுகிறது. அது மனதற்ற நிலை ஆய்விடுகிறது. அப்பொழுது ஜீவன் முக்தி பெற்றுவிடுகின்றான். அதற்கு முதல் காரணமாய் இருப்பவர் கடவுள். இக்கருத்துக்களெல்லாம் சித்தாந்த முத்தி முதலே என்னும் சொல் தொடரில் அடங்கிக் கிடக்கின்றன. அத்தகைய பெரிய பொருள் தாயுமானவருடைய வணக்கத்திற்காக என்று திரிசிராப்பள்ளியில் தென்முகக் கடவுளாக எழுந்தருளியிருக்கின்றார் என்றும் அவரே உயிர்கள் அனைத்துக்கும் முதல் பொருள் என்றும் ஞானத்துக்கு அவர் உறைவிடம் என்றும் அவரை வருணித்தல் பொருட்டு சிரகிரி விளங்கவரு தக்ஷிணா மூர்த்தியே சின்மயானந்த குருவே என்று இயம்புகின்றார். இக்கருத்துக்கள் யாவையும் தொகுத்து அவர் மேற்கூறிய பாடலில் அமைத்து வைத்திருக்கிறார்.

---

## சின்மயானந்த குரு - 4

ஐவகை எனும்பூத மாதியை வகுத்ததனுள்
அசரசர பேதமான
யாவையும் வகுத்துநல் லறிவையும் வகுத்துமறை
யாதிநூ லையும்வகுத்துச்
சைவமுத லாம்அளவில் சமயமும் வகுத்துமேற்
சமயங் கடந்தமோன
சமரசம் வகுத்தநீ யுன்னையான் அணுகவுந்
தண்ணருள் வகுக்கஇலையோ
பொய்வளரும் நெஞ்சினர்கள் காணாத காட்சியே
பொய்யிலா மெய்யரறிவில்
போதபரி பூரண அகண்டிதா காரமாய்ப்
போக்குவர வற்றபொருளே
தெய்வமறை முடிவான பிரணவ சொரூபியே
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிண மூர்த்தியே
சின்மயா னந்தகுருவே.

*மனிதர் பத்துப்பேர் படுத்துத் தூங்குகின்றார்கள். அப்பொழுது அவர்களுள் யார் எத்தகைய ஆற்றல் படைத்தவர் என்பது ஒன்றும் தெரியாது. அயர்ந்து தூங்குகின்ற வேளையில் ஆற்றல் படைத்தவர்களும் ஆற்றல் ஒன்றும் இல்லாதவர்களும் ஒரே ஒடுங்கிய நிலையில் மூழ்கியிருக்கின்றனர். ஆனால் விழித்து எழுந்துகொண்டவுடன் யார் எத்தகையபாங்குடையவர் என்பது எளிதில் விளங்கிவிடும். ஒரு மனிதன் செய்கின்ற செயலே அவனுடைய ஆற்றல் எத்தகையது என்பதை விளக்கிக் காட்டுகிறது. விழித்து*

எழுந்ததும் ஒருவன் ஓவியம் தீட்டுகிறான். மற்றொருவன் காவியம் அமைக்கிறான். மூன்றாமவன் இன்னிசை பாடுகின்றான். நான்காவது மனிதன் சிறந்த கருத்துக்களை மற்றவர்களுக்கு எடுத்து விளக்குகிறான். இங்ஙனம் ஒவ்வொரு மனிதனுடைய திறமையும் தான் புரியும் செயலினின்று வெளியாகிறது. செயல் வல்லமையை ஒரு மனிதனுடைய படைப்புத் திறமை என்று பகர்வது மிகையாகாது. இது மனிதனைப் பற்றிய உண்மை. இனி கடவுளைப் பற்றிய உண்மையை ஆராயுங்கால் அவர் ஆற்றல் அனைத்தும் படைத்தவர். அவருடைய திறமைக்கு எல்லை கண்டுபிடிக்க எவர்க்கும் இயலாது. பேராற்றல் படைத்தவர் என்று அவர் பகரப்படுகின்றார்.

கடவுளின் பேராற்றல் நமக்கு எப்படி விளங்குகிறது என்று ஒருவர் கேள்வி ஒன்று கேட்கலாம். அவர் சர்வசக்திமான் என்பதை அவர் ஓயாது நமக்கு விளக்கிக் காட்டிக் கொண்டிருக்கிறார். அவருடைய படைப்பே அவருடைய வல்லமைக்கு எடுத்துக்காட்டாகும். பிரளய காலத்தில் பிரபஞ்சமெல்லாம் அவரிடத்து ஒடுங்கிக் கிடக்கிறது. சிருஷ்டியின்பொழுது அவை யாவும் தோற்றத்துக்கு வருகின்றன. ஓவியத்தின் மேன்மையிலிருந்து ஓவியக்காரனுடைய திறமை நமக்கு விளங்குகிறது. அதே பாங்கில் சிருஷ்டியின் மஹிமையிலிருந்து சிருஷ்டிகர்த்தாவின் மஹிமைகளில் பல நமக்கு விளங்குகின்றன. அவருடைய சிருஷ்டியின் ஒரு சிறு பகுதியை ஆராய்ந்து பார்ப்போம். அப்படி ஆராய்கின்ற நாம் அவர் நமக்குக் கொடுத்திருக்கின்ற அறிவையும் ஆற்றலையும் கொண்டே அவரை ஆராய வேண்டியதாகிறது. அதற்கு உபமானம் ஒன்று எடுத்துக்கொள்வோம். கடல் ஒன்று எத்தனை மைல் தூரம் பரந்துள்ளது என்பது நமக்கு

விளங்குவதில்லை. அதைச் சுற்றிப் பார்ப்பதற்கு நீராவிக் கப்பல் ஒன்றை அமைக்கின்றோம். அக்கப்பலை இயக்குவது ஆவிமயமாய் இருக்கின்ற நீர். எனவே நீரின் துணை கொண்டே நீர்ப்பரப்பை அறிந்துகொள்ள நாம் முயலுகின்றோம். அங்ஙனம் இறைவன் நமக்குத் தந்துள்ள அறிவு நுட்பத்தையும் ஆற்றலையும் கொண்டு அவருடைய படைப்பைத் தெரிந்துகொள்ள நாம் முயலுகிறோம். அவருடைய படைப்பை அறிகின்ற அளவு அவருடைய சொரூபத்தையே நாம் அறிபவர் ஆகின்றோம். ஏனென்றால் அவர் வேறு, அவருடைய படைப்பு வேறு அல்ல. சுயம்பு என்பது கடவுளுக்கு அமைந்த பெயர். தோன்றாத நிலையிலிருந்து தோன்றுகிற நிலைக்குத் தம்மை மாற்றியமைத்தவர் என்பது அதன் பொருள். தோன்றாத நிலையிலிருந்து ஐம்பூதங்கள் என்னும் தோற்றத்தை அவர் வகுத்து வைத்துள்ளார். ஐம்பூதங்கள் எவை என்றுபார்ப்போம். ஆகாசம் என்பது முதலில் உண்டான பூதம். வெட்டவெளி என அது பொருள்படுகிறது. கடவுள் நீக்கமற எங்கும்நிறைபொருள் என்கின்றோம். அக்கோட்பாட்டை வெட்டவெளி நிரூபிக்கிறது. வெட்டவெளிக்கு எல்லை கட்ட எவர்க்கும் இயலாது. அதனிடத்துப் பிளவை உண்டுபண்ண யாருக்கும் முடியாது. வெட்ட வெளியிலே பூமிபோன்ற கிரகங்கள் மிதக்கிக்கொண்டிருக்கின்றன. அப்படி மிதக்கிக்கொண்டிருக்கின்ற கிரகங்களுள் ஒவ்வொன்றிலும் வெட்டவெளி அல்லது திசை இடையீடின்றி எங்கும் வியாபகமாயிருக்கிறது. நாம் சுவர் எடுத்து வைத்துக்கொண்டு அதற்கு இப்புறம் அப்புறம் என்கின்றோம். ஆனால் வெட்ட வெளிக்கு இப்புறம் அப்புறம் என்பதில்லை. சுவரினூடும், சுவருக்கு நாலாபக்கமும் எங்கும் வியாபகமாயிருப்பது வெளி. இதை அறிந்துகொள்ளுகிறபொழுது

கடவுள் எங்கும் நிறைபொருள் என்பதை ஓரளவில் அறிந்துகொள்கிறோம். இந்த வெட்டவெளி அல்லது ஆகாசத்துக்கு ஓசை தன்மாத்திரையாய் அமைந்திருக்கிறது. வெட்டவெளி முழுதிலும் ஓசை வியாபகமாய் இருக்கிறது. மலையும், ஆறும், கடலும் ஓசைக்கு எல்லை போட்டுவிட மாட்டா. வானொலி இக்கோட்பாட்டை இன்று நிரூபித்து வருகிறது. கடலுக்குள்ளேயிருக்கும் நீர்மூழ்கிக் கப்பலிலிருந்து வானொலியைக் கேட்கலாம்; மலைக்குகைக்குள்ளே இருந்தும் வானொலியைக் கேட்கலாம்; ஆழ்ந்த சுரங்கங்களிலிருந்தும் வானொலியைக் கேட்கலாம். வானம் எங்கும் வியாபித்திருப்பது போன்று ஒலியும் வியாபகமானது என்று நிரூபிக்கப்பட்டுள்ளது. ஒலியைக் கேட்டு அறிந்துகொள்ளுதற்கு நம்மிடத்துக் காது அமைந்திருக்கிறது.

இந்த ஆகாசத்திலிருந்து வாயு உண்டானது. வாயு எங்கும் வியாபகமானதல்ல. சில இடங்களில் அது செறிந்திருக்கிறது; வேறு சில இடங்களில் அது மெலிந்திருக்கிறது. இன்னும் சில இடங்களில் காற்று இல்லவே இல்லை. பூமிக்கு இருநூறு மைலுக்கு அப்பால் காற்று இல்லவே இல்லை என்று இயற்கை ஆராய்ச்சிக்காரர்கள் யூகிக்கின்றார்கள். அவர்களின் யூகம் உண்மைக்கு ஒத்ததென்றே நாம் முடிவு கட்டலாம். வானவெளியில் பூமியைவிட்டு அப்பால் போகப் போகக் காற்று குறைந்திருப்பது அதை நிரூபிக்கிறது. காற்று அல்லது வாயுவின் தன்மாத்திரைக்கு ஊறு அல்லது ஸ்பர்சம் என்று பெயர். காற்றின் துணைகொண்டே தொட்டு உணர்தல் என்னும் பொறி நம்மிடத்து அமைந்துள்ளது. உஷ்ணத்தையும், தணுப்பையும், கரடு முரடுத் தன்மையையும் மிருதுத் தன்மையையும் வாயுவின் துணைகொண்டு நாம் அறிகிறோம். நம்

உடல் முழுதும் ஸ்பர்சித்தல் அல்லது தொட்டு உணர்தல் என்னும் பொறி வடிவெடுத்திருக்கிறது.

மூன்ருவது பூதமாய் அமைந்திருப்பது நெருப்பு. வாயுவைவிட ஸ்தூல நிலைக்கு வந்திருப்பதால் அது இன்னும் அதிகமாக எல்லையில் அடங்கிவிடுகிறது. சூரியன் போன்ற கோளங்களில் அது நிலைபெற்றிருக்கிறது. பூமியின் உட்புறத்தில் அக்கினிக் குழம்பாக அது நிறைந்திருக்கிறது. இளநீரோடு ஒப்பிட்டுப் பூமியின் அமைப்பை நாம் அறிந்து கொள்ளலாம். இளநீரின் உட்பகுதியில் இனிய நீர் அமைந்திருப்பது போன்று பூமியினுள் ஐம்பது மைலுக்கு ஆழமான உட்பகுதியில் அமைந்திருப்பது முழுதும் அக்கினிக் குழம்பாம். இந்த அக்கினியின் தன்மாத்திரை ஒளி அல்லது ரூபம். பிரகாசித்தல் அல்லது ஒளிவிடுதல் அக்கினியோடு கூடி இயல்பாய் அமைந்திருக்கிறது. அந்த ஒளியின் துணை கொண்டு வடிவத்தைக் கிரகிக்கிற வல்லமை நமக்கு வருகிறது. அதைக் கிரகிப்பதற்கு நம்மிடத்து கருவியாய் அமைந்திருப்பது கண்.

நான்காவது பூதமாய் வருவது நீர். அது வண்ணத்தில் இன்னும் சிறியதாய் விடுகிறது. சூரியனிடத்திலும் பூமியின் உட்புறத்திலும் அக்கினி இருப்பது போன்று நீர் அவ்வளவு வியாபகமாய் இல்லை. பூமியின் மேல்பரப்பில் முக்கால் பகுதியை அது மூடிக்கொண்டிருக்கிறது. சுவைத்துப் பார்ப்பதற்குத் துணைபுரிவது நீர். ஆகவே அப்புவின் தன் மாத்திரை ரசம் என்னும் கோட்பாடு வந்துள்ளது. எதை சுவைத்துப் பார்க்க நாம் விரும்பினாலும் நம் நாவில் ஊறும் உமிழ்நீரோடு கலக்கிச் சுவைத்துப் பார்க்கிறோம்.

நீரைவிட ஒடுங்கிய நிலையில் இருப்பது நிலம். இப் பரந்த மண்ணுலகில் நம் வாசத்துக்கென்று அமைந்தது

கால்பங்கு. மற்றதெல்லாம் நீரில் மூழ்கியதாகிறது. மணம் மண்ணினுடைய தன் மாத்திரை. மூக்கின் துணைகொண்டு நாம் பிருதிவியின் மணத்தை முகக்கின்றோம். இந்த ஐம் பெரும் பூதங்களும் சிருஷ்டிக்குப் பயன்படுகின்றன. எனவே இவைகளை உண்டுபண்ணிய கடவுள் ஐவகை எனும் பூதமாதியை வகுத்தவர் என இயம்பப்படுகின்றார். வகுத்தல் என்னும் சொல் படைத்தல் எனப் பொருள் படுகிறது.

ஓர் உடலின் மூலம் தன் இயல்பை விளக்குகின்ற ஆத்மாவுக்கு ஜீவாத்மா என்று பெயர். உடல் உண்டா வதற்கு ஐம்பூதங்கள் முற்றிலும் அவசியமானவை. ஆகாசம் மற்ற பூதங்களுக்கு இருப்பிடமாகிறது. ஓசை ஒலியைக் கிரகிப்பதற்கும் அது இன்றியமையாதது. ஏனைய நான்கு பூதங்கள் சேர்ந்து உடல் உண்டாதற்குத் துணைபுரிகின் றன. இந்த நான்கு பூதங்களின் சேர்க்கையும் செயல்களு மின்றி உடலை அமைக்க எந்த ஜீவனுக்கும் இயலாது. ஜீவாத்மாக்களைப் பொதுவாக நிலைத்திணை என்றும் இயங்கு திணை என்றும் இரண்டு பிரிவுகளாகப் பிரிக்கிறோம். நிலைத் திணை அசரம் என்று இயம்பப் படுகிறது. இயங்குதிணை சரம் என்று சொல்லப்படுகிறது. மலையே ஒருவிதத்தில் ஓர் உயிர் ஆகிறது. ஆனால் அதன்கண் பிருதிவி என்னும் ஐந்தாவது பூதத்தைக் காண்பது போன்று ஏனைய மூன்று பூதங்களைக் காண இயலுவதில்லை. மரம் செடி கொடிகள் நிலைத்திணையைச் சேர்ந்தவைகளாகின்றன. இத்தகைய நிலைத்திணைகள் நிலத்திலும் தென்படுகின்றன, நீரினுள்ளும் தென்படுகின்றன. மரம் செடி கொடிகளின் வேறுபாடு களும் வகைகளும் நிலத்தின்கண் பெருமிதமாய் இருக்கின் றன. நம் தலையின்மீது ரோமங்கள் முளைப்பதுபோன்று

அவைகள் நிலத்தில் தென்படுகின்றன. நீரினுள் அவைகளின் வேறுபாடுகளும் தோற்றமும் பெருமிதமாய் இல்லை. எனினும் நீர் நிலம் ஆகிய இரண்டு பூதங்களிலும் அசரம் என்னும் நிலைத்திணைகள் தோன்றிக்கொண்டிருக்கின்றன.

இனி, இயங்குதிணை முதல் முதல் நீரில் உண்டானது என்பது ஐதிகம். நீரினுள் அசைந்து திரியும் ஜந்துக்கள் அனைத்துக்கும் மச்சம் என்பது பொதுப்பெயராய் இருக்கிறது. கடவுள் எடுத்துள்ள அவதாரங்களுள் மத்ஸ்ய அவதாரம் முதலாவது ஆகிறது. இயங்குதிணையாக வடிவெடுக்கும் ஆத்மா வாழ்க்கையில் ஒரு பெரிய முன்னேற்றமடைந்துள்ளது என்று இயம்பலாம். இடம்விட்டு இடம் போகின்ற உயிர் தான் வளர்தற்கேற்ற வசதிகளை வேண்டியவாறு செய்துகொள்ள முடியும். எனவே இயங்குதிணைகளுள் நீரினுள் தோன்றியவைகள் கடவுளின் முதல் தோற்றம் என்று பெருமைப்படுத்தப்படுகின்றன. அதன் பிறகு நீரினுள் உள்ள உயிர்களுள் சில நிலத்திலும் வந்து சஞ்சரிக்க முயற்சி செய்தன. அம் முயற்சியில் அவைகள் பெரிதும் வெற்றிபெற்றன. ஆமை, தவளை, பாம்பு வகைகள், நீர், நிலம் ஆகிய இரண்டு பூதங்களிலும் இருப்பதுண்டு. இவைகளைத் தொகுத்து இவைகளின் பிரதிநிதியாக கூர்மம் அல்லது ஆமை எடுத்துக்கொள்ளப்படுகிறது. கூர்ம அவதாரம் இரண்டாவது இடம் பெறுகிறது. பெரும்பாலும் நிலத்தில் இருந்துகொண்டு நீர்ப்பாங்கான நிலத்தில் பற்று வைக்கும் இயங்குதிணைகள் இருக்கின்றன. அவைகளுள் வராகம் அல்லது பன்றி மிக முக்கியமானது. எனவே மேல் நிலைக்கு இயங்குகின்ற உயிர்வகைகளுள் வராக அவதாரம் மூன்றாவது இடம் பெறுகிறது. பிறகு விலங்கு நிலைக்கும் மானுட நிலைக்கும் இடைத்தரத்திலுள்ள உயிர்வகைகள்

இருக்கின்றன. விலங்கு நிலையைத் தாண்டி மானுட நிலைக்கு அருகில் வரும் இயல்புகள் அவ்வுயிர்களிடத்துப் பெரிதும் தென்படுகின்றன. அவைகள் அனைத்துக்கும் பொதுவாய் இருப்பது நான்காவது அவதாரமாகிய நரசிம்ம அவதாரம். மானுட இயல்பும் விலங்கின் இயல்பும் இங்கு சந்திக்கின்றன. அடுத்தபடியாக மானுடத் தோற்றம் முழுதும் அமைந்து விட்ட வடிவம் ஒரு குள்ளன் ஆகின்றான். அதற்கு அறிகுறியாக ஐந்தாவது அவதாரமாகிய வாமன அவதாரம் வருகிறது. மானுட இயல்புகளும் மானுடக் குறைபாடுகளும் நிறைந்துள்ள ஜீவர்களுக்குப் பிரதிநிதியாக ஆறாவது அவதாரமாகிய பரசுராமாவதாரம் வருகிறது. மானுட வடிவத்தில் குறையொன்றுமில்லாத நிறை நிலைக்கு எடுத்துக்காட்டாக தசரதராம அவதாரம் வருகிறது. இங்ஙனம் கல் நிலையிலிருந்து முற்றிலும் பரிபக்குவம் அடைந்துள்ள நிறை மனிதனுடைய நிலைபரியந்தம் எண்ணிறந்த ஜீவகோடிகள் இருக்கின்றன. அவைகளை அளந்தெடுக்க எவர்க்கும் இயலாது. இயற்கையின்கண் வெவ்வேறு இடங்களில் வெவ்வேறு பாங்குடைய ஜீவர்கள் வாழ்ந்து வருகின்றன. இவை யாவையும் தொகுத்து அதனுள் அசரசர பேதமான யாவையும் வகுத்து என்று தாயுமானவர் கூறுகின்றார்.

ஒன்றேடொன்று மாறுபடுகின்ற அனந்தங்கோடி ஜீவர்களைக் கடவுள் உண்டு பண்ணியுள்ளார். இத்தனை வித உயிர்வகைகள் எதற்காக வாழ்ந்திருக்கின்றன என்பது கேள்வி. இவைகள் அனைத்தும் தெரிந்தோ தெரியாமலோ ஒரே லக்ஷியத்தை நாடி முயன்றுவருகின்றன. மேற்போக்காகப் பார்க்குமிடத்து உயிர் வாழ்ந்திருப்பது அவைகளின் லக்ஷியமாகத் தோன்றுகிறது. ஒரு விதத்தில் அதுவும் அவைகளின் லக்ஷியமே. ஆயினும் உயிர் வாழ்க்கையில்

எந்த உயிர்க்கு வெற்றி அதிகம் என்பது கேள்வி. பல படித்தரங்களில் வாழ்க்கையில் ஈடுபடுதல் மூலம் உயிர்களுக்கு அறிவு வளர்ச்சி உண்டாகிறது. சிற்றுயிர்களுக்கும் அறிவு வளர்ச்சி உண்டா என்பது கேள்வி. அறிவு வளர்ச்சி இருக்குமாயின் அது எப்படிஉண்டாகிறது என்பது அடுத்த கேள்வி. இதைச் சிறிது ஆராய்ந்து பார்ப்போம். உணவு தேடி உயிர்கள் வாழ்ந்திருக்கின்றன. உணவில்லாது எவ்வுயிரும் வாழ்ந்திருக்க முடியாது. இயற்கையின் அமைப்பில் ஓர் உயிரின் உடல் மற்ருேர் உயிர்க்கு உணவு ஆகிறது. இயற்கையை முறையாகத் துருவி ஆராய்கின்றவர்களுக்கு இவ்வுண்மை புலனுகும். மண்ணில் உள்ள உயிர்ச்சத்து மரம் செடி கொடிகளுக்கு உணவாகிறது. மரம் செடி கொடிகள் ஊர்வன, பறப்பன, நடப்பன ஆகிய உயிர் வகைகளுக்கு உணவாகின்றன. ஊர்வன, பறப்பன, நடப்பன தம்முள் ஒன்றுக்கு ஒன்று உணவு ஆகிவருகின்றன. இத்திட்டம் குறைபாடுடையதாகவோ, உயிர்வதை என்னும் கொடுமை உடையதாகவோ சிலர்க்குத் தோன்றலாம். உண்மையில் இந்த அமைப்பின் மூலம் உயிர்கள் ஒன்றை ஒன்று தாக்கவும், தன்னையே பாதுகாக்கவும் முயன்று வருகின்றன. இந்த இரண்டுவித முயற்சிகளும் அறிவு வளர்ச்சிக்குப் பெரிதும் துணைபுரிகின்றன. எதிரிகளிடத்திருந்து தம்மைப் பாதுகாத்துக்கொள்ள உயிர்கள் சாமர்த்தியமாக முயன்றுவருகின்றன. தங்களுக்குத் தேவையாய் இருக்கும் உணவு வகைகளைத் தேடிக்கொள்ளுதலிலும் அறிவுத்திறனை வெளியிடுகின்றன. அறிவற்ற சிற்றுயிர்கள் என்று பகரப் படுபவைகள் தற்பாதுகாப்பிலும், உணவைத் தேடுதலிலும் அறிவு நுட்பத்தை வெளியிடுகின்றன. வாழ்க்கையில் மேல் நிலைக்கு வரவரத் தங்களுக்குத் தேவையாய் உள்ள

வசதிகளைத் தேடிக்கொள்ளுதலிலும் உயிர் வகைகள் தமது அறிவை வெளியாக்குகின்றன. அற்புதமான பாங்கில் கூடுகள் கட்டுவது, வளைகள் தோண்டுவது முதலிய முயற்சிகளில் மனிதனைவிட மேம்பட்டவைகளாகச் சில சிற்றுயிர் வகைகள் இலங்கி வருகின்றன. அறிவில் மேல் நிலைக்கு வருகின்றபொழுது எதிர் காலத்துக்காக உணவைச் சேகரித்துப் பாதுகாத்து வைப்பதிலும் உயிர் வகைகள் தமது திறனை வெளியிடுகின்றன. பருவம் மாறி அமைவதற்கு ஏற்ப இடம் மாறிப்போய் வசதியான இடங்களில் குடியிருப்பதிலும் தங்கள் பகுத்தறிவை அவைகள் வெளியிடுகின்றன. பருவ மாறுதலினின்று உண்டாகும் வெப்பத்தையோ அல்லது தணுப்பையோ தவிர்த்தல் பொருட்டுச் சில பறவைகள் பல்லாயிரம் மைலுக்கு அப்பால் பறந்துபோய்ப் புதிய இடங்களில் வசிக்கின்றன. பழைய இடங்களுக்குத் திரும்பி வரும்பொழுது முன்பு வசித்திருந்த மரங்களுக்கும் மலைச் சிகரங்களுக்கும் சொந்தம் பாராட்டி வந்து சேருகின்றனவாம். மீன் வகைகளில் சில நீரினுள் நெடுந்தூரம் இடம்மாறிப் போகின்றனவாம். இங்ஙனம் படிப்படியாக உயிர்கள் வாழ்க்கை என்னும் போராட்டத்தில் அறிவை வளர்த்து வருகின்றன. வாழ்க்கையில் போட்டியும் போராட்டமும் இல்லாவிட்டால் அறிவு வளர்ச்சிக்கு இடமில்லாது போய்விடும். அறிவு வளர்ச்சியில் மிகமேலான நிலைக்கு வந்திருப்பவன் மனிதன். தனது அறிவை முன்னிட்டே உயிர்வகைகளுள் அவன் சாலச் சிறந்தவன் எனக் கருதப்படுகின்றான். இக்கோட்பாட்டை நல்லறிவையும் வகுத்து என்னும் சொல்லில் தாயுமானவர் அமைத்து வைக்கின்றார்.

மற்ற உயிர்கள் தாம் பெற்ற அறிவு அனுபவத்தைத் தங்களுடைய இயல்பாக மாற்றிச் சந்ததியினிடத்து வழங்கு

-கின்றன. ஆனல் மனிதனே இந்த ஏற்பாட்டில் மற்ற உயிர் களிடத்திருந்து மாறுபட்டவன் ஆகின்றான். மனிதர் எல் லார்க்கும் ஒரேவித இயல்பு வந்தமைவதில்லை. விலங்கின் இயல்புடைய மக்கள் உண்டு; பறவைகளின் இயல்புடைய மக்கள் உண்டு; எத்தனைவித உயிர்வகைகள் உலகில் இருக் கின்றனவோ அத்தனைவித இயல்புகளை மனிதனிடத்துக் காணலாம். அதற்குமேல் மனிதன் தனது அறிவை நூல் களாக அமைத்து மற்றவர்களுக்கு வழங்க வல்லவன் ஆகின் றான். நெடுங்காலத்துக்கு முன்பு ஏதேனும் ஒரு துறையில் ஒரு மனிதன் பெற்ற அனுபவம் நெடுங்காலத்துக்குப் பிறகு உதிக்கிற மனிதனுக்கு ஒரு நூலாக அமைத்து வழங்கப்பட் டிருக்கிறது. இங்ஙனம் கணக்கற்ற நூல்களை உண்டு பண் ணியது மனிதனுடைய தனிச் சிறப்பு ஆகும். இந்த அரிய கோட்பாடுகள் எல்லாம் இயற்கையில் மறைந்து கிடப்பவை களாம். மறைந்து கிடக்கும் அக்கோட்பாடுகளை அனுபவ பூர்வமாக உணர்ந்து அவைகளை நூல்களாக அமைத்து வைப்பது மனிதனுடைய தனி முயற்சி. அதனல் நாளடை வில் மனிதனுடைய அறிவுக்கு நஷ்டம் ஒன்றும் ஏற்படாது. வளர்ச்சியே உண்டாய்க்கொண்டு வருகிறது. மனிதனிடத் துள்ள இந்தச் சிறப்பு இயல்பை மறையாதி நூலையும் வகுத்து என்று தாயுமானவர் இயம்புகின்றார்.

நூல்களைப் பொதுவாக இரண்டு பாங்குடையவை களாகப் பிரித்துவிடலாம். இவ்வுலக வாழ்க்கையைத் திறம் பட்ட வாழ்க்கையாக மாற்றியமைப்பதற்கென்று அமைந்த நூல்களெல்லாம் இரண்டாந்தரமானவைகளாகக் கருதப் பட்டன. ஏனென்றால் எவ்வளவு திறம்பட மனிதன் இவ்வு லகில் வாழ்ந்திருந்தாலும், அதற்கென்று எவ்வளவு சாமர்த் தியமாக அவன் தன் அறிவைப் பயன்படுத்தினலும் இறுதி

யில் இவ்வுலக சம்பந்தமான அனைத்தும் அழிந்துபட்டுப் போம் தன்மையுடையவைகள் ஆகின்றன. அழிந்துபட்டுப் போகின்ற பொருள்களைப் பற்றிய நூல்கள் எல்லாம் இரண்டாந்தரமானவைகளாகக் கருதப்பட்டன. முதல் தரமான நூல்கள் சில இருக்கின்றன. அவைகள் உண்டானதும் மனிதனுடைய அறிவின் விளைவாம். அழிந்து பட்டுப்போம் உலகிலே வாழுகின்ற மனிதன் தானும் அழிந்துபட்டுப் போகின்றானா அல்லது அழியாத நிலை ஒன்று அவனுக்கு உண்டா என்ற ஆராய்ச்சியை மக்களுள் சீரியர் சிலர்செய்து பார்த்தனர். அந்த ஆராய்ச்சியில் அவர்கள் வெற்றி மிக அடைந்தனர். மானுட வாழ்க்கையின் முடிவான குறிக்கோள் உணவைத் தேடுவதும், எதிரியை விரட்டுவதும், தன் இனத்தைப் பெருக்குவதும் அல்ல. அதைவிட மேலான குறிக்கோள் ஒன்று வாழ்க்கையில் உண்டு என்பதை அவர்கள் கண்டு அறிந்தனர். அதற்கென்று அமைந்துள்ள நெறியான வாழ்க்கைக்குச் சமய அனுஷ்டானம் என்னும் பெயர் வந்தது. இங்ஙனம் ஆன்றோர்களால் நிறுவப்பெற்ற சமயங்கள் பல இருக்கின்றன. எங்ஙனம் உணவு வகைகள் கணக்கற்றவைகள் இருக்கின்றனவோ அங்ஙனம் சமயங்களும் பலதரப்பட்டவைகள் இருக்கின்றன. ஒருவிதத்தில் அவைகளை எண்ணிக்கையில் அடக்கமுடியாது என்றே இயம்பலாம். மிக அண்மையில் தோன்றிய ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் சமயங்களைப்பற்றித் தமது கருத்தை வெளியிட்டார். எத்தனை மனிதர்களோ அத்தனைவித சமயங்கள் உலகில் உள என்பது அவர் கருத்து. ஏனென்றால் வாழ்க்கை முறையில் ஒரு மனிதன் முற்றிலும் மற்றொரு மனிதனை ஒத்திருப்பதில்லை. ஒவ்வொரு மனிதனும் தன் இயல்புக்கு ஏற்றபடி சமய அனுஷ்டானத்தைக் கடைப்பிடித்து வருகிறான். இக்கோட்

பாட்டைத் தாயுமானவர் தம்போக்கில் பகர்ந்துள்ளார். சைவம் முதல் அளவு இல் சமயமும் வகுத்து என்கின்றார் அவர். அளவு இல் என்பது அளவில்லாத எனப் பொருள் படுகிறது. உலக முழுதுக்கும் பொதுவாக ஏதேனும் ஒரு சமயம்தான் அமையவேண்டும் என்று கருதி வருகின்றவர் கள் கருத்தில் வாங்கிக்கொள்ள வேண்டிய சிறந்த கோட் பாடு இது ஆகும். இறைவனுடைய படைப்பில் உணவு வகைகள் எண்ணிக்கையில் அடங்காதிருக்கின்றன. மனிதன் எடுக்கும் வடிவங்களும் வெவ்வேறு அடையாளங்களைக் கொண்டிருக்கின்றன. ஒரு மனிதனுடைய அச்சு அமைப் பில் இன்னொரு மனிதன் இருப்பதில்லை. மனதின் இயல் பும் ஒவ்வொரு மனிதனுக்கும் ஒவ்வொன்றாய் அமைந் திருக்கிறது. வாழ்க்கை முறைகளும் வெவ்வேறு வகைப் பட்டவைகளாயிருக்கின்றன. அங்ஙனம் சமயங்களும் பல இருக்கின்றன என்பதை மனிதன் மறந்துவிடலாகாது. சமயங்கள் பலஇருப்பதினால்தான் அவரவர் மனதுக்குகந்த மதம் ஒன்றை அனுஷ்டிக்க மனிதனுக்கு இயலுகின்றது.

இந்த மதங்கள் எல்லாம் மனிதனை வெவ்வேறு நிலைக் குக் கொண்டு சேர்க்கின்றனவா என்பது அடுத்த கேள்வி. மலை உச்சிக்குப் போக முயலுகின்றவர்கள் மலையைச் சுற்றி லும் நின்றுகொண்டு மேல்நோக்கி நடக்க முயலலாம். புறப் படும் தறுவாயில் ஒவ்வொரு மனிதனும் ஒவ்வோர் இடத்தில் நிற்பவனாகின்றான். புறப்படுகின்ற இடபேதத்தை முன் னிட்டுப் புறப்படும் இடங்கள் பல என்று பகரலாம். அங்ஙனம் சமயங்கள் பல இருக்கின்றன. மலை உச் சிக்கு ஏற ஏற வழிகள் எல்லாம் குவிந்து ஒன்று கூடி வருகின்றன. மலை உச்சி என்னும் நிலை இறுதியில் ஒன்றே யாம், அங்ஙனம் சமயங்கள் எல்லாம் மார்க்கங்கள்

ஆகின்றன. அல்லது அவைகளை நெறிகள் என்று நவிலலாம். அவை யாவும் ஒரே குறியின்கண் ஆத்ம சாதகர்களை எடுத்துச் செல்கின்றன. அந்தக் குறி யாது என்னும் கேள்வி அடுத்தபடியாக வரலாம். அது இப்பிரபஞ்ச வாழ்க்கைக்கு அப்பாற்பட்டது. இதனோடு அதைச் சீர்தூக்க முடியாது. ஒப்பிடுதற்கு ஆங்கு வேறு ஒன்றும் இல்லை. ஆதலால் அதை மனம் மொழி கடந்த மோனநிலை என்று மேலோர் மொழிந்தனர். அந்த மோன நிலையில் வித்தியாசத்துக்கு இடமில்லை. ஒருவிதத்தில் நம்முடைய அயர்ந்த நித்திரையோடு அதை ஒப்பிடலாம். அயர்ந்து தூங்குகின்றவர்களுக்கிடையில் விழிப்பில் உள்ள வேற்றுமை கிடையாது. வேற்றுமையைக் கடந்த மோன ஒற்றுமை நிலை அது. ஆனால் அது அஞ்ஞானத்தில் மறைந்து கிடக்கிற நிலை. சமயம் காட்டுகின்ற குறியோ ஞானத்தில் தெளிந்து திரண்டுகிடக்கும் பேரறிவு மோன நிலை. அந்த நிலையில் உயிர்கள் அனைத்தும் பேரறிவுப் பெருநிலையில் ஒன்றுபட்டு விடுகின்றன. ஆதலால் ஆங்கு உண்மையான சமரஸம் திகழ்கிறது. லட்சியத்தில் ஒன்றுபட்ட நிலைக்குச் சமரஸம் என்று பெயர். இக்கோட்பாட்டைத் தாயுமானவர் மேல் சமயம் கடந்த மோன சமரஸம் வகுத்த நீ என்று கடவுளை அழைக்கின்றார்.

அறுசுவைகள் பொருந்திய விதவிதமான உணவு வகைகளை ஏராளமாகச் சமைத்து வைப்பது பெரிய செயல் ஆகும். அவ்வுணவு வகைகளை வழங்கப் பெறுபவர்களுக்குச் சிறிதேனும் பசி இல்லாது போய்விட்டால் அவைகளை ஆயத்தப் படுத்தியதிலும் பயன் இல்லை, வழங்குவதிலும் பயனில்லை. பசி மிக உடையவர்களும் ஜீரணசக்தி படைத்திருப்பவர்களும் பலபேர் கூடி அவ்வுணவு வகைகளை உண்ண அவாவுடையவர்களாய் இருப்பார்களாகில் அவைகளைச் சமைத்த

தின் பயன் அப்பொழுது நிறைவேறுகிறது. சமயங்களின் பயனும் அத்தகையதேயாம். எண்ணிக்கையில் அடங்காத சமயங்கள் மக்கள் நலத்துக்காக என்று அமைந்திருக்கின்றன. சமயங்களை அனுஷ்டிக்கின்றவர்கள் மேன் மக்கள் ஆகின்றனர். இகலோக வாழ்க்கையை அவர்கள் நன்கு வாழ்ந்து வருகின்றனர். பாரமார்த்திகப் பெருநிலைக்கும் அன்னவர் தகுதியுடையவர் ஆகின்றனர். ஆனால் அத்தகைய அருள் நோக்கம் மக்களுக்கு அமையாது போய்விட்டால் சமயங்கள் பல இருந்தும் அவைகள் பயனற்றவைகள் ஆய் விடுகின்றன. சமய அனுஷ்டானங்களின் மூலம் சாதகர்கள் கடவுளுக்கு அருகில் வருகின்றனர். கடும்பசி மக்களை உணவின்கண் ஈடுபடுத்துவது போன்று அருள்தாகம் அவர்களைச் சமயங்களிடத்து ஈடுபடுத்துகின்றன. பசி அதிகரிக்குமளவு ஒரு மனிதன் வலிவற்றவன் ஆய்விடுகின்றான். ஆனால் அருள் தாகம் அதிகரிக்குமளவு சமயங்களை அனுஷ்டிக்கின்ற ஆர்வமும் ஊக்கமும் வலிவும் ஆத்ம சாதகன் ஒருவனுக்குப் பெருமிதமாய் உண்டாகின்றன. அருள்தாகம் அதிகரிக்குமளவு சாதகனுடைய இயல்பு இன்னியல்பு ஆகிறது. பசி அக்னிக்கு ஒப்பானது. தீயிலிட்டுக் காய்ச்சப்படும் நீர் கொதிக்கிறது. பசி அங்ஙனம் மனிதனிடத்துப் பதை பதைப்பை உண்டு பண்ணுகிறது. அருள்தாகமோ அதற்கு நேர்மாறானது. தணுப்படைந்த நீர் உறைபனியாக அமைதியுற்றுக் கிடக்கிறது. அருள் நாட்டம் மிகுந்திருக்கும் சாதகன் தெய்விகமான இன்னியல்பு படைத்தவனாகின்றான். ஆகவே அருள் நிலையை தண் அருள் என்று தாயுமானவர் சிலாகித்துக் கூறுகின்றார். அத்தகைய அருள்தாக நிலையைத் தமக்குத் தந்தருளலாகாதா என்று தெய்வத்திடம் அவர் விண்ணப்பிக்கிறார். உன்னை நான் அணுகவும் தண்ணருள் வருக்க விலையோ என்பது அவருடைய வாக்கு.

கடவுள் எங்கும் நிறைந்திருக்கிறார் என்பது கோட்பாடு. மக்கள் அனைவருடைய உள்ளத்திலும் அவர் வீற்றிருக்கிறார் என்பது அனைவர்க்கும் ஒப்பமுடிந்த கோட்பாடு ஆகும். உள்ளத்தினுள்ளே கடவுள் இலங்குகின்றார். எனினும் அவருடைய சான்னித்தியத்தை அறிந்துகொள்ள எல்லார்க்கும் இயலுவதில்லை. வலிவு நிறைந்த காந்தக்கல் ஒன்றிருக்கிறது. அதற்குப் பக்கத்தில் மண்ணோடு கலந்த இரும்பு இருக்கிறது. மாசுபடிந்துள்ள அந்த இரும்பு காந்தத்தினிடம் கவரப்படுவதில்லை. காந்தத்துக்கே உரியது இரும்பு. இரும்பைக் கவர்தற்கென்றே அமைந்தது காந்தம். ஆயினும் மண் மயமான இரும்புக்கும் காந்தத்துக்கும் ஒரு தொடர்வும் இல்லாது போய்விடுகிறது. நீக்கமற எங்கும் நிறைந்துள்ள கடவுள் மனிதனுடைய நெஞ்சகத்தை அவருடைய சிறப்பான ஆலயமாகக் கொண்டுள்ளார். ஆனால் நெஞ்சகத்தை மனிதன் பொய்யுடன் பொருத்தி விடுவானாகில் அந்த நெஞ்சகத்தில் இலங்கும் தெய்வம் மறைந்து பட்டுப்போய்விடுகிறார். எங்கும் படிகிற சூரிய வெளிச்சம் பாதரசம் பூசிய கண்ணாடியின் மீது தனது முழு மகிமையோடு பிரகாசிக்கிறது. பாதரசம் பூசிய கண்ணாடியின்மீது தென்படுகிற சூரியன் மூலசூரியனுக்கு ஒப்பானது. ஆனால் அக்கண்ணாடியின்மீது சேற்றை நிறையப் பூசிவிட்டால் சூரிய வெளிச்சம் தன்மீது படுதற்கிடையில் சூரியனுடைய சான்னித்தியத்தை அங்குக் காண்பது அரிது. பொய்மையில் மூழ்கிக் கிடக்கின்றவர்களுடைய நெஞ்சம் சேறுபூசிய கண்ணாடி போன்று ஆத்மப் பிரகாசத்துக்குப் பயனற்றதாய் விடுகிறது. இக்கோட்பாட்டை பொய்வளரும் நெஞ்சினர்கள் காணாத காட்சியே என்று தாயுமானவர் இயம்புகின்றார்.

சத்திய விரதத்தில் நிலைநிற்பவர்களுடைய பாங்கு எத்தகையது என்பது அடுத்தபடியாக எடுத்துக்கொள்ளப்

படுகிறது. சத்திய விரதத்துக்கு நிகரான நெறி இல்லை. அதற்கு நிகரான தபசு இக்காலத்தில் இல்லை. சத்தியத்தைப்பற்றி மக்கள் கொண்டுள்ள கருத்துக்கள் பலதரப்பட்டவைகளாகின்றன. உலக நடைமுறைக்கு ஒப்ப நடப்பது ஒருசாரார்க்கு சத்திய விரதமாகிறது. மனம், மொழி, மெய் ஆகிய திரிகரணங்களும் ஒத்திருப்பது இன்னும் சிலருக்கு சத்திய விரதமாகிறது. உலக நடைமுறைகள் அனைத்தையும் ஒதுக்கி வைத்துவிட்டு மெய்ப்பொருள் ஆகிய கடவுள் தத்துவத்தையே நிலைநாட்டுவது வேறு சிலருக்கு சத்திய விரதமாகிறது. கண்ணாடியின்மீது படிந்துள்ள சேற்றைத் தண்ணீரில் போட்டுக் கழுவினால் சேறு அகன்று போய்விடுகிறது. ஆனால் கண்ணாடி தண்ணீரில் கரைந்துபோய் விடுவதில்லை. பொய்யை அகற்றுமளவு அங்ஙனம் நெஞ்சத்தில் தெளிவு தானாகவே உண்டாகிறது. மேலும் மெய்ம்மையையே மொழிகின்றவர்களுடைய உள்ளம் பாதரசம் பூசிய கண்ணாடி போன்று முற்றிலும் பரிபக்குவம் அடைகிறது. பரிபக்குவம் அடைந்துள்ள மனதில் மெய்ப்பொருளாகிய பரம்பொருள் உள்ளபடி விகசிக்கின்றார். பரம்பொருள் ஞான சூரியன். மனம் தெளிந்திருப்பவர்கள் அந்த ஞான சூரியனுடைய சான்னித்தியத்திலிருப்பதால் தாங்களே நிறை ஞானிகள் ஆய்விடுகின்றனர். மனத்தகத்து மிளிரும் அப்பரமன் மனத்துக்குள் கட்டுண்டு போய்விடுகிறார் என்று நாம் கருதலாகாது. ஜன்னலின் வாயிலாகத் தென்படும் வெட்டவெளி ஜன்னலில் கட்டுண்டுபோய் விடுவதில்லை. தூய உள்ளத்திலே திகழும் தெய்வம் அவ்வுள்ளத்தின்கண் கட்டுண்டு விடுவதில்லை. எல்லையில் அடங்காத அகண்டப் பொருள் எல்லைக்கு உட்பட்டிருக்கும் நெஞ்சத்திலும் மிளிர்ந்துகொண்டிருக்கின்றார். இக்கோட்பாடுகளை எல்லாம்

திரட்டி பொய்யில்லா மெய்யர் அறிவில் போதபரி பூரண அகண்டிதா காரமாய் தெய்வம் இலங்குகின்றார் என்று தாயுமானவர் காட்டுகிறார். போதம் என்னும் சொல் ஈண்டு நிறை ஞானத்தைக் குறிக்கிறது. ஆத்மப் பிரகாசம் அளவில் அடங்காத வெட்டவெளி போன்று எங்கும் நிறைந் திருக்கிறது. தூய நெஞ்சம் படைத்த ஞானி உடல் எடுத் திருப்பவன் ஆதலால் ஓர் இடத்திலிருந்து மற்றோர் இடத் துக்குப் போகவும் திரும்பிவரவும் கூடும். அதை முன்னிட்டு அவன் உள்ளத்தில் ஒளிரும் ஆத்மப் பிரகாசத்துக்குப் போக்குவரவு உண்டா என்னும் கேள்வி எழுகிறது. உருண் டோடுகின்ற அலையின் மீது தென்படுகிற சூரியனும் உருண் டோடுவது போன்று காணப்படுகிறான். ஆயினும் அலை கின்ற அலையுடன் சேர்ந்து அசைபவன் அல்லன் சூரியன். அசைகின்ற நெஞ்சம் படைத்துள்ள ஞானியினிடத்து மெய்ப் பொருளாகிய கடவுள் அசைவற்றிருக்கிறார். இக்கோட் பாட்டை போக்கு வரவற்ற பொருளே என்னும் சொற் களால் அவர் சித்தரிக்கின்றார்.

வேதங்கள் யாவும் சொல் மயமாய் இருக்கின்றன. மொழி என்னும் கருவியைக்கொண்டு மெய்ப்பொருளை விளக்க மேலோர் முயன்று வந்திருக்கின்றனர். மொழி சொரூபமாயுள்ள வேதங்கள் கடவுளை விளக்குதற்கென்றே அமைந்துள்ளன. உண்மையில் கடவுள் விளக்கம் மொழியில் அடங்கிவிடுவதில்லை. அவருடைய சொரூபத்துக்கு ஒரு முடிவும் கிடையாது. அத்தகைய பெரிய பொருள் ஓசை ஒலி வடிவங்களிலும் இலங்குகின்றார். ஓசை ஒலி வடிவங்களில் இலங்குகின்ற பகுதிக்கு நாதப் பிரம்மம் என்றும் சப்தப்பிரம் மம் என்றும் பெயர். இந்த நாதங்களை எல்லாம் ஒன்றாகத் தொகுத்து உணருங்கால் அது பிரணவம் அல்லது ஓங்காரம்

ஆகிறது. ஓங்காரமானது நம்மால் உச்சரிக்கக்கூடிய நிலையில் இருக்கின்றபொழுது அதுஅகர, உகர, மகரமாகியமாத்திரப் பிரணவம் என்று மொழியப்படுகிறது. உச்சரிப்பைக் கடந்த நிலையில் இருக்கின்றபொழுது அது அமாத்திரப் பிரணவம் என்று இயம்பப்படுகிறது. சொல் அனைத்துக்கும் அது உச்ச நிலை. அது முடிவான நிலை ஆகிறது. இக்கோட்பாட்டை **தெய்வமறை முடிவான பிரணவசொரூபியே என்று** தாயுமானவர் போற்றுகின்றார்.

பிறகு அப்பெரிய பொருள் சித்தத்துக்கு அப்பால் இருக்கிறார் என்பதையும் முக்திக்கு அவரே மூல காரணமாய் இருக்கிறார் என்பதையும் உயிர்களுக்கெல்லாம் அவரே தென்முக மூர்த்தியாயிருந்து அருள்புரிகிறார் என்பதையும் அவர் நிறை ஞான சொரூபம் என்பதையும் **சித்தாந்த முத்தி முதலே சிரகிரி விளங்கவரு தக்ஷிண மூர்த்தியே சின்மயானந்த குருவே** என்னும் தொடரில் அடக்கி வைத்துள்ளார். இக்கருத்துக்கள் யாவையும் மேற்கூறிய அவர் பாடலில் காணலாம்.

## சின்மயானந்த குரு - 5

ஐந்துவகை யாகின்ற பூதபே தத்திளுல்
ஆகின்ற ஆக்கைநீர்மேல்
அமர்கின்ற குமிழியென நிற்கின்ற தென்னநான்
அறியாத காலமெல்லாம்
புந்திமகி ழுறவுண் டுடுத்தின்ப மாவதே
போந்தநெறி என்றிருந்தேன்
பூராய மாகநின தருள்வந் துணர்த்தஇவை
போனவழி தெரியவில்லை
எந்தநிலை பேசினும் இணங்கவிலை யல்லால்
இறப்பொடு பிறப்பையுள்ளே
எண்ணிஞல் நெஞ்சது பகீரெனுந் துயிலுரு(து)
இருவிழியும் இரவுபகலாய்ச்
செந்தழலின் மெழுகான தங்கம்இவை என்கொலோ
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிண மூர்த்தியே
சின்மயா னந்தகுருவே.

*நிலம், நீர், நெருப்பு, காற்று, வெளி ஆகிய இவ்வைந் துக்கும் ஐந்து பூதங்கள் என்று பெயர். இவைகளுள் வெளி அல்லது ஆகாசம் என்பது செயலற்றது. எங்கும் வியாபக மாய் ஏனைய நான்கு பூதங்களுக்கும் ஆதாரமாய் அது அமைந்திருக்கிறது. எண்ணிறந்த சூரிய மண்டலங்களுக்கு இருப்பிடமாய் இருப்பது வெளி. ஒரு சூரிய மண்டலத்துக் கும் மற்றொரு சூரிய மண்டலத்துக்கும் இடையிலிருப்பதும் வெளி. இது எங்கும் வியாபகமாய் இருப்பதால் நீல நிறம் படைத்திருப்பது போன்று தென்படுகிறது. தூரத்தில்*

உள்ள காட்சி நீல நிறமானது; பக்கத்தில் அதற்கு நிறம் ஒன்றும் கிடையாது. எனவே அதன்கண் தென்படுகிற நீல நிறம் வெறும் தோற்றமே ஒழிய உண்மையில் அதற்கு நிற மில்லை, செயலில்லை. ஆனால் அதன்கண் ஓசை ஒலிப்பதற்கு அது இடம் தருகிறது. எனவே சப்தம் ஆகாசத்தின் தன் மாத்திரை எனப்படுகிறது. மற்றபடி அதற்கு வேறு செயல் ஒன்றுமில்லை. வானவெளியின்மீது நாம் வசிக்கும் மண்ணுல கம் மிதக்கிக்கொண்டிருக்கிறது. மண்ணிலிருந்து உணவுப் பொருள்கள் உண்டாகின்றன. நம் உடல் அமைப்பை ஆராய்ந்து பார்த்தால் மண்ணினுடைய அம்சமாக எலும்பு, சதை, கொழுப்பு முதலியன வந்துள்ளன. பிறகு நீர்ப்பசை உடையதாக நம் உடல் இருக்கிறது. அதற்கடுத்தபடியாக உடல் முழுதும் கதகதப்பு நிறைந்திருக்கிறது. உடலினின்று கதகதப்பு நீங்கிவிட்டால் உடல் பிணமாய் மாறிவிடும். சுவாசிப் காற்றும் அதன் அமைப்புக்கு இன்றியமையாதது. சுவாசிப் பதன் மூலம் காற்று உடலினுள் சென்று அதன் பிராண னுக்கு ஆதாரமாய்க் கொண்டுவருகிறது. இத்தகைய அமைப்பு அலாதியாக மானுடர்க்கு ஏற்பட்டதென்று இயம்பலாகாது. மரம் செடி கொடிகள், பறவைகள், விலங்கு கள், மக்கள் ஆகிய எல்லா உயிர்களுக்கு உரிய உடல்கள் இந்த நான்கு பூதங்களில் ஆயிருக்கின்றன. ஆகாசம் என் னும் பூதத்தில் அவைகள் நிலைத்திருக்கின்றன. உடலுக்கு ஆக்கை என்பது ஒரு பெயர். இக்கோட்பாட்டை ஐந்து வகையாகின்ற பூத பேதத்தினால் ஆகின்ற ஆக்கை என்று தாயுமானவர் இயம்புகின்றார்.

இந்த ஆக்கையைப்பற்றிய உண்மை யாது என்று இனி ஆராய்ந்து பார்ப்போம். எரிகின்ற தீபத்துக்குப் புதிய எண்ணெய் ஓயாது வந்து பயன்பட்டுக் கொண்டிருக்கிறது.

எரிந்துபோன எண்ணெய் உருமாறிக் காற்றில் கலந்து மறைந்துபோய் விடுகிறது. திரும்பவும் செடியினிடத்துச் சென்று எண்ணெயாகும் தன்மை காற்றில் கலந்து போன அப்பொருளுக்கு உண்டு. அங்ஙனம் நம் உடலின் கண் இருக்கின்ற மண்ணின் கூறுபாடுகளாகிய எலும்பு, சதை, கொழுப்பு முதலியன ஓயாது மாறியமைந்து கொண்டிருக்கின்றன. நேற்று செடி மயமாய் இருந்த உணவுப் பொருள் இன்றைக்கு நம் உடலுக்குள் வந்துவிடுகிறது. இவ்வுடலினின்று அதன் வெவ்வேறு பகுதிகள் விரைவில் அல்லது நாளடைவில் திரும்பவும் மண்ணுக்குப் போய்விடுகின்றன. இப்படி ஓயாது மண்ணின் கூறுபாடு இடம் மாறி அமைந்துகொண்டிருக்கிறது. சில நாளைக்கு முன்பு சமுத்திர நீராயிருந்தது ஆவியாக மாறி மேலே போனது. பின்பு மழையாக அது கீழே வந்தது. நாம் அருந்துதற்கேற்ற நீராகி நமக்குச் சிறிது அகப்பட்டது. நம் உடலில் கொஞ்ச நாள் அது நிலைத்திருக்கிறது. திரும்பவும் ஆவியாக சுவாசத்தில் கலந்தோ, வியர்வையாக உடலினின்று வெளிவந்தோ அது நமக்கு அன்னியமானதாய்விடுகிறது. கதகதப்பு நமக்கு உணவின் மூலமாகவும் சூரியனிடத்திருந்து நேராகவும் வந்து கொண்டிருக்கிறது. கதகதப்பில் வாழ்க்கைக்குப் பயன்படும் பகுதி எரிகிற தீயில்போன்று ஓயாது மறைந்து கொண்டிருக்கிறது. புதிய கதகதப்பு உரு எடுத்து வருகிறது. நாம் சுவாசிக்கும் காற்றிலும் இதே மாறுபாடு ஓயாது நிகழ்ந்து கொண்டிருக்கிறது. சென்ற வாரம் பல்லாயிரம் மைல்களுக்கு அப்பால் பசிபிக் மஹா சமுத்திரத்தின் மீது இருந்த காற்று வேகமாக இடம் மாறி வந்து இன்றைக்கு நம் உடலினுள் புகுந்து உயிர் வாழ்க்கைக்குத் துணை புரிகிறது. நாளைக்கு நம்மைவிட்டு அது எவ்வளவு தூரம்

அப்பால் போய்விடுமென்பது நமக்குத் தெரியாது. இங்ஙனம் இந்த நான்குவகை பூதங்கள் ஓயாது இடம் மாறிக்கொண் டிருப்பதற்கிடையில் நமக்கு நாம் அமைத்துள்ள ஆக்கையில் தாற்காலிகமாகக் கொஞ்ச காலம் தங்கியிருந்து பிறகு அப் பால் போய்விடுகின்றன. அதற்கிடையில் இந்த உடல் சொரூபத்தை நம்முடைய நிஜசொரூபமென்று இதன்மீது நாம் வைத்திருக்கின்ற அபிமானத்துக்கு ஓர் அளவு இல்லை. இத்தகைய உடல் நமக்குச் சொந்தமாக எவ்வளவு காலத் துக்கு இருக்குமென்பது அடுத்த கேள்வி. நீரிலிருந்து நீர்க் குமிழி உண்டாகிறது. நீரினுடைய ஒருபகுதி மேல் மூடி போன்று அரை உருண்டையாக அமைகிறது. அதனுள் காற்று சிறிது அடைபட்டிருக்கிறது. நீரும் காற்றும் சேர்ந்து அத்தகைய வடிவு எடுக்கின்றபொழுது அதை நீர்க் குமிழி என்கிறோம். நீரின்மீது அது மிதந்துகொண்டிருக் கிறது. எக்காலத்தில் உடைந்து பட்டுப்போய்ப் பழைய படி நீராகவும், காற்றாகவும் அது கலந்துவிடும் என்பதை நாம் நிர்ணயிக்க முடியாது. அது மிக மிக நிலையற்றது. நம்முடைய உடலும் அதற்கு ஒப்பானது. எப்பொழுது இவ்வுடல் கூற்று கலந்து பட்டுப்போம் என்பது நமக்குத் தெரியாது. ஒரு நொடிப்பொழுதில் மனிதனுடைய உட லைச் சாம்பலாக்கி ஐம்பூதங்களாகப் பிரித்து விடுகிற ஆற்றல் மின்சக்திக்கும் அக்னிக்கும் இருக்கிறது. ஒரு மனிதன் இன்றைக்கு இருக்கின்றான். நாளைக்கு அவன் இல்லாது போய்விடுகின்றான். நாளைக்குத் தான் இருக்க மாட்டான் என்பதை இன்று அவன் நினைப்பதில்லை. தொன்றுதொட்டு இன்றுவரை தோன்றிய உடலங்கள் அனைத்தும் நீர்க்குமிழிபோன்று ஓயாது அழிந்து பட்டுக் கொண்டே இருக்கின்றன. இப்பொழுது இருக்கின்ற

உடலங்கள் எதிர்காலத்தில் இருக்கமாட்டா. நடைமுறையானது அப்படி இருந்தும் ஒவ்வொரு ஜீவனும் தன்னுடைய உடல் வாழ்க்கை என்றென்றும் நிலைத்திருக்கும் என்றே மனக்கோட்டை கட்டி வருகிறான். இக்கோட்பாட்டை நீர்மேல் அமர்கின்ற குமிழியென நிற்கின்ற தென்ன நான் அறியாத காலமெல்லாம் என்று அவர் பகர்கின்றார்.

உடலுக்கு அழிவு எந்த நொடிப்பொழுதில் வேண்டுமென்றாலும் அமைந்துவிடும். ஆனால் அதைப்பற்றி மனிதன் அறிந்துகொள்ளாதிருப்பது அவனுக்கு ஒருவிதத்தில் நலம் தருகிறது. தனக்கு இன்ன நாள் மரணம் வரப்போகிறது என்பதை மனிதன் அறிந்துகொண்டால் அவன் மகிழ்வுற்றிருக்க முடியாது; வாழ்க்கையில் ஊக்கம் கொள்ள முடியாது. தொண்டு கிழவனும் தான் இன்னும் நெடுங்காலம் உலகத்தில் இருக்கப் போவதாகவே எண்ணி வருகின்றான். அந்த எண்ணத்துடன் அவன் நின்றுவிடுவதில்லை. தனக்கு உடல் வாழ்க்கை நித்தியமானது என்பதைத் தனது செயல் மூலம் அவன் நிரூபிக்கின்றான். உணவு தேடுதல் வாழ்க்கையின் முக்கியமான நிகழ்ச்சி ஆகிறது. இது எல்லா உயிர்களுக்கும் பொதுவானது. உணவின் பொருட்டு அவை ஓயாது அலைந்து திரிகின்றன. அதற்குமேல் மனிதன் உடை அணிந்துகொள்ளுதற்காக என்று ஒரு தனி முயற்சி எடுத்துக்கொள்கின்றான். உடைக்காகவென்று விலங்குகளும், பறவைகளும் அலைந்து திரிகிறதில்லை. எங்கெங்கிருந்தோ பஞ்சு, பட்டு, உரோமம் முதலியவைகளை மனிதன் சேகரித்து வந்து அவைகளைக்கொண்டு உடைகளை ஆயத்தப்படுத்துவது அவனுடைய பெரும் செயல்களில் ஒன்றாகும். நல்ல உணவைச் சேகரித்துவிட்டால் அவன் உள்ளத்தில் மகிழ்வு உண்டாகிறது. அரிய நல்ல உடை

களைச் சேகரித்துவிட்டாலும் அவனுக்கு அகமகிழ்ச்சி உண்டாகிறது. வேண்டியவாறு உணவும் உடையும் அகப்பட்டு விட்டால் அவன் இன்பம் துய்ப்பவன் ஆகின்றான். அருந்துதற்கும் அணிந்துகொள்ளுதற்கும் வேண்டியவாறு உண்டியும் உடையும் அகப்பட்டுவிட்டால் திருப்தியுண்டாகிறது. மேற்கொண்டு பெறுதற்கு என்ன இருக்கிறது என்கின்ற பூரிப்பும் வருகிறது. இதற்குமேல் வாழ்க்கையில் பெறுதற்கு என்ன இருக்கிறது என்கின்ற தீர்மானமும் உண்டாகிறது. புந்தி என்பது உள்ளம் அல்லது அறிவு எனப் பொருள்படுகிறது. போந்த நெறி என்பது தகுந்த வாழ்க்கை முறை எனப் பொருள்படுகிறது. இக்கருத்துக்களையெல்லாம் புந்தி மகிழுற உண்டு உடுத்து இன்பமாவதே போந்தநெறி என்றிருந்தேன் என்று தாயுமானவர் பகர்கின்றார்.

போந்த நெறி என்று இருந்தேன் என்று பகர்தலில் பொருள் மிகப் புதைந்திருக்கிறது. உயிர்களனைத்தும் பெரும் பயணம் போய்க்கொண்டிருக்கின்றன. புறப்பட்ட இடத்துக்குத் திரும்பிப் போய்ச் சேர்வது அவ்வுயிர்களின் குறிக்கோள் ஆகும். அவை யாவும் கடவுளிடத்திருந்து புறப்பட்டவைகள். திரும்பி அங்குச் சென்று விடுங்கால் அவைகள் முக்தி பெறுகின்றன. வீடு என்பது முக்திக்கு மற்றொரு பெயர். 'வீடுபெறுநிலை' என்பது வாழ்க்கையின் மேலாம் கோட்பாடு. அதற்குக் கீழ் இரண்டு படித்தரங்கள் இருக்கின்றன. கடவுளிடத்திருந்து வந்த உலகம் ஜடநிலைக் குக் கீழ்நோக்கி இறங்குகிறது. கல் முதலியவை ஜடநிலையில் இருக்கின்றன. ஜடநிலையினின்று சேதன நிலைக்கு மாறி அமைவது ஒரு பெரிய முன்னேற்றம். ஆனால் அதற்கு நெடுங்காலம் பிடிக்கிறது. சேதன நிலை என்பது உணர்வோடு கூடிய உயர்நிலை. அந்த நிலையில் பல பிறவிகள் மாறி

அமைகின்றன. புல் பூண்டு முதலியவைகள் சேதன நிலைக்கு வந்தவைகள். தேவர்களும் சேதன நிலைக்கு வந்தவர்கள். புல் முதல் விண்ணவர் பரியந்தம் உள்ள உயிர்வகைகள் பல படித்தரங்களில் இருக்கின்றன. இவை யாவும் உணவு உண்டு உடல் வாழ்க்கையில் மகிழ்ந்திருக்கின்றன. மனிதனும் அக்கூட்டத்தைச் சேர்ந்தவனாகின்றான். எத்தனையோ பிறவிகளில் உண்பதிலும் உடுப்பதிலும் திருப்தியடைந்தவனாக அவன் வாழ்ந்து வருகிறான். வாழ்க்கையில் அதைவிட மேலான குறிக்கோள் இருக்கிறது என்பது அவனுக்கு விளங்குவதில்லை. நெடுங்காலமாக அறை ஒன்று அடைபட்டுக்கிடக்கிறது. அதனுள் என்ன இருக்கிறது என்று யாருக்கும் விளங்குவதில்லை. ஒரு நாள் திடீரென்று அதன் கதவு திறக்கப்பெற்று அதனுள் தீபம்கொண்டு வரப்பட்டது. தீப வெளிச்சத்தில் அரிய ஓவியங்கள் அதனுள் சுவரின்மீது பொறிக்கப்பட்டிருந்தன என்பது வெளியாயிற்று. அவ்வுண்மையைத் தெரிந்துகொள்ளுதற்கு தீப வெளிச்சம் பயன்பட்டது. மக்களாகிய நாம் உண்டு உடுத்து மகிழ்வுற்றிருப்பது வாழ்க்கையின் உயர்ந்த குறிக்கோள் என்று எண்ணி வருகிறோம். அதைவிட மேலான வாழ்க்கை ஒன்று நமக்கு இருக்கிறது என்பதை அறியாத நிலையில் இருக்கிறோம். இறைவனுடைய அருள் என்னும் ஞான வெளிச்சம் நமது மனது என்னும் காரிருள் அறைக்குள் வந்ததும் வாழ்க்கையைப் பற்றி நாம் கொண்டிருந்த எண்ணம் அறவே மாறி விடுகிறது. உண்டு உடுத்து இன்புற்றிருப்பது வாழ்க்கையின் குறிக்கோள் அல்ல. முற்றிலும் மனபரிபாகம் அடைந்து இறைவனுடைய அருளுக்குப் பாத்திரமாய், பிறகு இறைவனுடைய சொரூபத்தில் நமது வாழ்வு முக்தி பெறுவது வாழ்க்கையின் குறிக்கோள் என்பது தெளிவுபட

விளங்குகிறது. உடலோடு கூடிய இன்பவாழ்வு சிறு பிள்ளைகளின் விளையாட்டுப் போன்றது என்பது அப்பொழுது விளங்குகிறது. சிறுபிள்ளைகள் பொம்மைகளை வைத்துக்கொண்டு விளையாடுகின்றன. அப்பொழுது தம் தாயைப்பற்றி அவைகள் நினைப்பதில்லை. ஆனால் தாய் தென்பட்டவுடன் பொம்மைகளை எறிந்துவிட்டுத் தாயிடம் ஓடுகின்றன. அருளுக்குப் பாத்திரமாகும் ஜீவர்களின் நிலையும் அத்தகையது. இக்கருத்துக்களை பூராயமாக நின தருள் வந்து உணர்த்த இவை போனவழி தெரியவில்லை என்று தாயுமானவர் இயம்புகிறார்.

இறைவனுடைய அருளுக்குப் பாத்திரமாகாது உடல் பற்று வைத்து, உடல் வாழ்க்கைதான் போந்த நெறி என்று மகிழ்வுற்றிருக்கின்றபொழுது இது வாழ்க்கையின் முடிவான குறிக்கோள் அல்ல என்பதை விவேகிகள் எவ்வளவு தான் விளக்கிச் சொன்னாலும் அதற்கு மனம் இணங்குவதில்லை. செவிடனுக்குச் செய்கின்ற உபதேசம் எவ்விதத்திலும் அவனுக்குப் பொருள்படுவதில்லை. பேசிய மேலாம் பேச்சுக்கள் எல்லாம் அவனுக்குப் பொருளற்றவைகளாகப் போய்விடுகின்றன. அங்ஙனம் உடல் பற்றில் ஆழ்ந்துகிடக்கின்றவர்களுக்குப் பாரமார்த்திக விஷயங்களைப்பற்றி எவ்வளவுதான் நல்லுபதேசம் செய்தாலும் அது பயனற்றதாய்ப் போய்விடுகிறது. இக்கருத்தை எந்தநிலை பேசினும் இணங்கவிலை என்கிறார் அவர்.

அப்படியானால் இறைவனுடைய அருளைப் பெறும் பரியந்தம் நாம் உண்டு உடுத்துக் களித்துக் காத்திருக்க தானே வேண்டும் என்று உடல்பற்று வைத்திருக்கிறவர்கள் சமாதானம் கூறலாம். அத்தகையவர்களுக்கு வாழ்க்கையின் உட்கருத்தை இறைவன் அருள் கூர்ந்து வேறொரு பாங்கில்

வழங்கிவருகிருர். மனிதன் ஒருவன் எவ்வளவுதான் உடல் பற்று வைத்திருந்தாலும் அவன் மறக்க முடியாத பாங்கில் உடல் வாழ்க்கையைப் பற்றிய உண்மை ஒன்றை இறைவன் புகட்டி வருகின்ருர். அந்த போதனைக்கு முடிவே இல்லை. இரவும் பகலும் அந்த நல்லுபதேசம் நிகழ்ந்துகொண்டே இருக்கிறது. கணந்தோறும் உயிர்கள் பிறந்துகொண்டிருக்கின்றன. கணந்தோறும் உயிர்கள் இறந்துகொண்டும் இருக்கின்றன. இவ்விரண்டு நிகழ்ச்சிகளும் மிக அற்புதமானவைகள். இந்நிகழ்ச்சிகளுக்கு விலக்கானவர்கள் யாரும் இல்லை. பிறந்த உயிர்கள் அனைத்தும் ஒருநாள் இல்லாவிட்டால் ஒருநாள் இறந்தே ஆகவேண்டும். இதைப்பற்றிய எண்ணம் ஒவ்வோர் உயிர்க்கும் இடையிடையே வருகிறது. மரணத்தைக் குறித்து அஞ்சுவது எல்லா உயிர்களுக்கும் பொதுவானது. எவ்வளவுக்கெவ்வளவு ஒரு ஜீவனுக்கு உடல்பற்று அதிகமோ அவ்வளவுக்கவ்வளவு மரணத்தைப் பற்றிய அச்சமும் அதிகமாகிறது. இக்கருத்தை அல்லால் இறப்பொடு பிறப்பை உள்ளே எண்ணிளுல் நெஞ்சது பகீரெனும் என்று அண்ணல் இயம்புகின்ருர்.

மரணத்தைப் பற்றிய எண்ணம் மனிதனைப் பண்படுத்த வல்லது. அவனை விரைவில் திருத்தி அமைத்தற்கென்றே அது அமைந்துள்ளது. நல்ல அரசாங்கம் ஒன்றில் ஆட்சி முறை சீர்கேடு அடையாதிருத்தல் பொருட்டு அரசாங்க நிர்வாகிகளை அப்போதைக்கப்போது ஓர் ஊரிலிருந்து இன்னோர் ஊருக்கு மாற்றிவிடுகிருர்கள். ஒரே ஊரில் நெடுநாள் தங்கியிருக்கின்றவர்களுக்கு ஆங்கு வசித்து வரும் மக்களிடத்து விருப்பும் வெறுப்பும் அதிகரித்துவிடும். மிகைப்பட்ட விருப்பமும் மிகைபட்ட வெறுப்பும் பெருங்கேடு விளைவிக்க வல்லவைகள். ஆனல் இடையிடையே

இடம் மாறிப்போகின்றவர்களுக்கு விருப்பும் வெறுப்பும் தலையெடுக்கின்ற பொழுதே அவைகள் தகர்த்தெறியப் படுகின்றன. ஜீவர்களுக்கு உடல் வாழ்க்கையில் பற்றை அகற்றுதல் பொருட்டு மரணத்தின் வாயிலாக இறைவன் உயிர்களை ஓரிடத்திலிருந்து இன்னோர் இடத்துக்கு மாற்றி விடுகிறார். இடையில் ஏற்பட்ட பற்றுதலை ஒழிக்க உயிர்கள் ஒருப்படுவதில்லை. ஆதலால் மரணத்தைக் குறித்து எண்ணித் தூக்கம் பிடியாமல் உயிர்கள் வருந்துகின்றன. தூக்கம் பிடிப்பதில்லையாதலால் விழிகள் இரண்டும் விழித்த வண்ணமாய் இருக்கின்றன. செக்கச் செவேலென்றுள்ள தீயில் இட்ட மெழுகு போன்று உடலிலுள்ள உறுப்புக்கள் இரவும் பகலும் உருகுகின்றன. துன்பம் நிறைந்த இவ்வுடல் வாழ்க்கையை இறைவன் ஏன் படைத்துள்ளான் என்று ஏங்கியிருப்பவர்களும் உண்டு. ஆனால் இத்தகைய துன்பங்களில் இறைவனுடைய அருள் மறைமுகமாய் அமைந்திருப்பதை யாரே அறிகின்றவர்? மண்ணின்று வெட்டி எடுத்த பொன் தாதுவைத் தீயிலிட்டு உருக்க உருக்க அது தூயதாகிறது. மாசு எல்லாம் தானாக அகன்று போய்விடுகிறது. அதே பாங்கில் மரணத்தைக் குறித்துத் துன்பப்படுவதன் மூலம் உயிர்கள் தூய்மையடைகின்றன. தூய்மையடைந்த பின்பே அருளை ஏற்க அவைகளுக்குத் தகுதியும் வந்தமைகிறது. இறைவனுடைய அருள் என்ற தென்றல் ஓயாது அடித்துக் கொண்டிருக்கிறது. அதற்கு ஓய்வு இல்லை. ஆனால் பரிபக்குவம் அடையாத ஜீவர்களுக்கு அது வெகு தூரத்தில் இருப்பது போன்ற எண்ணம் வருகிறது. பக்குவம் அடைந்தவர்களுக்கோ அதைவிடச் சொந்தமானது வேறு எதுவுமில்லை. இதை அறியாமையினால் ஜீவர்கள் வருந்துகின்றனர். இக்கருத்துக்களை துயிலுறாது இருவிழியும் இரவு

பகலாய்ச் செந்தழலின் மெழுகான தங்கமிவை என்கொலோ! என்று ஞான வள்ளல் விளம்புகின்றார்.

பிறகு தாம் போற்றும் தெய்வமாகிய சிவபெருமானைத் தென்முகமாய் எழுந்தருளியிருக்கும் மூர்த்தி என்றும் அவர் சிறப்பாக சிரகிரி என்று அழைக்கப்படும் திருசிராப்பள்ளியில் எழுந்தருளியுள்ளார் என்றும் மனதற்ற நிலையில் அவர் உணரப்படுகிறார் என்றும் முக்திக்கு அவரே மூலகாரணம் என்றும் ஞானமும் ஆனந்தமும் வடிவெடுத்தவராய் அவர் இலங்கிக்கொண்டிருக்கிறார் என்றும் அவரைப் போற்றிப் பாராட்டுகிறார். அக்கோட்பாடு சித்தாந்த முத்திமுதலே சிரகிரி விளங்கவரு தக்ஷிண மூர்த்தியே சின்மயானந்த குருவே என அவர் பாடலில் வந்துள்ளது. இப்பாட்டு முழுதையும் தொகுத்து மேலே கொடுக்கப்பட்டிருக்கிறது.

## சின்மயானந்த குரு - 6

காரிட்ட ஆணவக் கருவறையில் அறிவற்ற
கண்ணிலாக் குழவியைப்போற்
கட்டுண் டிருந்தஎமை வெளியில்விட் டல்லலாங்
காப்பிட் டதற்கிசைந்த
பேரிட்டு மெய்யென்று பேசுபாழ்ம் பொய்யுடல்
பெலக்கவிளை யமுதமூட்டிப்
பெரியபுவ னத்தினிடை போக்குவர வுறுகின்ற
பெரியவிளை யாட்டமைத்திட்(டு)
ஏரிட்ட தன்சுருதி மொழிதப்பில் நமனைவிட்(டு)
இடருறஉருக்கி இடர்தீர்த்(து)
இரவுபக லில்லாத பேரின்ப வீட்டினில்
இசைந்துதுயில் கொண்மின்என்று
சீரிட்ட உலகன்னை வடிவான எந்தையே
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிண மூர்த்தியே
சின்மயா னந்தகுருவே.

*அக்ஞானத்தில் உழன்றுகொண்டிருக்கின்ற காலமெல்லாம் மனிதனுடைய வாழ்வு மரம் செடி கொடிகளின் வாழ்க்கைக்கு ஒப்பானதாய் இருக்கிறது. மரமாக விரிவு அடையக்கூடிய ஆற்றல் படைத்துள்ள வித்து ஒன்று அந்த ஆற்றலை எல்லாம் தன்னிடத்து ஒடுக்கிவைத்திருக்கிறது. கர்ப்பத்திலே வாசம் செய்து வருகிற சிசு ஒன்றின் நிலையும் அத்தகையதேயாம். விதைக்குள் அடைபட்டுக் கிடக்கும் மரம் ஒன்று காற்றையோ வெளிச்சத்தையோ பயன்படுத்திக் கொள்வதில்லை. கர்ப்பத்தில்கிடக்கும் சிசுவின் நிலையும்*

அத்தகையது. கண்கொண்டு அது பார்ப்பதில்லை. காது கொண்டு அது கேட்பதில்லை. மூளையைப் பயன்படுத்தி அது எண்ணுவதில்லை. அறிவு அதனிடத்து ஒடுங்கிக்கிடக்கிறது. முன்பு பல ஜன்மங்களில் பெற்றுள்ள அனுபவங்களின் விளைவாக ஒருவிதத்தில் அச்சிசு அறிவுற்றது எனினும் அது அறிவு அற்றதாகக் கர்ப்பத்தில் கிடக்கிறது. கருப்பையை விட்டு எங்குச் செல்லுதற்கும் அச்சிசுவுக்குச் சுதந்திரம் கிடையாது. குறிப்பிட்ட காலம் வரையில் கருவிலேயே அது கட்டுண்டு இருந்தாக வேண்டும். சிசு ஒன்றுக்கு கர்ப்பவாசத்தில்எத்தனைவிதத்தடைகளும் குறைகளும் இருக்கின்றனவோ அத்தனைவிதத் தடைகளும் குறைகளும் ஆணவம் படைத்துள்ள மனிதனுக்கு உலகவாழ்க்கையில் உண்டு. கர்ப்பவாசம் ஒரே கார் இருள் மயமானது. ஆணவத்தில் அடைபட்டு கிடப்பவனை அக்ஞானம் என்னும் கார் இருள் மூடிக்கொண்டிருக்கிறது. வித்து ஒன்றின் குறுகிய நிலையில் கர்ப்பத்திலுள்ள சிசு இருக்கிறது ; கர்ப்பத்திலுள்ள சிசுவினுடைய குறைபட்ட நிலையில் ஆணவம் படைத்துள்ள மனிதன் இருக்கிறான். இக்கோட்பாட்டை காரிட்ட ஆணவக் கருவறையில் அறிவற்ற கண்ணிலாக் குழவியைப்போல் கட்டுண்டிருந்த எமை என்று தாயுமானவர் தம்மையே குறிப்பிட்டுப் பேசுகின்றார். உண்மையில் அவரும் ஆணவத்தில் அடைபட்டவரா என்பது கேள்வி. ஞானத்தில் பரிபாகம் அடைந்து வருகிறவர்கள் தங்களிடத்துள்ள சிறு குறைகளைப் பெரும் குறைகளாகக் கருதுகின்றனர். அப்படிக் கருதுதல் ஒன்றே அந்தச் சிறிய குறையையும் நீக்குதற்கு உற்ற உபாயமாகும். எனவே தம்மைக் குறைபாடுடையவராகவே கருதிக்கொள்ளுதல் அவருடைய சால்புக்கு ஒத்ததாகும்.

இனி உருவாகவிருக்கும் மரம் விதையினுள் மறைந்து கிடக்கிறது. விதையோ பூமியில் மறைந்து கிடக்கின்றது. பருவத்தில் மழை பெய்தால் விதைமுளைத்து பூமியினின்று வெளியில் வருகிறது. கர்ப்பத்திலிருக்கும் சிசு அதனுள் வளர்ச்சியடைகிறது. கருவில் அடையவேண்டிய வளர்ச்சியையும் முதிர்ச்சியையும் பெற்றுன பிறகு தாயின் வயிற்றினின்று அது வெளியில் விடப்படுகிறது. அதை வெளியில் விட்டே ஆகவேண்டும். இல்லாவிடில் தாய்க்கும் சேய்க்கும் உயிர்ச்சேதம் உண்டாகும். ஆணவத்தில் தோன்றி ஆணவத்தில் வளர்ந்துவரும் மனிதன் பிரபஞ்ச வாழ்க்கை என்னும் வெளியில் விடப்படுபவன் ஆகின்றுன். இக்கோட்பாட்டைத் தாயுமானவர் வெளியில் விட்டு என்று இயம்புகிறுர்.

முளைத்து வந்த செடி காற்றில் அசைகிறது. அப்படி அசைதல் அதற்கு உண்டாகிற அல்லல். ஆனுல் காற்றில் அது அசையாது போய்விட்டால் செடி உறுதிபெறுது. அல்லல் படுவதுபோன்று அதன் வாழ்க்கை தென்படினும் அசைதல் என்னும் துன்பமானது மறைமுகமாக அதற்கு உதவி செய்கிறது. அந்தச் செடிக்கு வேலி என்னும் காப்பு இடப்படுகிறது. அதன் கிளைகள் படர்ந்து வளர்தற்கு வேலி ஒரு சிறிது இடைஞ்சலாக இருக்கலாம். எனினும் ஆடுமாடு மிதித்துவிடாத வண்ணமும் அவைகள் அதைத் தின்று விடாதபடியும் அதன் வேலி அதற்கு நல்ல காப்பு ஆகின்றது. தாயின் வயிற்றிலிருந்து பிறந்துள்ள சிசு பசிப்பிணியில் அல்லல்படுகிறது. நோய் உண்டாகின்றபொழுதும் அல்லல் படுகிறது. அல்லல்படும்பொழுதெல்லாம் அக்குழந்தை அழ ஆரம்பிக்கிறது. அழுகின்ற குழந்தைக்கே பால்கிட்டுகிறது, ஏனைய பாதுகாப்பும் கிட்டுகிறது. எனவே அழல் என்பது

சிசுவுக்கு இயற்கையினால் இடப்பட்ட காப்பு ஆகிறது. வெளியில் வந்துள்ள செடியைப்போன்றும் சிசுவைப்போன்றும் ஆணவத்தில் ஊறிக்கிடக்கின்ற மனிதனுக்கும் துன்பங்கள் பல தொடர்ந்து வருகின்றன. துன்பமில்லாத வாழ்வு எவ்வித உயிர்க்கும் இல்லை. உடல் எடுத்துள்ள உயிர்கள் எல்லாம் ஏதேனும் ஒரு விதத்தில் அல்லல்பட்டே ஆகவேண்டும். அந்த அல்லலினின்று தங்களை விடுவித்துக்கொள்ள உயிர்கள் ஓயாது முயன்று வருகின்றன. அந்த முயற்சியினால் வாழ்வில் முன்னேற்றம் உண்டாகிறது. ஆக, உயிர்கள் அனைத்துக்கும் விதவிதமான அல்லல்கள் அமைந்திருப்பதே அவைகளின் வளர்ச்சிக்கு ஏதுவாகிறது. இக்கோட்பாட்டை அல்லல் ஆம் காப்பு இட்டு என்று தாயுமானவர் இயம்புகின்றார்.

உலக வாழ்க்கையில் மனிதன் வெவ்வேறு சூழ்நிலைகளில் வைக்கப்பட்டிருக்கின்றான். தொழில்கள் பலவற்றில் அவன் ஈடுபடுகின்றான். கொள்கைக்கும் ஆற்றலுக்கும் ஏற்பப் பலதரப்பட்ட முயற்சிகளில் அவன் ஈடுபடுகின்றான். அதையெல்லாம் முன்னிட்டு பெயர்கள் பல அவனுக்கு வந்து அமைகின்றன. பாலன் என்பது ஒரு பருவத்தில் பெயர். பின்பு சிறுவன் என்றும் இளைஞன் என்றும் யுவன் என்றும் நடுவயதுக்காளை என்றும் பழுத்த கிழவன் என்றும் ஒரே மனிதனுக்குப் பெயர்கள் மாறி அமைகின்றன. மேலும் அதே ஆளுக்கு மாணாக்கன் என்றும் கற்றவன் என்றும் கலையில் வல்லவன் என்றும் வித்தையை முன்னிட்டே பெயர்கள் மாறி மாறி வந்தமைகின்றன. குறை செல்வம் படைத்தவன் என்றும் நிறை செல்வம் படைத்தவன் என்றும் பொருளை முகாமையாக வைத்துப் பெயர் மாறுகிறது. கை சுருங்கியவன் என்றும் கொடையாளி என்றும் வள்ளல் என்றும்

அவன் பிறர்க்கெடுத்து வழங்குவதை முன்னிட்டுப் பெயர்கள் மாறி அமைகின்றன. நோயாளி என்றே உடல் திட்பம் படைத்தவன் என்றே மெலிந்தவன் என்றே தடித்தவன் என்றே உடல் நிலையை முன்னிட்டுப் பெயர்கள் மாறிவிடு கின்றன. மகன் என்றும் மணமகன் என்றும் குடும்பி என்றும் தந்தை என்றும் பாட்டனர் என்றும் குடும்பத்தில் உண்டா கும் வளர்ச்சியை முன்னிட்டு அவனுக்குப் பெயர்கள் மாறி விடுகின்றன. இப்படி எல்லாம் ஒரே மனிதனுக்குப் பல பெயர்கள் வாய்க்கின்றன. இதையெல்லாம் அதற்கு இசைந்த பெயரிட்டு என்று தாயுமானவர் கூறுகின்றார்.

மனிதன் அல்லல்படுவதற்கு உடல் வாழ்க்கையே முக்கியமான காரணம் என்று சொல்லலாம். உடலைப் பேணு தலில் பிறந்தது முதல்கொண்டு இறக்கும் பரியந்தம் கவலை மிக எடுத்துக்கொள்ள ஒவ்வொரு மனிதனும் கடமைப்பட்டி டிருக்கின்றான். இந்த உடல் அமைப்பே வியப்புக்குரியதா கின்றது. வெட்டவெளியில் திடீரென்று மேகம் கட்டுகிறது. காட்சியில் இல்லாதது ஒன்று திடீரென்று காட்சிக்கு வரு கிறது. அதன் வடிவம் ஓயாது மாறி அமைந்துகொண்டே இருக்கிறது. பிறகு மழையாகப் பெய்தோ அல்லது காற் றால் சிதறடைந்தோ அந்த மேகம் தன்னுடைய வடிவத்தை இழந்து விடுகிறது. முன்பு இல்லாதது, பின்பு இல்லாதது, இடையில் இருக்கிறது போன்று தென்பட்டுக்கொண்டிருக்கு மாகில் இருக்கின்ற பொழுதே அது பொய்யானது. மேகம் போன்றது மனிதனுடைய மேனி. பல ஆண்டுகளுக்கு முன்பு அது இருந்ததில்லை. பல ஆண்டுகளுக்குப் பின்பு அது இருப்பதில்லை. இயற்கையில் பல பொருள்கள் கூடி அது உருவெடுத்திருக்கிறது. எப்பொருள்களைக் கொண்டு அது உரு எடுத்திருக்கின்றதோ அப்பொருள்களாகிய

ரத்தம், மாமிசம், எலும்பு, கொழுப்பு முதலியன ஓயாது உரு மாறி அமையும் தன்மையுடையவைகள். எளிதில் அழிந்து பட்டுப்போவதும் அவைகளின் இயல்பு. அத்தகைய நிலே யற்ற பொருள்களேக்கொண்டு தேகம் அமையப் பெற்றிருக் கின்ற இடத்து அதைப் பொய்யானது என்று பகர்தலில் இழுக்கு இல்லே. பொய்யானது என்று தெரிந்திருந்தும் தேகத்தைப் பொய்யானது என்று நாம் சொல்லுகிறதில்லே. பொய்யைமெய்யென்று அழைக்கின்ருேம். ஒரு மனிதன் உடலே மறந்திருக்கின்ற நிலேயை மெய்மறந்த நிலே என்கின்ருேம். உண்மையில் இது மெய்தாஞ என்று எண்ணிப்பார்க்கவேண் டும். விசாரித்துப் பார்த்தவுடனே இது மெய்யல்ல என்பது யாருக்கும் புலப்படும். அழிந்து பட்டுப்போகின்றவைகள் அனைத்தும் பாழானவைகள் என்று பகரப்படுகின்றன. இக் கருத்தை **மெய்யென்று பேசும் பாழ்ம் பொய்யுடல்** என்று தாயுமானவர் இயம்புகின்ருர்.

இத்தகைய உடலே வளர்ப்பதில் மனிதன் கண்ணும் கருத்துமாய் இருக்கிருன். வீடு கட்டுவதும், உடைகள் போட்டுக்கொள்வதும், உடலேப் பாதுகாத்தல் பொருட்டே. பூமியில் விளேந்து வருகின்ற தானியங்களேயெல்லாம் உண வாக மாற்றியமைக்க மனிதன் முயலுகின்ருன். அந்த உணவை விதவிதமாகச் சமைப்பதற்கும் அவன் யத்தனிக் கின்ருன். உணவுக்கு அமுதம் என்பது ஒரு பெயர். அமிர் தம் என்னும் சொல் அமுது எனத் திரிவுபட்டது. மிருத்யு அல்லது மரணத்துக்கு எது இடந்தருவதில்லேயோ அது அமிர்தம். உணவு உண்பதன் மூலம் மனிதன் மரணத்தை ஒத்திப்போட்டுக்கொண்டிருக்கின்ருன். எனவே உண்டி யானது அமுது என்று அழைக்கப்படுகிறது. அதை உண்டு செமிப்பதால் உடல் வளரவும் பெலக்கவும் செய்கிறது.

உண்டியில் வைத்த ஆசை உடல் வாழ்க்கையில் வைத்த ஆசையின் விளைவு ஆகும். உண்டியைப் பெருமகிழ்வோடு மனிதன் ஏற்கின்றான். உடல் வாழ்க்கையில் வைத்த வாஞ்சையே அம்மகிழ்வுக்கு மூல காரணமாகிறது. இக்கோட்பாட்டை உடல் பெலக்கவிளை அமுதமூட்டி என்று அண்ணல் இயம்புகின்றார்.

புவனம் என்னும் சொல் பூமியைக் குறிக்கிறது. சூரியனிடத்திருந்து சிதறி வந்துள்ள ஒரு சிறு துளி இந்தப் பூமி ஆயிருக்கிறது. சூரியனோடு ஒப்பிடுகின்றபொழுது அது ஒரு சிறு துளியே. ஆனால் அதனுள் வசித்து வருகின்ற நம்மோடு சீர்தூக்கிப் பார்க்கின்ற இடத்து அது மிகப் பெரிய புவனம். இந்தப் பரந்த மண்ணுலகில் ஒரு மனிதன் வண்ணத்தில் ஒரு தூசிக்குச் சமனாகமாட்டான். எனவே தன்னிலும் தான் வசிக்கின்ற தரணி மிக மிகப் பெரியது என்று பொருள் படுத்துவது பொருந்தும். இந்தப் பூமியிலே உயிர் வாழ்வதற்காக மனிதன் இங்குத் தோன்றிவருகின்றான். சிறிது காலம் இங்கு வாழ்ந்திருந்த பிறகு அவன் ஓய்வு எடுத்துக்கொள்வது அவசியமாகிறது. ஓய்வுக்கு மரணம் என்பது மற்றொரு பெயர். மரணத்தின் வாயிலாக இம்மண்ணுலகினின்று அவன் மறைந்துபோய்விடுகின்றான். இங்ஙனம் உலகை விட்டுப்போவதும் உலகுக்குத் திரும்பி வருவதும் ஓயாது நிகழ்ந்துகொண்டிருக்கிறது. உலக வாழ்க்கையை வெவ்வேறு பாங்கில் படம் பிடித்துப் பகர்கின்ற பெரியார்கள் இருக்கின்றனர். ஓய்வில்லாத போராட்டம் என்று பாருலக வாழ்க்கையைப் பகர்வதுண்டு. அது முடிவற்ற ஒரு விளையாட்டு என்று விளம்புகின்றவர்களும் இருக்கின்றார்கள். உலக வாழ்க்கையை ஒரு விளையாட்டாகப் பொருள்படுத்துவதில் இனிமை ஒன்று இருக்கிறது.

விளையாடத் தெரியாதவர்கள் விளையாட்டிலேயே வம்புச் சண்டையை வரவழைத்துக் கொள்வதுண்டு. அதை வெறும் விளையாட்டு என்று கருதுகிறவர்கள் அதில் உண்டாகின்ற வெற்றி தோல்வியைக் குறித்து மனம் மாறுதல் அடைவது கிடையாது. வெற்றியை ரசிப்பது போன்று தோல்வியையும் எவன் ரசிக்கக் கற்றுக்கொள்கின்றானோ அவனே நன்கு விளையாட வல்லவனாகின்றான். வாழ்க்கையை ஒரு விளையாட்டாகக் கருதிப் பழகுதற்கே மக்கள் இங்கு வந்திருக்கின்றனர். பலர்க்கு அது புலப்படுவதில்லை. என்றாலும் இதை ஒரு விளையாட்டாக வைத்துக்கொள்வதுதான் வாழ்க்கையின் குறிக்கோள். இக்கோட்பாட்டை பெரிய புவனத்தினிடை போக்குவரவு உறுகின்ற பெரிய விளையாட்டு அமைத்திட்டு என்று அவர் இயம்புகின்றார்.

சாஸ்திரம் என்றால் என்ன என்னும்கேள்வி எழுகிறது. எது சாஸனமிடுகின்றதோ அது சாஸ்திரம். அதாவது எதனிடத்திருந்து ஆணை பிறக்கின்றதோ அது சாஸ்திரமாகிறது. ஆணை இரண்டுவிதமாக வடிவெடுத்து வருகிறது. இன்னதைச் செய் என்பது உடன்பாட்டு வடிவெடுத்துவரும் ஆணை ஆகிறது. இன்னதைச் செய்யாதே என்பது எதிர்மறை வடிவெடுத்து வரும் ஆணையாகிறது. சாஸ்திரங்களுக்கெல்லாம் முதல் நூலாய் இருப்பதற்குச் சுருதிஎன்றுபெயர். வேதாந்தத்துக்குச் சுருதி என்பது மற்றொரு பெயர். காதால் கேட்கப்பட்டது என்பது அதன் பொருள். பண்டைக்காலத்தில் வேதாந்தக் கோட்பாடுகளை நூல்களாக யாரும் எழுதி வைக்கவில்லை. கர்ண பரம்பரையாக குரு சிஷ்யர்களுக்கிடையில் ஓதுதல் மூலம் அந்த சாஸ்திரங்கள் பாதுகாத்து வைக்கப்பட்டிருந்தன. பல தலைமுறை தலைமுறைகளாக ஓதக் கேட்டே அவை யாவும் ஒழுங்காகப்

பாதுகாத்து வைக்கப்பட்டிருந்தன. பரம்பொருளிடத்திருந்து பிரம்மா வடிவெடுத்து வந்துள்ளார். அந்த பிரம்ம தேவர் சொல்ல அதை மற்ற தக்க அதிகாரிகள் கேட்டுக் காப்பாற்றி வந்ததனால் வேதாந்தத்துக்குச் சுருதி என்னும் பெயர் வந்துள்ளது. பரம்பொருளைப் பற்றிய பேருண்மைகளே வேதாந்தம் என்னும் பெயர் பெற்றுள்ளன. அது சர்வேசுவரனிடத்திருந்தே வந்திருப்பதால் அது முற்றிலும் அப்பரமபுருஷனுக்கே உரியது என்று இயம்புவதில் இழுக்கு ஒன்றுமில்லை. இறைவனும் இறைவனிடத்திருந்து வந்துள்ள ஆணையும் இணைபிரியாதவைகளாம். இறைவனே கோட்பாடு வடிவங்களில் தம்மை விளக்கிக்கொள்கின்றார். வேதாந்தம் என்னும் கோட்பாடுகளில் அழகும் நன்மையும் பொலிந்திருக்கின்றன. ஏர் என்கின்ற சொல் அழகையும் நன்மையையும் குறிக்கிறது. வேதாந்தக் கோட்பாடுகளுக்கு ஒப்ப வாழ்கின்ற வாழ்வே அழகு பொருந்திய வாழ்வு ஆகிறது. வேதாந்தக் கோட்பாடுகளை முறையாக அனுஷ்டிக்கின்றபொழுதே நலன்கள் அனைத்தும் வந்து அமைகின்றன. வேதாந்தக் கோட்பாடுகளைப் புறக்கணிக்கின்ற பொழுது அழகும் நலனும் அழிந்துபட்டுப் போகின்றன. இக்கருத்துக்களை எல்லாம் ஏரிட்டதன் சுருதிமொழி தப்பில் என்னும் வாக்கு மூலத்தில் தாயுமானவர் அடக்கி வைத்திருக்கின்றார்.

பொது நன்மைக்கென்று அமைந்துள்ள சட்ட திட்டங்களை மீறி நடக்கின்றவர்களுக்கு இடர் அல்லது துன்பங்கள் வருகின்றன. ஏராளமாக வண்டிகள் வந்துகொண்டிருக்கின்ற பாதையில் ஒருவன் தனது வண்டியைப் பாதையின் இடது பக்கத்தில் ஓட்டிச் செல்ல வேண்டுமென்பது சட்டம். அதைத் தப்பி ஒருவன் வண்டியை வலது பக்கம் ஓட்டுவானா

கில் அவனுக்கு இடர் உறுத்துதற்குப் போலீஸ் அதிகாரிகள் இருக்கிருர்கள். ஒருவேளை ஓரிடத்தில் போலீஸ் அதிகாரிகள் இல்லாது போய்விடலாம். வழிதப்பி வண்டி ஓட்டுகின்றவனுக்கு அப்பொழுது ஏனைய வண்டிகளால் இடர் ஏற்படுவது உறுதி. அப்படி உண்டாகின்ற இடுக்கண்களுக்கு முறை தவறி வண்டியை ஓட்டியவனே பொறுப்பாளி ஆகின்ருன். இந்தச் சட்டதிட்டங்கள் பொது நன்மையின் பொருட்டு மக்களால் நியமிக்கப்பெற்றவைகள். இதற்கு மேல் வாழ்க்கை நலனை முன்னிட்டு இறைவனுல் நியமிக்கப் பெற்றுள்ள கோட்பாடுகளையே சுருதி அல்லது வேதாந்தம் என்கிருேம். சுருதிமொழிதப்பி நடக்கின்றவர்களுக்கு என்ன தண்டனை வருகிறது ; போலீஸ்காரர் போன்று இருந்து நடவடிக்கை எடுக்க வல்லவர் யார் என்னும் கேள்வி எழலாம். நெறியில் ஒழுங்காகச் செல்லுகின்றவர்களுக்கு நலன் தருதற்கும், நெறி வழுவுகின்றவர்களுக்கு இடர் உறுத்துதற்கும் நமன் என்னும் தெய்வம் உள்ளான். யமன் என்பது அவனுக்கு மற்ருெரு பெயர். நெறியை நேராகக் காத்து வருகின்ற இயற்கைச் சக்திக்கே நமன் என்றும் யமன் என்றும் பெயர் வந்துள்ளது. போலீஸ்காரனிடத்திருந்து மறைந்திருந்து உலக மக்கள் சட்டதிட்டத்தை மீறி நடந்து தண்டனை பெருது தப்பித்துக்கொள்ளலாம். ஆனுல் இயற்கையின் நியதியை மறைமுகமாக மீறி நடந்தாலும் அதற்குரிய தண்டனை அல்லது இடர் கிட்டிவிடும். தீயில் கை வைக்காதே என்பது இயற்கையின் நியதி. ஒருவருக்கும் தெரியாது இரகசியமாக ஓரிடத்தில் இருந்துகொண்டு தீயில் கை வைப்பதால் அந்த நியதியிலிருந்து யாராவது தப்பித்துக்கொள்ள முடியுமா? இரகசியமாகத் தீயில் கை வைத்தாலும் கை காந்திப்போய்விடும். நமன் என்கின்ற

சொல் வாழ்க்கையைப்பற்றிய விதிகளையும் குறிக்கிறது; விதி வழுவுகின்றவர்களுக்கு உண்டாகின்ற இடர்களுக்குத் தலைவனாய் இருக்கும் தெய்வத்தையும் குறிக்கிறது. மக்கள் எப்பொழுதெல்லாம் இயற்கையிலுள்ள நெறியிலிருந்து வழுவுகின்றார்களோ அப்பொழுதெல்லாம் அவர்களுக்கு இடர்களை நமன் விதித்து விடுகின்றான். இடர்ப்படும் பொழுது துன்பம் வருகிறது. துன்பப்படும்பொழுது திரும்பவும் தீச்செயல்களைச் செய்வதில்லை என்கிற தீர்மானம் வருகிறது. இங்ஙனம் தண்டனைக்கு மேல் தண்டனையைக் கொடுத்து மக்களைத் தீச்செயல்களினின்று பிரித்தெடுப்பது நமனுடைய பெருங் கடமையாகிறது. பல காலம் இடர்ப்பட்டான பிறகு ஜீவாத்மாக்களுக்கு உயர்ந்த அனுபவமும் நல்லுணர்வும் வருகின்றன. பிறகு இயல்பாகவே நன்னெறியில் அவர்கள் நிலைத்துவிடுகின்றனர். நன்னெறியில் நிலைத்திருப்பவர்களுக்கு இடர் தீர்ந்துவிடுகிறது. இக்கோட்பாடுகளை எல்லாம் நமனை விட்டு இடருற உருக்கி இடர்தீர்த்து என்னும் பகுதியில் தாயுமானவர் அடக்கி வைத்திருக்கின்றார்.

இடர்களினின்று விலகிக் கொள்ளுதல் ஒன்றுதானா வாழ்க்கையின்குறிக்கோள் என்னும் கேள்வி எழக்கூடும். பசி என்பது ஒருவித இடர். பசிப்பிணியினின்று விலகிக்கொள்ள உயிர்கள் முயலுகின்றன. அதற்காக உணவைத் தேடி அலைந்து திரிகின்றன. உணவும் அகப்படுகின்றது. அதை உண்பதால் பசிப்பிணி அகலுகிறது. பசி இருக்கும்பரியந்தம் உணவை உண்கின்ற ஒருவன் ருசியை உள்ளபடி உணர்வதில்லை. பசி ருசி அறியாது என்பது பழமொழி. பசி அடங்குகின்ற வேளையில் உணவை உள்ளபடி சுவைக்கும் இயல்பு உயிர்களுக்கு வந்துவிடுகிறது. அறுசுவை

யோடு கூடிய உணவை ரசித்து உண்பது மனிதனுக்கென்று அமைந்துள்ள வாய்ப்பு ஆகிறது. விதவிதமான சுவைகளை ரசித்து உண்ணுங்கால் இன்பம் மேலிடுகிறது. அதே பாங்கில் துன்மார்க்கத்திலிருந்து விலகி சன்மார்க்கத்துக்கு வருகிற மனிதனுக்கு இரண்டுவித நிலைகள் அமைகின்றன. இடர் தீர்ந்திருப்பது உடனே கிடைக்கும் வாய்ப்பு. இது பசிப்பிணியை அகற்றுதற்கு ஒப்பானது. பேரின்பம் எய்துதல் அடுத்த பகுதி ஆகிறது. நல்லுணவைச் சுவைப்பதற்கு ஒப்பானது இது. பேரின்பம் ஒன்றே மனிதனுடைய உண்மையான நிலை. அது அவனுக்குச் சொந்தமான இருப்பிடமாதலால் அது வீடு என்றும் வழங்கி வருகிறது. பேரின்ப வீடு பாருலகிலுள்ள வீடுபோன்றதன்று. இங்கு இருப்பது அழியும் தன்மையுடையது. இது காலத்துக்கு உட்பட்டது. எனவே இதற்கு இரவு பகல் உண்டு. பேரின்ப வீடோ பிரபஞ்ச வாழ்க்கைக்கு அப்பாற்பட்டது. காலத்தின் ஆதிக்கம் ஆங்கு எட்டுவதில்லை. ஆதலால் இது இரவு பகலற்றவிடம். துன்பமாக மாறி அமையும் சிற்றின்பத்துக்கு ஆங்கு இடமில்லை. ஒப்பற்ற பேரானந்தமே ஆங்கு எஞ்சியிருக்கிறது. சன்மார்க்கத்தில் செல்லுகின்ற ஆத்மசாதகன் ஒருவனுக்கு அத்தகைய பெரும் பேறு கிட்டுகிறது. இக்கருத்தை இரவு பகலில்லாத பேரின்ப வீட்டினில் இசைந்து துயில் கொண்மின் என்னும் சொற்களில் தாயுமானவர் அடக்கி வைத்துள்ளார். துயில் கொள்ளுதல் என்பதன் கருத்து தூங்குதல் என்பதாம். தூக்கத்தில் எல்லாம் ஒடுங்கி மறைந்துவிடுகின்றன. அத்தகைய தூக்கத்தை நாடுவது முறையோ என்னும் கேள்வி பிறக்க இடமிருக்கிறது. இங்குத் தூக்கம் என்கின்ற சொல் செயலற்ற நிலை என்பதைக் குறிக்கிறது. எங்கெல்லாம் குறைபாடு

இருக்கிறதோ அங்குச் செயல் நிகழ்கிறது. குறைவை நிறைவு ஆக்குதற்கே இயற்கையில் ஒவ்வொரு செயலும் நிகழ்ந்து வருகிறது. ஆனால் பேரின்ப வீட்டிலோ குறைவு ஒன்றுமில்லை. நிறைவு ஒன்றே திகழ்கிறது. அமைதி ஆங்கு இலங்குவதால் துயிலுறுதலோடு ஒப்பிட்டு அது இயம்பப் பெறுகிறது.

கடவுளைத் தாயாகவும் தந்தையாகவும் கருதுவது சான்றோர் வழக்கு. ஒரு பொருள் ஏககாலத்தில் தாயாகவும் தந்தையாகவும் இருக்கமுடியுமா என்பது கேள்வி. ஆம், இறைவனுக்கு அது சாத்தியமாகிறது. ஆதலால்தான் அவன் அர்த்தநாரீசுவரன் ஆயுள்ளான். இறைவனைத் தந்தை என்று கருதுவதைவிடத் தாய் என்று கருதுதலில் இனிமை மிக உளது. குழந்தைகளைப் பொறுமையுடன் சீர்ப்படுத்துதலில் தாயானவள் சோர்வுறாது முயன்று வருகிறாள். இயற்கைத் தாயாக வடிவெடுத்து இறைவனே அந்தச் செயலைச் செய்து வருகின்றார். எனவே சீரிட்ட உலகன்னை வடிவான எந்தையே என்று தாயுமானவர் பகர்கின்றார். இக்கருத்துக்கள் யாவும் தொகுக்கப்பெற்றுள்ள அவரது பாடலை மேலே காணலாம்.

## சின்மயானந்த குரு - 7

கருமருவு குகையனைய காயத்தின் நடுவுள்
களிம்புதோய் செம்பனையயான்
காண்டக இருக்கநீ ஞானஅனல் மூட்டியே
கனிவுபெற உள்ளுருக்கிப்
பருவமதறிந்துநின் னருளான குளிகைகொடு
பரிசித்து வேதிசெய்து
பத்துமாற் றுத்தங்க மாக்கியே பணிகொண்ட
பக்ஷத்தை என்சொல்லுகேன்
அருமைபெறு புகழ்பெற்ற வேதாந்தம் சித்தாந்தம்
ஆதியாம் அந்தமீதும்
அத்துவித நிலையராய் என்னையாண் டுன்னடிமை
யானவர்க ளறிவினூடுந்
திருமருவு கல்லா லடிக்கீழும் வளர்கின்ற
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிண மூர்த்தியே
சின்மயா னந்தகுருவே.

மூன்று பொருள்கள் ஒன்றோடொன்று ஒப்பிடத் தகுந்தவைகளாய் இருக்கின்றன. ஒன்று தாயின் வயிற்றிலுள்ள கருப்பை. மற்றது மலையின்கண் உள்ள குகை. மூன்றாவது பொருள் மூசை என்பது. இவைகளுள் மூசை என்றால் என்ன என்பதை நாம் அறிந்துகொள்ள வேண்டும். தாமிரம் முதலிய உலோகங்களை உருக்கி எடுப்பதற்கென்று அமைந்துள்ள ஒருவகை மட்பாண்டம். இதன் வாய் அகன்று இருக்கும். மூசை என்பது மனிதனால் செய்யப்பட்டது. மனிதன் கையாளுகின்ற ரசவாத வித்தைக்கு இது பயன்படுகிறது.

இனி குகை என்பது இயற்கையில் அமைந்துள்ளது. ஜட நிலையிலிருக்கும் மலையின்கண் உள்ள நுழைவுக்குக் குகை என்று பெயர். கருப்பையோ சேதனம் படைத்துள்ள ஒரு ஜீவனது உடலின்கண் அல்லது காயத்தின் நடுவுள் அமைந்துள்ளது. கருவின்கண் வைக்கப்பட்டுள்ள சிசு ஒன்று குகைவாசம் பண்ணுவது போன்று அக்கருவில் இருந்துகொண்டு சிறிது சிறிதாக வளர்ந்து வருகிறது. வளர்கின்ற சிசுவுக்குத் தாயின் கருவிலிருந்தே உணவு வந்தமைகிறது. தாயினுடைய கருவைவிட்டு அதைப் பிரித்து எடுக்கலாகாது. தானாகக் கருவினின்று வெளியே வரும் பரியந்தம் கருவின்கண் ஒட்டியதாகவே அது இருந்தாக வேண்டும். ஆங்கு சிசு ஒன்று அடைய வேண்டிய வளர்ச்சியையும் முதிர்ச்சியையும் பெற்றான பிறகு கருவைவிட்டு அது வெளியில் வருகிறது. பிறகு கருப்பைக்குள் அது திரும்பவும் போகமுடியாது; போக வேண்டிய அவசியமும் இல்லை. கருவிலே வளர்ந்து வருகிற சிசுவைப்பற்றிய கோட்பாடு இது. இனி குகையில் வசிக்கும் யோகி ஒருவனுடைய நிலையை ஆராய்ந்து பார்ப்போம். பிறவியைப் பெறுதற்கு சிசு கருப்பையினுள் புகுத்தப்பெற்றது. பிறவிப் பிணியைப் போக்குதற்கு யோகி குகையினுள் தானாக அத்தகைய வாழ்க்கையில் விருப்பம் வைத்து நுழைகிறான். வேண்டும் பொழுதெல்லாம் குகையினுள்ளே நுழைதலும், வெளியே வருதலும் அவனுக்குச் சாத்தியமாகிறது. குகைக்குள்ளே சென்று நிஷ்டை புரிகின்றபொழுது தனது மனத்தின் அமைப்பை அவன் மாற்றுகிறான். தாயின் துணைகொண்டு சிசு கருவில் வளர்கிறது. தன் மனத்தகத்து வீற்றிருக்கும் தெய்வத்தின் அருளைத் துணையாகக்கொண்டு யோகி ஒருவன் தன்னை மேலானவனாக மாற்றியமைத்து வருகிறான். அப்படிச் செய்வதன்

மூலம் தனது மனதிலே படிந்துள்ள களிம்பு அல்லது மாசை அவன் படிப்படியாக அகற்றுகிறுன். மனதைத் தாமிரத்தோடு ஒப்பிடலாம். தாமிரத்தில் செய்யப்பட்டுள்ள பாண்டம் ஒன்றைத் துலக்குகிறோம். அப்பொழுது அது தங்கம் போன்று தகதகவென்று மிளிர்கிறது. ஆனல் அடுத்த நாளே அது களிம்பு தோய்ந்தது ஆய்விடுகிறது. தியானத்தால் யோகி ஒருவன் தன் மனதின்கண் படிந்துள்ள களிம்பை நீக்குகிறுன். புதிய களிம்பு அதில் தோன்றி வந்துகொண்டே இருக்கிறது. எனவே தாமிரம் அல்லது செம்புடன் பரிபக்குவம் அடையாத ஜீவன் ஒருவனை ஒப்பிடலாம். கர்ப்பத்தில் சிசு இருப்பது கண்கூடானது. குகையிலே யோகி இருப்பது அவனுக்கும் அவனை ஒத்தவர்களுக்கும் கண்கூடானது. காயம் என்னும் குகையில் ஜீவன் குடிகொண்டிருப்பது ஜீவர்கள் அனைவர்க்கும் காண்பதற்குரிய காட்சியாகிறது. இத்தகைய பரிபாகம் அடையாத ஜீவாத்மனுடைய நிலையில் தம்மை வைத்துக்கொண்டு தாயுமானவர் கருமருவு குகையனைய காயத்தின் நடுவுள் களிம்புதோய் செம்பனைய யான் காண்டக இருக்க என்று இயம்புகிறுர்.

இனிக் குறை நிலையில் இருக்கும் தம்மிடத்தில் நிறை நிலை உண்டாவதற்கு எத்தகைய மாறுதல் வந்து அமைந்தாகவேண்டும் என்பதை மற்றொரு உபமானத்தைக்கொண்டு விளக்குகிறுர். செம்பை எவ்வளவு காலம் துலக்கிக்கொண்டிருந்தாலும் அதனுள் படிந்துள்ள களிம்பை அறவே அகற்றிவிட முடியாது. களிம்பை அடியோடு அகற்றுதற்கு வேறு ஒரு உபாயம் உண்டு. மூசை ஒன்றினுள் அந்தச் செம்பை வைத்துத் தீ மூட்டி முறையாக அதை உருக்கவேண்டும். உருகி அது இளகி வருதலிலும் அதற்கு முறைமை ஒன்று உண்டு. அது இளகி வந்துள்ள பருவத்

தைச் சரியாக அறிந்து அதற்கு ஒத்த குளிகை ஒன்றைக் கொடுத்தால் அதன்கண் உள்ள களிம்பு நீங்கிவிடுகிறது. தூய பத்துமாற்றுத் தங்கமாக அது மாறிவிடுகிறது. ரசவாதம் செய்கின்றவர்களின் அத்தகைய செயலுக்கு ஒத்ததாக இருக்கின்றது இறைவனுடைய அருளைத் துணையாகக் கொண்டு ஞானசாதனம் புரிகிறவர்களுடைய செயல். செம்பைப் பொன்னாக்குதற்கு பஞ்ச பூதங்களில் ஒன்றாகிய அனல் மூட்டப்பெறுகிறது. ஜீவன் பரம்பொருள் சொரூபம் ஆவதற்கு ஞான அனல் மூட்டப்படுகிறது. பரம்பொருளுடைய சொரூபத்தை இடையறாது உணர்ந்துகொண்டிருக்கின்ற நிலையே ஜீவனைப் பண்படுத்துதற்குரிய ஞான அனல் ஆகிறது. அத்தகைய மேலான எண்ணத்தை எண்ணி எண்ணி ஆத்ம சாதகன் ஒருவனுக்கு உள்ளுருக வேண்டும். அதற்குத் தபசு என்று பெயர். தீயிலிட்டு உலோகப் பொருள்களை உருக்கி அவைகளிடத்துள்ள மாசை நீக்கி அவைகளுக்குப் புதிய உருவம் தருகிறோம். ஆத்ம சாதகன் ஒருவன் தபசு என்னும் ஞான அக்னியில் தனது மன அமைப்பை உருக்குகிறான். தவத்தில் உருகாத மனதுக்குக் கல் நெஞ்சம் என்றுபெயர். தவத்தில் உருகுகின்ற மனதே இளகிப் பரிபக்குவம் அடைகிறது. மனது பரிபக்குவம் அடைதற்குக் கனிவுபெறுதல் என்று பெயர். காயானது கனிவு பெற்றுவிட்டால் அது உண்ணத் தகுதியுடையதாகிறது. மனதானது கனிவு பெற்றுவிட்டால் அது பரம்பொருள் மயமாவதற்குத் தகுதி பெறுகிறது. கனிவு பெற்ற பழத்தைப் பறிப்பதற்கேற்ற பருவம் எது என்பதை கிருஷிகன் அறிகிறான். ஞானாக்னியில் ஆத்ம சாதகனுடைய மனது கனிவு பெறுகின்ற பருவம் அல்லது தருணத்தை ஞானாசாரியார் அறிகின்றார்; அல்லது பரம்பொருளே நேர்

அறிகின்றார். அத்தகைய பரிபக்குவம் ஆத்ம சாதகனுக்கு வந்தான பிறகு மற்றொரு நிகழ்ச்சி நேருகிறது. உருகி இளகிய தாமிரத்தைக் குளிகைகளைக்கொண்டு தொடுவது போன்று ஞான குரு அல்லது பரம்பொருள் தன்னுடைய அருள் என்னும் குளிகையைக்கொண்டு ஜீவாத்மனைத் தொடுகின்றார். இறைவனுடைய அருளால் ஸ்பர்சிக்கப் பெற்றதும் ஜீவாத்மன் தனது சொரூபத்தில் ஜீவன் முக்தனாக மாறி அமைந்து வருகின்றான். அப்படி அவன் மாறி அமைகின்ற செயல் வேதி செய்து என்னும் சொல்லைக் கொண்டு விளக்கப்பெறுகிறது. இனித் தாமிரம் எப்படிக் குற்றமற்ற பத்துமாற்றுத் தங்கமாக மாறிவிடுகிறதோ அங்ஙனம் இறைவனுடைய அருளின் தொடர்வால் ஆத்ம சாதகன் முற்றிலும் பண்பட்ட நிறைஞானி ஆய்விடுகின்றான். தூய பொன்னைக் குப்பையில் போட்டாலும் அது பொன்னாகவே இருக்கிறது. நிறைஞானி ஒருவன் உலகம் என்னும் குப்பையில் இருந்தாலும் அவன் பொன்னுக்கு ஒப்பானவன் ஆய்விடுகின்றான். இக்கருத்துக்களையெல்லாம் நீ ஞான அனல் மூட்டியே கனிவுபெற உள்ளுருக்கிப் பருவமது அறிந்து நின் அருளான குளிகை கொடு ஸ்பர்சித்து வேதி செய்து பத்துமாற்றுத் தங்கமாக்கியே என்னும் சொல் தொடரில் தாயுமானவர் அமைத்து வைத்திருக்கின்றார்.

ஒரு மனிதன் மற்றொரு மனிதனுக்குச் செய்கின்ற உதவியை வேண்டியவாறு வருணித்துவிடலாம். அதை மிகைபடவும் வருணிப்பது சாத்தியம். ஆனால் எவ்வளவுதான் வருணித்துக்கொண்டே போனாலும் அந்த வர்ணனையானது போதவில்லை என்று பகர்தற்குரிய உபகாரம் ஒன்று இருக்கிறது. அத்தகைய பேர் உபகாரத்தை மனிதன் எவனும்

செய்ய முடியாது. கடவுளுக்கே அது சாத்தியமாகிறது. அல்லது கடவுளின் நிலையை அடைந்துள்ள நிறைஞானி யருக்கும் அது சாத்தியமாகிறது. அந்த உபகாரம் யாது எனில் தாமிரத்தைப் பொன்னுக்குவது போன்று ஜீவ சொரூ பத்தை சிவ சொரூபமாக மாற்றுதலாம். பணி கொள்ளுதல் என அது பகரப்பெறுகிறது. ஆட்கொள்ளுதல் என்பது இதன் கருத்து. உலகிலுள்ள ஒரே ஒரு செயலை இதற் கேற்ற எடுத்துக்காட்டாக வைத்துக்கொள்ளலாம். இறைவ னுடைய சொரூபத்துக்கு நிகரானது கங்கை நதி. இறை வனுடைய தூய்மை எக்காரணத்தை முன்னிட்டும் மாசு படிந்து விடுவதில்லை. கங்கை நதியின் தூய்மையும் அத்த கையது. புனிதமான கங்கையினுள் புனிதமான யமுனை நதி வந்து சேருகிறது. யமுனை நதி வந்து சேர்வதால் கங்கைக் குப் புதிய புனிதம் ஒன்றும் வந்து விடுவதில்லை. அதே கங்கையினுள் சாக்கடை நீரும் வந்து சேருகிறது. சாக்கடை நீரோ கால் விரலாலும் தீண்டத் தகுதியற்றது. அத்தகைய கீழ் நிலையிலுள்ள சாக்கடை நீர் கங்கையினுள் வந்து கலந் தால் புனிதமான கங்கை அந்தச் சாக்கடை நீரையும் ஏற்றுக் கொள்கிறது. அதன் பிறகு சாக்கடை நீருக்குப் புதிய மகத்துவம் வந்து விடுகிறது. சாக்கடை நீர் என்னும் இழி பெயர் அதை விட்டுப் போய்விடுகிறது. கங்கை நீர் என் னும் புனிதமான பெயர் அதற்கு வந்துவிடுகிறது. பிறகு சிவபெருமானுடைய சிரசின்மீது சொரிந்து அபிஷேகம் செய் வதற்குத் தகுதியுள்ளதாக அது ஆய்விடுகிறது. இறைவ னுடைய பக்ஷம் அத்தகையது. பக்ஷம் என்பது கருணை எனப் பொருள்படுகிறது. கருணை கூர்ந்து கடவுளானவர் ஜீவனை எடுத்துத் தன்மயமாக மாற்றி அமைத்து வருகிறார் என்றால் அச்செயலை எதனோடு ஒப்பிடுவது? பிரபஞ்ச நடை

முறையில் அதற்கு நிகரான செயல் வேறு யாது உளது? அருள்கனிந்த அந்த அரிய செயலை எவ்வளவுதான் விளக்கிக்கொண்டு போனாலும் அந்த விளக்கம் நிறை விளக்கம் ஆய்விடாது. இக்கோட்பாட்டை பணிகொண்ட பக்ஷத்தை என் சொல்லுவேன்! என்கிறார் தாயுமானவர்.

கருணையே வடிவெடுத்துள்ள கடவுளை அறிந்துகொள்ளுதற்கு உபாயங்கள் என்னென்ன இருக்கின்றன என்னும் கேள்வி பிறக்கலாம். நூல்கள் வாயிலாக அவரைப்பற்றிக் கேட்டும், ஓதியும், சிந்தித்தும் உணர்வது ஓர் உபாயமாகிறது. உலகில் நூல்களோ எண்ணிறந்தவைகள் உண்டாயிருக்கின்றன. புதிய புதிய நூல்களும் உண்டாய்க்கொண்டிருக்கின்றன. கணக்கற்ற புஸ்தகங்களுக்கிடையில் எதற்கு எத்தகைய மதிப்புத் தருவது என்னும் கேள்வி எழலாம். சில புஸ்தகங்கள் அழகாக அச்சடிக்கப்பெற்று கண்ணைக் கவரும் பாங்கில் கட்டி அமைக்கப்பெற்றிருக்கலாம். அதை முன்னிட்டு அது அருமையான நூல் ஆய்விடாது. அழகான உடல் படைத்திருக்கிறவர்கள் எல்லாம் மேன்மக்கள் ஆவதில்லை. மேலாம் பண்பாடுடையவர்களே மேன்மக்கள் ஆகின்றனர். அங்ஙனம் மேலான கருத்துக்கள் அடங்கியுள்ள நூல்களே அரிய நூல்கள் ஆகின்றன. நூல் ஒன்றுக்குப் புகழும் வந்து அமைவதுண்டு. பலபேரால் மெச்சிப் பாராட்டப்படுங்கால் அது புகழ் என்று பகரப்படுகிறது. இனி புகழில் இரண்டுதரம் உண்டு. நிரந்தரமான புகழ் ஒன்று, தாற்காலிகமான புகழ் ஒன்று. விஷயங்களை எடுத்து மக்களுக்குத் தெரிவிக்கும் ஏடுகளுள் சமாசாரப் பத்திரிகையையும் ஒன்றாக எடுத்துக்கொள்ளலாம். உலக மக்களில் பெரும்பான்மையோர் அதை நாடுகின்றனர். அதன் வருகையை அவர்கள் ஆவலோடு எதிர்பார்த்திருக்கின்றனர்.

அந்த அளவில் சமாசாரப் பத்திரிகைக்குப் புகழ்மிக உண்டு. எனினும் ஒரு நாளைக்குச் செய்தி கொடுத்து உதவுகிற பத்திரிகை அடுத்த நாளைக்குப் பயன்படுவதில்லை. எனவே அது ஓயாது புகழ் பெற்றுக்கொண்டும் அதை இழந்துகொண்டும் இருக்கிறது. கடவுளைப்பற்றி விளக்குகிற நூல்களை எல்லாரிடத்திலும் காணமுடியாது. யாரோ சிலரிடத்தில்தான் அத்தகைய அரிய நூல்கள் அமைந்திருக்கின்றன. இந்த அரிய நூல்களை உடைத்திருப்பவர்கள் எல்லோருமே கடவுள் தத்துவத்தை நூல்களினின்று முறையாக அறிந்துகொண்டவர்கள் அல்லர். அரிய முயற்சி பண்ணுகிறவர்களுக்கிடையில் யாரோ சிலர்தான் இந்தஅரிய நூல்களின் உட்கருத்தை உள்ளபடி அறிகின்றனர். அதை முன்னிட்டு கடவுள் தத்துவத்தை விளக்குகின்ற நூல்களை அத்தகைய அறிஞர் மிகமிகப் பாராட்டுகின்றனர். அன்னவர்களிடமிருந்து தோன்றிவரும் புகழே நிலைபேறு உடைய புகழ் ஆகும். அருமையான தெய்விக விஷயங்களைப் புகட்டி நிலையாய புகழ்பெற்றுள்ள நூல்கள் எவை என்னும் கேள்வி எழலாம். வேதாந்த நூல்கள் கடவுள் தத்துவத்தை விளக்குதற்கென்றே அமைந்தவைகள். வேதத்தினுடைய அந்தம் வேதாந்தம். பிரபஞ்சத்தின் நடைமுறையைப் புகட்டுகிற நூல்கள் எல்லாம் வேதங்கள் ஆகின்றன. பிரபஞ்சத்துக்கு அப்பாலுள்ள பரம்பொருளை விளக்குகின்ற நூலே வேதாந்தம். வேதாந்தக் கோட்பாடுகளை ஆதாரமாக வைத்துக் கொண்டு சமய நூல்கள் பல தோன்றியுள்ளன. அவைகளுள் சைவமதம் முக்கியமானதொரு இடம்பெற்றுள்ளது. தாயுமான சுவாமிகள் அனுஷ்டித்தது சைவமதம். சைவமதத்துக்குரிய நூல்கள் சைவசித்தாந்தம் என்னும் பெயர் பெற்றுள்ளன. வேதாந்தம், சித்தாந்தம் ஆகிய நூல்

களை ஆராய்ந்து பார்த்தால் ஆதியிலிருந்து அந்தம் வரையில் இறைவனுடைய மகிமையைப் புகழ்தற்கென்றே அவைகள் அமைந்துள்ளன என்பது விளங்கும். இந்த நூல்கள் பரம்பொருளை விளக்குவதால் அவை மிகவும் அருமையானவைகள். என்றும் அழியாப் புகழ் இந்த நூல்களுக்கு உண்டு. இக்கருத்துக்களை எல்லாம் அருமைபெறு புகழ் பெற்ற வேதாந்த சித்தாந்த ஆதியான அந்தம் என்று தாயுமானவர் பகர்கின்றார்.

நூல்கள் மூலமாகக் கடவுளை முற்றிலும் அறிந்து கொள்ள முடியுமா? ஏதோ ஒரு சிறிதளவு அறியலாம். அதைவிட உயர்ந்ததொரு பிரமாணம் இருக்கின்றது. அந்தப் பிரமாணத்தை நோக்கி அடுத்தபடியாக அவர் கருத்தைச் செலுத்துகிறார். அதற்கு அறிகுறியாக மீதும் என்னும் சொல்லை அவர் வெளியிடுகின்றார். அதன் பொருள் மேலும் என்பதாகும். மேலும் யாரிடமிருந்து கடவுளைப் பற்றி இன்னும் நன்றாகத் தெரிந்துகொள்ள முடியும் என்கிற கோட்பாடு வருகிறது. மலையின் உச்சிக்குப் போய்விட்டால் அதற்குமேல் செல்லுதற்கு இடமில்லை. அத்துவித நிலை என்பது இரண்டற்ற நிலை எனப் பொருள்படுகிறது. கடவுளிடத்து இரண்டறக் கலந்த ஞானி மேலும் பெறுதற்கு யாது உளது என்று கேட்கலாம். கடலினுள் சென்ற உப்புப் பொம்மை கடலினுள் தனது வடிவத்தை இழந்துவிடுகிறது. ஆனால் தன் இயல்பை அது இழந்துவிடுவதில்லை. எல்லை காணாத உப்பு நீரினுள் அந்தப் பொம்மையும் ஒன்றுபட்டு விடுகிறது. ஞானியர்கள் அங்ஙனம் கடவுளுடன் இரண்டறக் கலந்துவிடுகின்றனர். அத்தகையவர்கள் பரிபக்குவம் அடைந்துள்ள மற்ற சிஷ்யர்களுக்கு உபதேசிப்பதும் அந்தச் சிஷ்யர்களை அத்துவித நிலைக்கு உயர்த்துவதும் அவர்

களுடைய பணிகொண்ட பக்ஷமாகிறது. அந்த ஞானியர் களிடத்திருந்தே கடவுள் சொரூபத்தை இன்னும் நன்ருக அறிந்துகொள்ளலாம். கடவுள் பேரறிவு சொரூபம் என்ருல் பேரறிவை நிறை ஞானியர்களிடத்துக் காணலாம். கடவுள் பேரானந்த சொரூபம் என்ருல் நிறை ஞானியர்களிடத்தும் அந்தப் பேரானந்த சொரூபத்தைக் காணலாம். எனவே நூல் களின் மூலமாகத் தமது பெருமையைக் கடவுள் விளக்கு வதைவிட தம்மிடத்து இரண்டறக்கலந்த சான்ருேர்கள் மூலமாகக் கடவுள் தம் பெருமையை நன்கு விளக்குகின்ருர். சான்ருேர்களை உள்ளபடி அறிவது கிட்டத்தட்ட கடவுளை அறிவதற்கு ஒப்பாகிறது. இக்கருத்தை அத்துவித நிலைய ராய் என்னை ஆண்டு உன் அடிமை ஆனவர்கள் அறிவி னூடும் என்று தாயுமானவர் பகர்கின்ருர்.

இனி உயிர்களை உய்வித்தல் பொருட்டு கடவுள் தாமே ஒரு மூர்த்தியாக வடிவெடுத்து வருவாராகில் அவருடைய மகிமையை இன்னும் நன்ருகத் தெரிந்து கொள்ளலாம். பரிபக்குவம் அடைந்த ஆத்மாக்களை உய்வித்தற் பொருட்டே கடவுள் தக்ஷிணு மூர்த்தியாக எழுந்தருளி யிருக்கின்ருர். அப்படி அவர் எழுந்தருளியிருக்கின்ற இடம் கல்லாலம் என் னும் ஒரு விருக்ஷத்தின் கீழாம். ஆலமரவகைகளுள் கல்லா லம் என்பது ஒன்று. கடவுளுடைய பெருமைக்கே இருப் பிடமாக அத்தகைய மரம் இருப்பதால் திருமருவும் என் கின்ற அடைமொழியை கல்லாலவிருக்ஷத்துக்கு அவர் கொடுக்கின்ருர். பெரியதைச் சார்ந்திருக்கின்ற ஒன்றுக்கு அழகு தானுக வந்துவிடுகிறது என்பது அதன் கருத்து. அத்தகைய தக்ஷிணுமூர்த்தி மனதை முற்றிலும் வென்றவர்க் குப் பிரசன்னமாகின்ருர். அனுபூதியில் அவரை அறிவதும் முக்தியடைவதும் ஒன்றே. எங்கும் நிறைந்துள்ள அத்

தகைய தக்ஷிணமூர்த்தி சிரகிரியில் கோயில் கொண்டும் இருக்கின்றார். அவர் முற்றிலும் தன்னில் தானாய் இருப்ப வர். உயிர்கள் அனைத்துக்கும் அவரே பரமகுரு. தம் சொருபத்தை அவர்தாமே விளக்கிக்காட்டுகிற விளக்கம் தலையாயது. சூரியனுடைய படம் வரைந்து அதைப் பார்ப் பது போன்றது கடவுளின் சொருபத்தை நூல்கள் வாயிலாக அறிவது. சூரியனுடைய பிம்பத்தைக் கண்ணாடியில் பார்ப் பதற்கு ஒப்பானது கடவுளை ஞானியர் வாயிலாக அறிவது. நேரே சூரியனைப் பார்ப்பதற்கு ஒப்பானது கடவுள் அருளால் அவரை சாக்ஷாத்கரிப்பது. இக்கருத்துக்களை எல்லாம் திருமருவு கல்லால் அடிக்கீழும் வளர்கின்ற சித்தாந்த முத்தி முதலே சிரகிரி விளங்கவரு தக்ஷிணமூர்த்தியே சின்மயானந்த குருவே என்னும் சொல் தொடரில் அண் ணல் அமைத்து வைத்துள்ளார். மேற்கூறிய பாடலில் தாயுமானவர் இவையாவையும் தொகுத்துக் காட்டியிருக் கிறார்.

# சின்மயானந்த குரு - 8

கூடுத லுடன்பிரித லற்றுநிர்த் தொந்தமாய்க்
குவிதலுடன் விரிதலற்றுக்
குணமற்று வரவினெடு போக்கற்று நிலையான
குறியற்று மலமுமற்று
நாடுதலு மற்றுமேல் கீழ்நடுப் பக்கமென
நண்ணுதலு மற்றுவிந்து
நாதமற் றைவகைப் பூதபே தமுமற்று
ஞாதுருவின் ஞானமற்று
வாடுதலு மற்றுமேல் ஒன்றற் றிரண்டற்று
வாக்கற்று மனமுமற்று
மன்னுபரி பூரணச் சுகவாரி தன்னிலே
வாய்மடுத் துண்டவசமாய்த்
தேடுதலு மற்றவிட நிலையென்ற மௌனியே
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிண மூர்த்தியே
சின்மயா னந்தகுருவே.

*இயற்கையிலுள்ள பொருள்களையெல்லாம் ஆராய்ந்து பார்த்தால் உண்மை ஒன்று விளங்கும். அவை யாவும் புறப்பட்ட இடத்துக்கே திரும்பிப்போக முயன்று கொண்டிருக்கின்றன. இயற்கையிலுள்ள உயிர்களுள் மனிதன் மிக முக்கியமானவன். எண்ணிப் பார்க்கும் திறன் அவனுக்கு உண்டு. சென்றதைப் பற்றியும் வருவதைப் பற்றியும் அவன் எண்ணிப் பார்க்கிறான். சென்றதில் சில அவனுக்கு ஞாபகத்துக்கு வருகின்றன; பல ஞாபகத்துக்கு வருவதில்லை. இனி வருவதைப்பற்றிய பாங்கும் அத்தகையதே.*

இனி நிகழப் போகின்றவைகளுள் ஏதோ சிலவற்றை அவன் யூகித்து அறிந்துகொள்கிறான். ஆனால் அவனால் முற்கூட்டியே அறிந்துகொள்ள முடியாதவைகள் பல இருக்கின்றன. அவையாவையும்பற்றி மனிதன் சிந்திக்கிறான். அவைகளின் மர்மங்களைத் தெரிந்துகொள்ள முயலுகின்றான். பெரு முயற்சி எடுத்துக்கொண்டான பிறகு வெற்றியும் ஓரளவு அவனுக்குக் கிடைக்கிறது. அப்படி வெற்றி பெற்றவர்களுள் நிறை ஞானிகளே முதன்மை வகிக்கின்றனர். ஏனென்றால் தாங்கள் எப்பொருளினின்று தோன்றி வந்தவர்கள், அந்த மூலப்பொருளுக்கும் தங்களுக்கும் உள்ள தொடர்வு யாது, மூலப்பொருளைத் திரும்பவும் போய் எட்டுவது எங்ஙனம் ஆகிய இக்கேள்விகள் ஞான நெறியில் செல்லுகின்றவர்களுடைய உள்ளத்தில் எழுகின்றன. இக்கேள்விகளுக்குத் தக்கவிடை கிடைக்கின்றபொழுது, இவைகளுக்கு அடிப்படையாயுள்ள உண்மைகளைத் தெரிந்து கொள்கின்ற பொழுது அவர்கள் நிறை ஞானிகள் ஆய்விடுகிறார்கள்.

அத்தகைய நிறைநிலை கணக்கற்ற ஆன்றோர்களுக்கு உண்டாயிருந்தது போன்று தாயுமான சுவாமிகளுக்கும் உண்டாயிருந்தது. தாம் பெற்ற பேற்றினைச் சொல்லால் சித்தரிக்க அவர் முயலுகின்றார். தெய்வீகம் என்னும் பெரிய பேறு மனிதனுக்கு அன்னியமாயிருந்து பிறகு அவன் அதை வந்து கூடுதலன்று. எதையெல்லாம் மனிதன் கூடுகின்றானோ அதனிடத்திருந்து அவன் ஒரு காலத்தில் பிரிந்தாக வேண்டும். இரும்புத்துண்டு ஒன்று தீயுடன் கூடியிருந்து தானே தீப்போன்று ஆகின்றது. ஆனால் தீப்போன்று தென்படுவது அதன் சொந்த நிலையன்று. வெந்தழல் நிலையிலிருந்து அது பிரிந்துவிடக் கூடும். இதற்கு மாறாக சக்கிமுக்கிக் கல்லோ நெடுங்காலம் தண்ணீருக்குள்

கிடக்கலாம். அதை எடுத்துத் தட்டினவுடன் தீப்பொறி பறக்கின்றது. தீப்பொறி பறக்கும் தன்மை சக்கிமுக்கிக் கல்லுடன் கூடியிருந்து அதைவிட்டுப் பிரிந்து போகக்கூடியது அல்ல. அதே பாங்கில் தெய்விகம் மனிதனுக்குச் சொந்தமாயுள்ளது. யாரும் அதை அவனிடத்திருந்து அகற்றிவிட முடியாது. மறைந்திருக்கும் அந்நிலையைத் தோற்றத்துக்குக் கொண்டு வருவது முயற்சியின் விளைவு. இக்கோட்பாட்டை கூடுதலுடன் பிரிதலற்று என்று அவர் இயம்புகின்றார்.

இரும்பு தீ மயமாய்த் திகழ்கின்றபொழுது அதை தீ என்று உபசாரத்துக்குச் சொல்லலாம். உண்மையில் இரும்பு வேறு, தீ வேறு. ஆதலால் இரும்பும் தீயும் தொந்தமானவை. ஒன்று மற்றொன்று அல்ல என்பது அதன் பொருள். சக்கிமுக்கிக் கல்லும் அதன்கண் புதைந்திருக்கும் தீயும் இரண்டு ஆகமாட்டா. சக்கிமுக்கிக்கல்லே தீ, தீயே சக்கிமுக்கிக்கல். அங்ஙனம் மனிதன் வேறு, கடவுள் வேறு அல்ல. கடவுள் தன்மை மறைந்திருக்கின்றபொழுது மனிதன் என்னும் பெயர். கடவுள் தன்மை மிளிரும்பொழுது மெய்ப்பொருள் என்னும் பெயர் வந்துவிடுகிறது. ஆதலால் மனிதனுக்கும் கடவுளுக்கும் உள்ள தொடர்வு நிர் தொந்தமாய் உள்ளது என்று அவர் இயம்புகிறார்.

சூரிய வெளிச்சமும் சூரிய வெப்பமும் சூரியனிடத்துக் குவிந்து கிடக்கின்றன. கதிரவனிடத்திருந்து நாலாபக்கமும் வியாபகமாகின்றபொழுது சூரியவெளிச்சமும் வெப்பமும் விரிவடைகின்றன. மனிதனிடத்திருந்து எண்ணங்கள் ஓயாது கிளம்பி வந்துகொண்டிருக்கின்றன. இந்த எண்ணங்கள் எல்லாம் உறங்குகின்ற நிலையில் அவனிடத்துக் குவிந்து கிடக்கின்றன. அவன் விழித்தெழுந்திருந்து வியவகாரங்கள் செய்கின்ற காலை எண்ணங்கள் எல்லாம் விரி

வடைகின்றன. எண்ணத்தின் விரிவே வாழ்வு என்னும் பெயர் பெறுகிறது. ஆனால் அவன் தன்னுடைய நிஜ சொரூபத்தை சுவானுபூதியில் உள்ளபடி அறிந்து கொள்கின்றபொழுது தனது ஆத்ம சொரூபத்துக்கு குவிதலுடன் விரிதலற்று இருக்கும் நிலை யாண்டும் சொந்தமானது என்பதை அறிந்து கொள்கிறான்.

இயற்கை முழுதும் முக்குண மயமானது. சத்வம், ரஜஸ், தமஸ் என அம்மூன்று குணங்கள் பெயர் பெற்றுள்ளன. இந்தக் குணங்களின் தாரதம்மியத்தால் இயற்கை தோற்றத்துக்கு வந்துள்ளது. சூரிய வெளிச்சத்துக்கு நிறமில்லை. ஆனால் அவ்வெளிச்சத்தை முப்பட்டைக் கண்ணடியில் செலுத்துகின்றபொழுது ஏழு நிறங்களாகப் பிரிகிறது. நிறமற்ற வெளிச்சம் நிறமுள்ளதாக மாறி அமைவதால் இயற்கைத் தோற்றம் உண்டாகிறது. அதே பாங்கில் குணபேதம் மாறி அமைந்திருப்பதால் இயற்கை தென்படுகிறது. ஏழு நிறங்களும் திரும்பவும் ஒன்றித்துவிட்டால் நிறமற்ற வெளிச்சமாய்விடும். முக்குணங்களும் ஒன்றித்துவிட்டால் இயற்கை என்னும் பெயர் போய் மெய்ப்பொருள் என்னும் பெயர் வந்துவிடுகிறது. முக்குணத்தில் மனிதன் கட்டுண்டிருக்கின்றபொழுது மனிதன் இயற்கை சொரூபம். அப்பொழுது அவனை ஜீவாத்மன் என்கின்றோம். முக்குணங்கள் அவனிடத்து ஒடுங்கி மறைந்து பட்டுப்போய் விடுங்கால் அவன் மெய்ப்பொருள் சொரூபமாய் விடுகின்றான். இந்நிலையை அவர் குணமற்று என்கின்றார்.

இருக்கும் இடத்தைவிட்டு ஒருபொருள் அகலுங்கால் அது போக்கு. இல்லாத இடத்தில் தோன்றுங்கால் அது வரவு. மனிதன் தன்னை ஜீவனாகக் கருதிக்கொண்டிருந்தபொழுது வெவ்வேறு உலகங்களுக்குப் போனதாகவும் வந்த

தாகவும் எண்ணி மயக்கம் கொண்டிருந்தான். தன்னை முற்றிலும் பக்குவப்படுத்தியான பிறகு அந்த மயக்கம் மறைந்துபோய்விடுகிறது. ஏனென்றால் இடம் அல்லது பேதம் என்பதே மனதின் கற்பனை. நெடுந்தொலைவிலிருக்கும் அண்டங்கள் என்பவைகள் எல்லாம் விராட் மனதின் கற்பனையாம். அந்த மனம் ஒடுங்குமிடத்து இடம் ஒடுங்கி விடுகிறது. மனிதனுடைய சுழுத்தி அவஸ்தையே இதற்குச் சான்றாகும். சுழுத்தி அவஸ்தையில் மனிதனுக்குப் போக்கும் வரவும் இல்லை. தெளிந்த ஞான நிலையும் அத்தகையது. அக்கோட்பாட்டை வரவினொடு போக்கற்று என்று அவர் இயம்புகின்றார்.

துருவ நக்ஷத்திரம் இருந்த இடத்தில் நிலைத்திருக்கிறது. அதைக் குறியாக வைத்துக்கொண்டு ஏனைய நக்ஷத்திரங்கள் இயங்கி வருகின்றன. மக்களாகிய நாம் ஏனைய நக்ஷத்திரங்கள் போன்றவர்கள். கடவுளோ துருவ நக்ஷத்திரத்திற்கு ஒப்பானவர். எனவே அவருக்கு துருவம் என்னும் பெயர் வந்துள்ளது. இருந்தபடி நிலையாயிருத்தல் என அச்சொல் பொருள்படுகிறது. நிலைத்த பொருளை நாம் குறியாகக் கொண்டிருக்கிறோம். அதை அடைதற்குப் பல நெறிகளைக் கையாளுகிறோம். அதை அடைந்தான பிறகு அது சென்றடையாப் பொருள் என்னும் உண்மை விளங்கிவிடுகிறது. அது முற்றிலும் தன்மயமாய் ஆய்விடுகின்றபொழுது தனக்குத் தானே அது குறியாய் இருப்பதில்லை. இக்கருத்தை நிலையான குறியற்று என்று தாயுமானவர் சொல்லுகிறார்.

உயிர்களுக்கு ஜீவர்கள் என்று பெயர். மலத்துடன் கூடியிருப்பதால் இவர்கள் ஜீவர்களாக இலங்குகிறார்கள் என்பது கோட்பாடு. மலம் என்னும் சொல் அழுக்கு எனப்

பொருள்படுகிறது. எதை மலம் என்று இயம்புவது? இயற்கையில் மலம் என்பது ஒன்றும் இல்லை. நிலைமாறி இருக்கின்றபொழுது நிர்மலப் பொருளை மலம் என்கிறோம். ஒரு விதக் காட்சியில் மலமாகத் தென்படுவது மற்றோர் காட்சியில் தூயது. பசு சாணம் போடுகிறது. பசுவுக்கு அது மலம்; மனிதனுக்கு அது தூயது. மனிதன் மலம் கழிக்கிறான். அதை நல்லுணவாகத் தின்னும் பசுக்கள் உண்டு. இப்படி இயற்கை முழுதும் ஆராய்ந்து பார்த்தால் ஒரு நிலையில் மலமாகத் தென்படுவது மற்றொரு நிலையில் மலம் அன்று. ஆணவத்தை மலம் என்கிறோம். ஆனால் சிற்றுயிர் பேருயிராகப் பரிணமிப்பதற்கு ஆணவம் தேவை. பேருயிர் பரம் பொருளாகப் பரிணமிப்பதற்கு அந்த ஆணவம் அகலவேண்டும். ஆத்மாவுக்கு நிறைநிலை வருகின்றபொழுது மலம் என்பது அதற்கில்லை. இக்கோட்பாட்டை மலமுமற்று என்கின்றார் தாயுமானவர்.

நமக்கு அன்னியமாய் இருக்கின்ற பொருள் ஒன்றை நாம் நாடுகிறோம். கடவுள் நமக்கு அன்னியமானவர் என்று எண்ணிக்கொண்டிருக்கின்ற பொழுது கடவுள் நாட்டம் நமக்கு உண்டாகிறது. நாம் தேடித்திரிகின்ற தெய்வம் தான் நம் மனத்தகத்து நம் சொரூபமாகத் திகழ்ந்துகொண்டிருக்கின்றார் என்னும் உண்மை நமக்கு உதயமாகின்றபொழுது அதை நாடுதற்குப் பதிலாக நம்மை அதன் மயமாக்கி அதனிடம் கொடுத்துவிடுகிறோம். இச்செயலை நாடுதலுமற்று என்று அவர் இயம்புகின்றார்.

சொர்க்கத்துக்குப் போகின்றவர்கள் மேல் லோகத்துக்குப் போவதாக எண்ணுகிறார்கள். நரகத்தில் இடர்ப்படுகின்றவர்கள் பாதாளம் அல்லது கீழ் உலகத்துக்கு அனுப்பப்படுகிறார்கள் என்று கருதப்படுகிறது. இம்மண்ணுலகமோ

இரண்டுக்கும் இடையில் இருப்பதாக நினைக்கிறோம். மேல், கீழ் என்னும் திசைகளை இன்னும் கொஞ்சம் ஆராய்ந்து பார்ப்போம். நடுப்பகலில் பூமியினின்று ஆகாய விமானம் ஒன்று மேல்நோக்கிப் புறப்படுகிறது. அதே இடத்திலிருந்து நள்ளிரவில் மற்றொரு ஆகாய விமானம் மேல்நோக்கிப் போகிறது. இரண்டும் ஒரே திசையை நோக்கிப் போகின்றவைகள் என்று நாம் பொருள் படுத்துகிறோம். ஆனால் உண்மையில் நண்பகலில் புறப் பட்ட விமானத்துக்கு நேர் எதிர்த்திக்கில் நள்ளிரவில் புறப்படுகிற விமானம் போகிறது. பூமியிலிருக்கிற நம்மோடு சீர்தூக்கிப் பார்க்குமிடத்து இரண்டு விமானங்களும் மேல் நோக்கிப் போகுபவைகளே. ஆனால் நம்மை ஒருபுறம் ஒதுக்கி வைத்துவிட்டு சுழலும் பூமியை அளவையாக வைத் துக்கொண்டு பார்த்தால் இரண்டு விமானங்களும் இரண்டு எதிர்த்திசையில் சென்றவைகள் ஆகின்றன. தூங்குகின்ற பொழுது நாம் எங்கெங்கோ போய் வந்தவர்களாக எண்ணு கிறோம். ஆனால் உண்மையில் நமக்கு எவ்விடத்தையும் நோக்கி நண்ணுதல் என்பதில்லை. ஆக வெவ்வேறு உலகங் களை நோக்கி நண்ணுதல் என்பதும் நம்முடைய எண்ணத் துக்கு அன்னியமாய் இல்லை. இக்கருத்துக்களை மேல் கீழ் நடுப்பக்கமென நண்ணுதலுமற்று என்று தாயுமானவர் இயம்புகின்றார்.

பிரபஞ்ச முழுதுக்கும் விந்து அல்லது வித்து ஆக இருப்பது நாதம். இதை நாதப்பிரம்மம் என்று சொல்லு கிறோம். ஓசை, ஒலி மயமாய் இருப்பது நாதம். ஓசை யினின்றுதான் உலகனைத்தும் வந்திருக்கிறது. எனவே ஓசையைக் காரணம் என்றும் உலகைக் காரியம் என்றும் சொல்லலாம். அண்டமெங்கும் இந்த ஓசையானது ஒலித்துக்

கொண்டிருக்கிறது. அவ்வொலியின் புறத்தோற்றமே பிரபஞ்சமனைத்துமாம். காரணம் அற்றவிடத்துக் காரியமும் இல்லாது போய்விடுகிறது. ஓசையே ஒலிப்பதை நிறுத்தி விடுமாகில் பிரபஞ்சத்தின் தோற்றமும் இல்லாது மறைந்து போய்விடும். நமக்குக் கண்கூடாகத் தென்படும் இப்பிரபஞ்சத்துக்கு ஒப்பான மெய்ப்பொருள் ஒன்றுமில்லை என்று நாம் எண்ணி வருகிறோம். ஆனால் நாதம் ஒடுங்குகின்ற இடத்து இந்தப் பிரபஞ்சமே இருக்குமிடம் தெரியாது மறைந்து பட்டுப் போய்விடுகிறது. இப்பிரபஞ்சத்துக்கு அப்பாலுள்ள ஒரு பெருநிலைக்கு நாம் போகமுடியும். அதற்காக என்று நம்மைப் பக்குவப்படுத்துவோமானால் அது நமக்குக் கிட்டி விடுகிறது. இக்கருத்து விந்து நாதமற்று என்று அவரால் இயம்பப்படுகிறது.

ஓசையினின்று உலகம் எப்படி வருகிறது என்று கேட்கலாம். ஓசை தோற்றத்துக்கு வருகின்றபொழுதே அதன் புறத்தோற்றமாகிய ஆகாசம் வருகிறது. ஆகாசத்தினின்று வாயு உரு எடுக்கிறது. அது ஊறு அல்லது ஸ்பர்சத்தை உண்டுபண்ணவல்லது. வாயுவினின்று அக்னி உண்டாகிறது. உருவத்தைக் காட்டும் வல்லமை அதற்கு உண்டு. அக்னியினின்று அப்பு அல்லது நீர் பரிணமிக்கிறது. சுவையை விளக்கிக் காட்டும் தன்மை அதற்கு உண்டு. நீர் பிறகு நிலமாக உரு எடுக்கிறது. நாற்றம் அல்லது கந்தத்தை விளக்கிக் காட்டும் தன்மை அதற்கு உண்டு. இந்த ஐந்துவித நிலைகளுக்கு ஐம்பெரும் பூதங்கள் என்று பெயர். இவை ஒன்றிலிருந்து ஒன்று தோன்றிவந்த முறையிலேயே ஒன்றனுள் ஒன்று ஒடுங்கிவிடவும் கூடும். ஒடுங்கிய நிலையில் இந்த ஐந்து பூதங்களையும் பாகுபடுத்த முடியாது. ஓரே அபேத நிலையில் அவைகள் மறைந்துவிடுகின்றது.

இக்கூற்றை ஐவகை பூதபேதமுமற்று என்று தாயுமானவர் இயம்புகின்றார்.

பிரபஞ்சம் தோற்றத்துக்கு வந்திருக்கிறபொழுது அது சேதனப் பொருளாகவும், ஜடப்பொருளாகவும் காட்சி கொடுக்கிறது. ஒரு நிலையில் அது சேதனப் பொருளாகத் தென்படுகிறது. மற்றொரு நிலையில் அது ஜடப்பொருளாகத் தன்னைக் காட்டுகிறது. சேதனம், ஜடம் என்கின்ற இரண்டு நிலைகளைப் பாகுபடுத்துதற்கு உபாயம் ஒன்று உண்டு. காணும் தன்மை சேதனத்துக்கு உண்டு. காணப் பெறும் தன்மை ஜடத்துக்கு உண்டு. மக்களாகிய நமது அமைப்பிலே இந்த இரண்டு கூறுகளையும் காணலாம். இந்த உடல் என்னுடையது எனக் கருதி மனிதன் தன் உடலை ஓர்கிறான். ஓர்கின்ற மனிதனுக்கு ஞாதுரு என்று பெயர். காண்போன் என்பது அதன் பொருள். உடலைக் காணுதல் அல்லது பொருள் படுத்துதல் அந்தக் காண்போனிடத்து நிகழ்கிறது. காணுதல் என்னும் செயலை ஞானம் என்று சொல்லுகிறோம். நமது உடலையே காண்கின்ற நாம் காணுதல் என்னும் செயலற்ற நிலைக்கு அயர்ந்து தூங்குகின்ற பொழுது சென்றுவிடுகின்றோம். ஆதலால் காணப் படுபொருளும் இல்லாது போய்விடுகிறது. சுழுத்தியில் உண்டாகின்ற இந்த அபேதநிலை நம்மிடத்து மறைந்து கிடக்கின்றது. இது சமாதியில் வருகின்றபொழுது முற்றிலும் தெளிந்த நிலையாய் விடுகிறது. இக்கோட்பாட்டை ஞாதுருவின் ஞானமற்று என்று தாயுமானவர் சொல்லுகிறார்.

உலகம் தோற்றத்துக்கு வந்திருக்கின்றபொழுது நாம் ஜீவர்களாய் இருந்து அவ்வுலகத்தோடு தொடர்வு வைக்கின்றோம். உலகோடு வைக்கின்ற தொடர்வுக்கு வியவகாரம் என்று பெயர். எதை நாம் அடைய விரும்புகின்றோமோ

அதைக் குறித்துப் பெருமுயற்சி எடுத்துக்கொள்கின்றோம். முயற்சி எடுத்துக்கொள்ளுதற்கிடையில் நாடிய பொருள் கைகூடவில்லையே என்னும் வாட்டம் உண்டாகிறது. உலகப்பொருள் விரும்பியபடி கிடைக்கவில்லையே என்கிற வாட்டம் யாரோ ஒருவனுக்கு இருக்கிறது. போதியவளவு தனக்கு இன்பம் வந்து வாய்க்கவில்லையே என்று மற்றொருவன் வாடியிருக்கின்றான். மெய்ப்பொருளாகிய கடவுளை சாக்ஷாத்கரிக்கவில்லையே என்று வேறு ஒருவன் வாடுதல் உறுகின்றான். எனவே உலகிலே நமக்கு வியவகாரநிலை இருக்கும் பரியந்தம் ஏதேனும் ஒன்றைக் குறித்து வாட்டமுறுதல் நம்மிடத்து நிகழ்கிறது. வியவகாரநிலை எல்லாம் கடந்து அதீத நிலைக்குப் போய்விடுகின்றபொழுது எல்லாம் ஏகமாய் விடுகிறது. ஆங்கு நாட்ட முறுதலுக்கு அவசியமில்லை. இக்கருத்தை வாடுதலுமற்று என்று அவர் இயம்புகின்றார்.

அந்த அதீத நிலையை ஏகமாய் என்று சொல்லுகிற இடத்து ஒன்று எனப் பொருள்படுகிறது. ஒன்று என்று சொல்லுகிறபொழுதே அதற்கு மேற்பட்ட இரண்டோடு அதைச் சீர்தூக்குகிறோம்; உண்மையில் சீர்தூக்குதல் என்கின்ற செயலுக்கே ஆங்கு இடமில்லை. ஒப்பிடுதல் என்கின்ற செயலுக்கே இடமில்லாது போய்விடுவதால் அப்பெருநிலையை ஒன்றற்று இரண்டற்று என்று தாயுமானவர் சொல்லுகிறார்.

வாக்கால் ஒன்றை விளக்குங்கால் அப்பொருளுக்கு நாம் எல்லைகட்டி விடுகின்றோம். விளக்கம் என்று சொல்லுமிடத்து அது இன்ன பாங்குடையது, இன்ன பாங்கு அற்றது என்பதாகிறது. பாகுபடுத்தப்படுகிற பொருள் எல்லைக்கு உட்பட்டதாகிறது. ஒற்றுமை வேற்றுமைகளைக்

காட்டுதலின் வாயிலாக மற்ற பொருள்களோடு அது சீர்தூக்கப்படுகிறது. பிரபஞ்சத்தில் காணப்படும் பொருள்களுக்கெல்லாம் இங்ஙனம் விளக்கம் கூறலாம். பரம்பொருள் சொரூபமோ எதனுடனும் சீர்தூக்கப்படுவதன்று. வாக்கின் மூலம் அது பகரப்படுவதுமன்று. விளக்கத்தில் அடங்காத பொருளாக இருப்பதனால் அது ஒன்றுதான் மனிதனுடைய நாவினால் எச்சில்படாதது என்று ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் பகர்ந்துள்ளார். பல கொள்கைகளும் கோட்பாடுகளும் மனதுக்கு எட்டுகின்றன. மனதால் கிரகிக்கப்படுபவைகள் பாகிய பிரபஞ்சத்திலும் இருக்கின்றன. எதையெல்லாம் மனதால் உன்னுகின்றோமோ அதை வாக்காலும் விளக்கலாம். மனதுக்கு எட்டாத ஒன்றை வாக்கினால் சொல்லமுடியாது. பரம்பொருளோ மனதுக்கு எட்டுவதன்று. இக்கோட்பாட்டை வாக்கற்று மனமுமற்று என்று தாயுமானவர் சொல்லுகின்றார்.

பூரணம் என்னும் சொல் எல்லையில் அடங்காததைக் குறிக்கிறது. இயற்கையில் இருப்பவைகள் எல்லாம் எல்லைக்குட்பட்டவைகள். பூரணப்பொருளிடத்து எல்லாம் அடங்கிவிடுகின்றன. மேலும் அதைப் பரிபூரணம் என்று சொல்லுகிற இடத்து குறை ஒன்றும் இல்லா நிறை நிலையாக அது ஆய்விடுகிறது. ஆராய்கின்ற அளவுக்கு நிறைநிலையே அதன்கண் தென்படுகிறது. எனினும் ஆராய்ச்சியில் அது அடங்காதது ஆய்விடுகிறது. வெட்டவெளி எங்ஙனம் அண்டங்கள் அனைத்தையும் தன்னகத்து அடக்கி வைத்துக் கொண்டு அண்டங்கள் அனைத்துக்கும் அப்பாலும் இருக்கின்றதோ அதேபாங்கில் பரிபூரணத்தில் யாவும் நிலைத்திருக்கின்றன. அவை யாவுக்கும் அப்பாலாகவும் அது இருக்கிறது. அதற்குப் போக்கு இல்லை, வரவு இல்லை,

யாண்டும் இருக்கிறபடி இருந்து வருகிறது. அதன் நிலை பேற்றை மன்னுதல் என்னும் சொல் குறித்துக்காட்டுகிறது. சொல்லில் அடங்காத பொருளுக்கு **மன்னுபரிபூரணன்** என்னும் சொல்தொடர் ஓரளவு பொருத்தமானதாகிறது.

உயிர்கள் நிலைபெற்றிருப்பதற்கு நீர் முற்றிலும் அவசிய மானது. வாரி என்றால் நீரைக் குறிக்கிறது. நீருடன் ஒப் பிட்டுப் பரம்பொருள் சுகவாரி என்று அழைக்கப்படுகிறது. இன்பமனைத்துக்கும் அதுவே இருப்பிடமாதலால் இச்சொல் அதற்குப் பொருத்தமானதே. நீரை வாயால் அருந்துகிறோம். அருந்துதல் என்னும் செயலை முகாமையாக வைத்துக் கொண்டே பரம்பொருளிடத்திருந்து நாம் பெறுகின்ற பேரானந்தத்தை நாம் அறிந்தாக வேண்டும். எனவே **சுகவாரி தன்னிலே வாய்மடுத்து உண்டு** என்று தாயுமானவர் இயம்புகின்றார்.

நாம் சாதாரணமாய் உண்ணும் உணவும் பருகும் நீரும் நம்மிடத்து ஜீவபோதத்தை வளர்க்கின்றன. உடல் அபி மானத்தைக் காத்து வைப்பதற்கே நாம் உணவேற்று வரு கிறோம். இந்த உணவு உடலைப் பேணுவதுபோன்று பரி பூரணத்தைப் பற்றிய உணர்வு பரிபூரணத்தின்கண் நம்மை எடுத்துச் செல்லுகிறது. தன்னிடத்துள்ள குறைகளை நீக்கு தற்கே ஜீவன் எண்ணிறந்த பிறவிகளை எடுத்து வந்தான். குறைகளை அகற்றுகின்ற அளவு புதிய குறைகள் தோன்றிக் கொண்டே வந்தன. கடலில் அலைக்குப் பிறகு அலை வருவது போன்று மனிதன் வாழ்ந்திருக்கும் பரியந்தம் குறைகளும் வந்து கொண்டே இருக்கின்றன. உடலுக்கு வேண்டிய உணவை உண்டுகொண்டிருப்பதற்கிடையில் பசி திரும்பத் திரும்ப வந்துகொண்டிருப்பது போன்று குறைபாடுகளும் தோன்றிக்கொண்டே இருக்கின்றன. பரிபூரணம் என்னும்

பாரமார்த்திக நீரை அருந்தியவுடன் அது பேரானந்தத்தில் மனிதனைக் கொண்டு சேர்த்துவிடுகிறது. ஆதலால்தான் அது சுகவாரி என்று அழைக்கப்படுகிறது. அதை அருந்திய வுடன் மனிதன் தன் வசத்தை ஒதுக்கிவிட்டுப் பரவசம் அடைந்து விடுகின்றான். பேறு அனைத்தும் அதில் அடங்கி யிருக்கிறது. சுகவாரி தன்னிலே வாய்மடுத்து உண்டு அவசமாய் என்று இந்நிலையைத் தாயுமானவர் விளக்கு கின்றார்.

இந்தப் பரிபூரணப் பேரானந்தநிலை புறஉலகில் எங்கேயோ தேடிக் கண்டுபிடிக்கப்படுவதன்று. இதுகாறும் ஜீவனிடத்திருந்த சிற்றுணர்வு பரவசம் அடைந்தான பிறகு பேருணர்வாக விரிந்துவிடுகிறது. தன்னில் தானய் உள்ள நிலை அது. அதை தேடுதலு மற்ற இடம் நிலை என்று அவர் பகர்கின்றார். இதைக் காட்டி அருளியவர் அவருடைய குரு ஆகிய மௌனி. தக்ஷிணாமூர்த்தியே அந்த மௌனகுரு வாகவே வந்து தமக்கு அப் பாரமார்த்திகப் பெருநிலையைக் கொடுத்து அருளியதாகவும் அது மனதையெல்லாம் கடந் துள்ள முக்திநிலை என்றும் தமது பாடலில் தாயுமானவர் விளக்கிக் காட்டுகின்றார். இத்தனை கருத்துக்களும் மேற் கூறிய அவர் பாடலில் அடங்கியிருக்கின்றன.



## சின்மயானந்த குரு - 9

தாராத அருளெலாந் தந்தருள மௌனியாய்த்
தாயனைய கருணைகாட்டித்
தாளிணையென் முடிசூட்டி அறிவிற் சமாதியே
சாசுவத சம்ப்ரதாயம்
ஓராமல் மந்திரமும் உன்னுமல் முத்திநிலை
ஒன்றேடிரண்டெனுமல்
ஒளியெனவும் வெளியெனவும் உருவெனவும் நாதமாம்
ஒலியெனவும் உணர்வுறுமல்
பாராது பார்ப்பதே ஏதுசா தனமற்ற
பரமஅநு பூதிவாய்க்கும்
பண்பென் றுணர்த்தியது பாராம லந்நிலை
பதிந்தநின் பழவடியர்தஞ்
சீரா யிருக்கநின தருள்வேண்டும் ஐயனே
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிண மூர்த்தியே
சின்மயா னந்தகுருவே.

*நாம் பெறக்கூடியவைகள் இரண்டு இருக்கின்றன. ஒன்று பொருள்; மற்றது அருள். இவ்வுலக சம்பந்தமான பேறு அனைத்துக்கும் பொருள் என்பது பொதுப் பெயர். தனம், தான்யம், தனயன் ஆகிய இவை யாவும் பொருள் எனப்படுகின்றன. இவைகள் ஐம்பொறிகளால் நுகரப் படுபவைகள். ஒருவனுக்குரிய பொருளை இன்னொரு வனுக்கு எடுத்து வழங்கலாம். தகுதியற்றவனுக்கும் பொருளை எடுத்துக் கொடுத்து விடமுடியும். அருளோ அத்தகையதன்று. ஐம்பொறிகளால் அதை நுகரமுடியாது.*

ஆனால் மனதால் அதை உணரலாம். மனிதனிடத்துள்ள அக்ஞான இருளையும், பிரபஞ்ச வாழ்வு என்னும் கீழ்மையையும் அகற்றி மெய்யறிவையும், பேரின்பத்தையும் உண்டுபண்ண வல்லது அருள். அருளை வழங்க எல்லாருக்கும் இயலாது. அது இறைவனுக்கே உரியது. இறைவனுடைய அருட்செல்வர்களாய் இருக்கும் நிறைஞானிகள் சிலர் ஓரளவு அதை எடுத்து வழங்கமுடியும். அப்படி அவர்கள் அதை வழங்குகின்றவிடத்தும் அது இறைவனிடத்திருந்து வருகிறது என்று ஞானிகள் இயம்புகின்றனர். எனவே அருட்செல்வம் தெய்வத்துக்கும் தெய்விகப்பண்பு அமையப்பெற்றவர்க்குமே உரியதாகிறது.

இறைவனது அருளைப் பெறுதலில் பல படித்தரங்கள் இருக்கின்றன. வேலையாள் ஒருவன் தன் தலைவனுக்கு உள்ளன்போடு பாடுபடுகிறான். தனக்கென்று எதையும் தேடாது தன் தலைவனுக்காகவென்றே அந்த வேலைக்காரன் தனது உழைப்பையெல்லாம் கரவாது கொடுத்துவருகிறான். வெளியூருக்குப் போக எண்ணங்கொண்டிருந்த எஜமானன் தன் வேலைக்காரனை அழைத்துத் தனது ஸ்தானத்தில் அவனை அமரச்செய்து தனது உடைமைகள் அனைத்தையும் அவனுடையதாக வைத்துக்கொண்டு பாதுகாத்து வரும்படி சொல்லுகின்றான். அந்தப் பெரிய பதவியையும் பொருளையும் ஏற்க வேலைக்காரன் அறவே மறுக்கின்றான். எனினும் எஜமானன் அவனை வற்புறுத்தி அந்த உயர்ந்த நிலையில் இருந்து காரியங்களைப் பார்க்கும்படி அவனை அமர்த்துகிறான். அதுபோன்று ஏகதேசம் பரிபக்குவம் அடைந்துள்ள சாதகன் ஒருவனுக்கு தெய்வம் தன்னிடத்து இரண்டறக்கலத்தல் என்னும் அருளை நல்குவாராகில் அது அருள் பேற்றினுள் ஒப்பு உயர்வு அற்றதாகிறது. அத்

தகைய பேறு தாயுமானவருக்குக் கிடைத்தது. தாம் பெற்ற அருள் பேற்றினை அதற்கேற்ற சொல்தொடர்களைக்கொண்டு தெரிவிக்கின்றார். தாராத அருளெலாந் தந்தருள என்பது அவருடைய வாக்கு.

அந்த ஒப்பற்ற வாய்ப்பினைக் கொடுத்துதவுதற்கு இறைவன் எப்படி வந்தார் என்னும் கேள்வி பிறக்கக்கூடும். அதற்கு அவர் மௌனியாய் என்று விடை கொடுக்கிறார். தாயுமான சுவாமிகளுக்கு ஞானோபதேசம் செய்தற்குத் திருமேனி தாங்கி எழுந்தருளியவர் மௌனகுரு. அருள் குரு வேறு கடவுள் வேறு என்று ஆத்ம சாதகர்கள் கருதுவதில்லை. குருவைக் கடவுளாகக் கருதுவது அவர்கள் அனைவருடைய இயல்பு. கடவுளே தக்ஷிணாமூர்த்தியாக எழுந்தருளியிருக்கின்றார். அவர் செய்வது மௌனோபதேசம். எனவே திருமேனி தாங்கி தாயுமானவரை ஆட்கொள்ள வந்தவரும், தக்ஷிணாமூர்த்தியாக எழுந்தருளியிருக்கும் சிவபெருமானும் மௌனி என்னும் சொல்லுக்கு இலக்கு ஆகின்றனர். தாயுமான சுவாமிகளுக்கு மனத்தகத்து எழுந்தருளியிருந்த மௌனகுரு தக்ஷிணாமூர்த்தியாவர். புறத்தில் காட்சி கொடுத்து அவரை ஆட்கொள்ள வந்த மௌனகுரு திருமூலர் மரபில் வந்தவராகும். உள்ளத்திலும் புறத்திலும் முற்றிலும் ஒத்திருந்த அருட்பேறு இப்பொழுது அவருக்குக் கிட்டியது. அதைத் தாராத அருள் என்று அவர் விளக்குவது முற்றிலும் பொருத்தமானது.

கடவுளுக்குக் கருணாகரன் என்று பெயர். கருணைக்கு இருப்பிடம் என அது பொருள்படுகிறது. கடவுள் ஒருவரே கருணைகாட்ட வல்லவர். முறைதவறி நாம் அச்சொல்லை மக்களுக்குரியதாக்குகின்றோம். நாம் ஜீவகாருண்யம் உடைத்திருக்க வேண்டும் என்று பேசுகிறோம். கருணையின்

உட்கருத்தை அறிந்தால் அச்சொல்லை நாம் நமக்குரியது ஆக்கமாட்டோம். பால்கடலைக் கடைந்ததின் விளைவாக நஞ்சு உண்டாயிற்று. அதை ஏற்றுக்கொள்ள யாருக்கும் இயலவில்லை. அதை எதிர்க்க யாரும் துணியவில்லை. ஆனால் தம்மைத் தஞ்சமடைந்த உயிர்களைக் காத்தல் பொருட்டு கடவுள் அதைத் தமக்குரியது ஆக்கிக் கொண்டார். உயிர்கள் அனைத்துக்கும் நலன் புரிதலும், அதன் விளைவாக வரும் துன்பங்களையெல்லாம் தனக்குரியதாகவே இருக்கட்டும் என்னும் மனநிலை கருணையென்று இயம்பப்படுகிறது. மக்களைப் பெற்றெடுத்த தாய்மார் சிலரிடம் அத்தகைய மனநிலையை ஒரு சிறிதளவு காணலாம். கடவுளிடத்துத்தான் அது முற்றிலும் நிறைந்திருக்கிறது. தாயினிடத்தும் சில வேளைகளில் நாம் அதைக் காண்பதால் தென்படுகின்ற தாயன்பை உபமானமாகவும், தென்படாத கடவுளின் கருணையை உபமேயமாகவும் வைத்துத் தாயனைய கருணை காட்டி என்று தாயுமானவர் இயம்புகின்றார்.

குருவினிடமிருந்து சிஷ்யன் பெறுகின்ற தீக்ஷை பல பாங்குகளில் நிகழ்வதுண்டு. ஸ்பர்ச தீக்ஷை, சக்ஷு தீக்ஷை, ஸ்ரோத்ர தீக்ஷை, சங்கல்ப தீக்ஷை என தீக்ஷைகள் பலதரப் படுகின்றன. சிஷ்யனுடைய திருமேனிமீது குரு கை வைத்துச் செய்யும் தீக்ஷைக்கு ஸ்பர்ச தீக்ஷை என்று பெயர். அதில் மற்றுமோர் உயர்ந்த நிலை உண்டு. குரு முற்றிலும் பரபோதத்தில் இருக்கின்றபொழுது சில வேளைகளில் தமது திருவடிகளை சிஷ்யனுடைய மேனியின்மீது அல்லது சிரசின் மீது நாட்டுகின்றார். குருவிடமுள்ள பரபோதம் அப்பொழுது சிஷ்யனுக்கும் உண்டாய் விடுகிறது. எரிந்து கொண்டிருக்கிற விறகுக்கட்டையைத் தொடுவதால் உலர்ந்த விறகுக் கட்டையிலும் தீ உண்டாய் விடுவது போன்றது ஸ்பர்ச

தீக்ஷை. குருவின் திருவடிகளில் சிஷ்யன் பக்தி மிகக் கொண்டிருக்கின்றான். அவருடைய சொரூபத்தில் மற்ற உறுப்புகளை யெல்லாம்விடத் திருவடிகளிலேயே அவன் அலாதியான பற்று வைக்கின்றான். திருவடிகளைத் தொடுதலிலும் அவன் உரிமை மிக எடுத்துக்கொள்கின்றான். தமது திருவடிகளால் குரு தன்னைத் தீண்டினால் அது தனக்குக் கிடைப்பதற்கரிய பேறு என்று சிஷ்யன் உணருகிறான். அத்தகைய வாய்ப்பு தாயுமான சுவாமிகளுக்குக் கிடைத்தது. தாளிணை என் முடிசூட்டி என்று அவர் இயம்புகின்றார். குருவினுடைய திருவடிகள் இரண்டையும் தமது சிரசில் தரித்துக் கொள்ளுவதற்கான வாய்ப்பு தமக்குக் கிடைத்தது என்று அவர் தெரிவிக்கின்றார்.

கருணை கூர்ந்து குரு செய்து வைத்த தீக்ஷையினால் தமக்கு சமாதிநிலை கிட்டிவிட்டதென்று அவர் இயம்புகின்றார். சமாதிநிலை என்றால் என்ன என்பது நம் போன்றவர்களுக்குத் தெரியாது. ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் மிக அண்மையில் தோன்றிய மஹாபுருஷர். அவருக்கு அடிக்கடி சமாதிநிலை கூடிவிடும். அக்காட்சியைக் காணப்பெற்றவர்கள் அவர் முன்னிலையில் ஓர் அலாதியான ஆனந்தத்தை அனுபவித்தனர். அதைப்பற்றி மேலும் அறிந்துகொள்ள அவர்கள் ஆசை கொண்டனர். எனவே அந்த சமாதிநிலையைத் தங்களுக்கு விளக்கிக் கூறும்படி பல அன்பர்கள் ஸ்ரீ ராமகிருஷ்ணரிடம் வேண்டிக்கொண்டனர். "சொல்லில் அடங்காத அதை நான் எங்ஙனம் சொல்லால் விளக்குவேன்?" என்றார் ஸ்ரீ ராமகிருஷ்ணர். பின்பு அவர்களுக்கு விளங்கக்கூடிய ஓர் உபமானத்தைக்கொண்டு ராமகிருஷ்ணர் சமாதிநிலையை விளக்கினார். அன்பர் ஒருவரைப் பார்த்து "உனக்கு விருப்பமான உணவுப் பொருள் எது?"

என்று கேட்டார். பாதாமி அல்வா தனக்கு மிக விருப்ப மானது என அந்த அன்பர் தெரிவித்தார். "உன் மேனி முழுதும் நாவு ஆய்விட்டதாக நினைத்துக்கொள். மிகப் பெரிய பாத்திரம் ஒன்றனுள் உனக்கு விருப்பமான அந்த பாதாமி அல்வா முறையாக சித்தப்படுத்தி வைத்திருக்கிறது என்றும் வைத்துக்கொள். உன்னை அதனுள் அமுக்கிவைத் தால் உடல் முழுதிலும் அந்தச் சுவையை ரசிப்பாய் அல்லவா? அப்படி அதை நீ ரசிப்பதைவிடப் பன்மடங்கு உயர்ந்த ஆனந்த நிலையாகும் சமாதி" என்று அவர் விளக்கினர். அதே சமாதியை ஆன்றோர் மற்றொரு பாங்கிலும் விளக்கி யிருக்கின்றனர். அது பேரானந்த நிலை. அதே பாங்கில் அது பேரறிவு நிலையாக அமைவதும் உண்டு. அறிவு அள வையில் அடங்காது திரண்டு வருகின்றபொழுது அது பேரறிவு ஆய்விடுகிறது. அதன் திரட்சியை எதனோடும் ஒப்பிட முடியாது. கரை காணாத உணர்வு, தங்கு தடையற்ற உணர்வு, தெள்ளத் தெளிந்த உணர்வு இத்தகைய சொற் களைக் கொண்டு அப்பேரறிவு நிலையை ஏதோ ஒருவாறு விளக்குகிறோம். சொல்லால் விளக்குவது குறைபட்ட விளக் கம். அப்பேரறிவிலேயே திளைத்து விடுங்கால் அது மெய் யான விளக்கமாகிறது. அப்படித் தாம் பெற்ற அனுபவத்தை அறிவிற் சமாதியே சாசுவத சம்ப்ரதாயம் என்று தாயு மானவர் சாட்டுகின்றார். சாசுவத சம்ப்ரதாயம் என்னும் சொற்களை நாம் அறிந்துகொள்ளுவது அவசியமாகிறது. எக்காலத்துக்கும் எது பொருந்துகிறதோ அது சாசுவத மானது. சம்ப்ரதாயம் என்பது முடிவு அல்லது கொள்கை. தொன்றுதொட்டு காலமெல்லாம் தோன்றி வந்துள்ள ஆன் றோர் அனைவர்க்கும் ஒப்ப முடிந்த முடிவு அதுவே என சாசு வத சம்ப்ரதாயம் என்னும் இரண்டு சொற்கள் பொருள்படு

கின்றன. அதாவது சமாதிநிலையை அடையும் ஆப்தன் ஒருவன் பேரறிவுப் பெருவெளியில் ஒன்றுபட்டு விடுகின்றான் என்பது அதன் கருத்து.

உலகில் நாம் பெறுகிற பேறுகள் பல காரண காரியமாய் வந்தமைகின்றன. கணக்குப் போடுகிறோம், கணக்கை அறிந்து கொள்கிறோம். விரும்புவதைப் பெறுகிறோம், மகிழ்ச்சியடைகிறோம். இப்படி உலக நிலையில் நாம் பெறுகிற அறிவும் இன்பமும் காரண காரியமாய் வந்தமைகின்றன. ஆனால் சமாதி நிலையில் உண்டாகும் தெள்ளத் தெளிந்த பேரறிவு நிலையானது காரண காரியம் என்னும் கோட்பாட்டில் அடங்காது எனினும் அதைப் பெறுவதற்கான மனதைப் பரிசுத்தப்படுத்தியாக வேண்டும். என்னென்ன உபாயங்களைக் கையாண்டால் மனது பரிசுத்தமடைகிறது என்பதை அவர் இப்பொழுது விளக்குகிறார். ஓர்தல் என்னும் சொல் ஆராய்தல் எனப் பொருள்படுகிறது. உலகில் நாம் பெற்று வருபவைகளுள் நித்தியமானவை எவை, நித்தியமல்லாதவை எவை என்று ஓர்கிறோம். முறையாக ஓர்ந்து பார்த்தால் கடவுள் ஒருவர்தான் நித்தியமானவர் என்பதும் உலகிலுள்ள ஏனைய யாவும் நிலையற்றவைகள் என்பதும் நமக்கு விளங்கும். இப்படி இடையறு விசாரம் செய்தால் மனது தெளிவடைகிறது. ஆனால் சமாதியோ அப்படி ஓர்வதின் விளைவன்று. ஆதலால் அதை ஓராமல் என்று அவர் இயம்புகின்றார்.

மனதை உறுதிப்படுத்துகிற எண்ணத்துக்கு மந்திரம் என்று பெயர். கடவுளின் திருநாமங்களாக அமைந்துள்ள சில சொற்கள் இருக்கின்றன. அவைகளை நாம் ஓயாது உச்சரித்துக் கொண்டிருந்தால் மனது உறுதியடைகிறது. மந்திரஜபம் என்று அதைச் சொல்லுகிறோம். 'நற்றவா

உனை நான் மறக்கினும் சொல்லு நா நமசிவாய' என்னும் கோட்பாடு மந்திர ஜபமாகிறது. ஓயாது மந்திர ஜபம் செய்கின்றவர்களுக்கு மனது சுத்தியடைகிறது. உறுதியையும் அது பெற்றுவிடுகிறது. வெறும் மந்திர ஜபத்தாலேயே வேடனுடைய நிலையிலிருந்த ஒரு மனிதன் வால்மீகி மஹரிஷியாக மாறியமைந்த வரலாறு நமக்குத் தெரியும். ஆனால் அப்படி மனம் பண்பட்டு விடுவதின் விளைவாக சமாதிநிலை வந்து நமக்கு அமைவதன்று. முற்றிலும் மனபரிபாகம் அடைந்தான பிறகும் சமாதிநிலை கூடாது போய்விடலாம். மனபரிபாகத்தோடு சேர்ந்து இறைவனுடைய அருளும் துணைபுரிய வேண்டும். இக்கோட்பாட்டை மந்திரமும் உன்னுமல் என்று தாயுமானவர் சொல்லுகிறார். உன்னுதல் என்னும் சொல் நினைத்தல் அல்லது ஜபித்தல் எனப் பொருள்படுகிறது.

சமாதிநிலை கூடுகின்ற இடத்து முக்தி தானே வந்து அமைந்துவிடுகிறது. முக்தி என்னும் சொல் விடுதலை எனப் பொருள்படுகிறது. யாருக்கு எதனிடத்திருந்து விடுதலை என்றும் கேள்வி பிறக்கலாம். ஜீவாத்மாவுக்கு ஜீவபோதத்திலிருந்து விடுதலை உண்டாகிறது. கடலில் உள்ள அலை ஒன்றுக்கு அலை என்கின்ற எல்லையினின்று விடுதலை வந்து விட்டால் அது வடிவத்தையும் அந்த வடிவத்துக்குரிய பெயரையும் இழந்துவிடுகிறது. அதனால் அதற்கு நஷ்டம் ஒன்றுமில்லை. அது கடலோடு கடலாய் விடுகிறது. அலையாக வடிவெடுத்திருந்த போதிலும் அது உண்மையில் கடல் சொரூபமே. அலையையும் கடலையும் சீர்தூக்குதற்கு ஒன்று இரண்டு என்கின்ற எண்ணிக்கைகளைக் கையாளுவது பொருந்துமா என்னும் கேள்வி பிறக்கக்கூடும். ஆங்கு ஒன்று இரண்டு என்கின்ற எண்ணிக்கை பேச்சுக்கு உதவு

கிறதே ஒழிய பொருள் விளக்கத்துக்கு உதவுவதில்லை. சமாதிநிலையில் ஆத்மா ஜீவபோதத்தை இழந்து பரபோதத்தைப் பெற்றுவிடுகின்றபொழுது அந்த நிலையை விளக்குதற்கும் இந்த எண்ணிக்கைகள் பயன்படமாட்டா. இக்கருத்தை முத்திநிலை ஒன்ருேடு இரண்டெனுமல் என்று தாயுமானவர் சொல்லுகின்ருர்.

கடவுளுக்குக் கொடுத்துள்ள பல விளக்கங்களுள் அவர் ஜோதி சொரூபம் என்பது ஒரு விளக்கமாகும். பிரபஞ்சத்தில் தென்படுகின்ற சூரியன், சோமன், அக்னி முதலியவைகளை உபமானமாகக் காட்டி அவருடைய ஜோதி சொரூபம் அறிவுறுத்தப்படுகிறது. ஆனல் இருள் நிலையோடு ஒப்பிடுமிடத்தே உலகில் ஜோதி சொரூபமாயுள்ள சூரியன், சோமன், அக்னி முதலியவைகளுக்கு விளக்கம் கிடைக்கிறது. ஒன்ருேடு ஒன்று சீர்தூக்கி அறியப்படுகின்ற ஞானங்கள் அனைத்தும் இவ்வுலகைப் பற்றியவைகளாகும். கடவுள் ஒளிவடிவினர் என்பது உண்மை. ஆனல் இருளுக்கு அன்னியமாயிருக்கிற சூரிய ஒளி போன்றதல்ல கடவுளின் ஒளி. ஒப்பிட்டுப் பார்ப்பதற்கு சமாதி நிலையில் கடவுளுக்கு அன்னியமாக இன்னெரு பொருள் இல்லை. எனவே கடவுளினிடத்துள்ள ஒளி பிரபஞ்சத்திலுள்ள ஒளி போன்று அல்லாது ஆத்மஜோதியாகிறது.

பிரபஞ்சம் முழுதும் வடிவை உடைத்ததாகவும் வடிவைக் கடந்ததாகவும் இருக்கிறது. வடிவைக் கடந்த நிலையில் வெட்டவெளி தென்படுகிறது. இந்த வெட்டவெளிக்கு ஒரு எல்லை கிடையாது. வெட்டவெளியை ஜட ஆகாசம் என்கிருேம். இந்த ஆகாசத்தோடு கடவுள் ஒப்பிடப்படுகின்ருர். ஆனல் உணர்வு அற்ற ஜட ஆகாசம் போன்றவர் அல்ல அவர். அவர் சித் ஆகாசம். அறிவுப் பெருவெளி

என அச்சொல் பொருள்படுகிறது. ஆனால் வெளி என்று சொல்லுகிற இடத்து அதற்கு அன்னியமாய் இருக்கும் வடிவங்களோடு அதை ஒப்பிடுகிறோம். அப்படி ஒப்பிட்டு அறியப்படுவதெல்லாம் உலகப் பொருளைப்பற்றிய ஞானமாய்விடுகிறது. கடவுளோ உலக அமைப்பைக் கடந்தவர். எனவே வெளி என்னும் சொல் அவரை முற்றிலும் விளக்கி விடாது.

கடவுளுக்கு உருவம் உண்டு என்று சொல்லலாமா என்னும் கேள்வி அடுத்தபடியாக வருகிறது. கைலை மலையில் எழுந்தருளியிருக்கும் நாதனை உருவம் படைத்திருப்பவனாகவே உலக மக்கள் கருதுகின்றனர். வைகுண்ட நாதனாகிய விஷ்ணுவுக்கும் மக்கள் அங்ஙனம் உருவம் கற்பிக்கின்றனர். உருவத்தைக் கற்பித்தால்தான் சிவனை விஷ்ணுவினின்று வேறுபட்டதாக விளக்கமுடியும். பூமியில் உருவம் படைத்துள்ள கண்டங்களை ஆசியா என்றும், ஐரோப்பா என்றும் பாகுபடுத்த இயலுகிறது. ஆனால் மேலே உள்ள ஆகாசத்தை ஆசியாவுக்குரிய ஆகாசமென்றும் ஐரோப்பாவுக்குரிய ஆகாசமென்றும் பிரிவுபடுத்த முடியாது. கடவுளுக்கு நாம் உருவம் கொடுத்துவிட்டால் அவரை ஒரு எல்லைக்குள் அடைத்து விடுகின்றோம். எல்லையில் அடங்கிய பொருள் எங்கும் நிறைபொருள் ஆகாது. எனவே அவருக்கு ஒரு வடிவம் கொடுப்பது அவருடைய நிறை நிலைக்கு முரண்பட்டதாகும்.

கடவுளை நாத பிரம்மம் என்கின்றோம். நாதம் என்னும் சொல் ஒலி எனப் பொருள்படுகிறது. இயற்கை முழுதுக்கும் ஒலி வடிவம் உண்டு. கடவுளும் அவருக்கு அமைந்துள்ள பெயரும் இணைபிரியாதவைகள் எனக் கருதப்படுகின்றன. சிவன், நாராயணன் என்ற பெயர்கள் வெறும்

பெயர்கள் அல்ல. அவைகள் மந்த்ர சொரூபம். ஓசை வடிவங்களாக அவை யாண்டும் நிலைத்திருக்கின்றன என்பது கோட்பாடு. ஆனால் ஓசையும் இவ்வுலகை ஒட்டியது. ஒருவித ஓசை இன்னொருவித ஓசையினின்று பிரித்தெடுத்துக் காட்டப்படுகிறது. அப்படிப் பிரிப்பதால்தான் மொழி உண்டாகிறது. ஓசையின்கண் மாறுபாடு ஏற்படாவிட்டால் மொழி தோன்றுதற்கே இடமில்லாது போய்விடும். இனி ஓசையில் தோற்றம், ஒடுக்கம் என்பன இருக்கின்றன. கடவுளை ஒலி வடிவம் என்று விளக்குமிடத்து அவருக்குத் தோற்றமும், ஒடுக்கமும் உண்டு என்பதை நாம் ஒத்துக் கொள்ள வேண்டிவரும். ஆனால் அத்தகைய மாறுபாடு ஒன்றும் மெய்ப்பொருளினிடத்து உண்டாவதில்லை. ஆகவே இத்தகைய விளக்கங்கள் எல்லாம் அவரை உள்ளபடி காட்டித்தரமாட்டா. இந்த விளக்கங்கள் எல்லாம் சித்த விருத்தி—மனதில் விகாரங்களாக—வந்தமைகின்றன. சமாதி நிலையில் எஞ்சியிருக்கும் மெய்ப்பொருளோ இவ்விளக்கங்களுக்கு அப்பாற்பட்டது. இக்கருத்துக்களையெல்லாம் தொகுத்து ஒளியெனவும் வெளியெனவும் உருவெனவும் நாதமாம் ஒலியெனவும் உணர்வுருமல் என்று தாயுமானவர் இயம்புகின்றார்.

உலகப் பொருள்களை உணர்தற்கு ஐம்பொறிகளும் பயன்படுகின்றன. எந்தப் பொறியின் மூலமாகப் புற உலகத்தை நாம் நுகர்ந்தாலும் பார்த்தல் என்னும் சொல் எல்லாப் பொறிகளுக்கும் பொதுவாகிறது. ஆதலாலே கண்ணால் அப்பொருளைப் பார் என்றும், சொல்லுவதைக் கேட்டுப்பார் என்றும், ஒன்று கடினமானதா என்பதைத் தெரிந்துகொள்ளுதற்கு அதைத் தொட்டுப்பார் என்றும், நாற்றம் நல்லதா அல்லது கெட்டதா என்பதைத் தெரிந்து

கொள்ளுதற்கு முகர்ந்துபார் என்றும், உணவு எப்படி அமைந்திருக்கிறது என்பதைத் தெரிந்து கொள்ளுதற்கு சுவைத்துப்பார் என்றும் சொல்லுகிறோம். இங்ஙனம் பார்த்தல் என்னும் செயல் ஐம்பொறிகளுக்கும் பொதுவாய் வந்தமைகிறது. பரம்பொருளை சாக்ஷாத்கரிப்பதற்கு இந்தக் கண் உதவாது. பொறிகள் ஐந்துமே அதற்குப் பொருந்த மாட்டா. மனதுக்கும் அது அப்பாற்பட்டது. எனினும் சமாதி நிலையில் அதைப்பற்றிய உணர்வைப் பெறுவது இப்பிரபஞ்சப் பார்வைகள் அனைத்துக்கும் மிக உயர்ந்த தாகிறது. இக்கருத்தை பாராது பார்ப்பதே என்று அவர் இயம்புகின்றார்.

சாதனம் என்னும் சொல் பழக்கம் எனவும் உபாயம் எனவும் பொருள்படுகிறது. எத்தகைய பழக்கம் பெற்று கடவுளை உணர்தல் என்னும் கேள்வி வரக்கூடும். அல்லது எத்தகைய உபாயத்தைக் கையாண்டால் அவரை அடையப்பெறலாம் என்கின்ற கேள்வியும் வரக்கூடும். உண்மையில் அவர் சென்றடையாச் செம்பொருள். செய்த சாதனத்தினின்று உருவெடுக்கும் சாத்தியம் அல்ல அவர். அப்படியானால் சாதனங்களுக்குத் தேவையில்லையோ என்னும் கேள்வி வரும். சாதனங்களுக்குத் தேவை உண்டு. ஐம்பொறிகளையும் மனதையும் ஒழுங்குப்படுத்தி அவைகளை ஒடுக்கி விடுதற்கே சாதனங்கள் பயன்படுகின்றன. சூரியனை மேகங்கள் மறைத்துக்கொண்டிருக்கின்றன. ஆனால் உண்மையில் சூரியன் மேகங்களால் மறைக்கப்படுபவன் அல்லன். காற்றடித்தோ அல்லது மழை பெய்தோ மேகங்கள் தட்டழிந்து போய்விட்டால் சூரியன் தனது சுயம் பிரகாசத்துடன் ஒளிர்வது தென்படுகிறது. மேகத்தை அகற்றுவது போன்றது ஆத்ம சாதனங்கள். மனது என்

னும் மேகத்தை உரு அழிப்பதற்குச் சாதனங்கள் முற்றிலும் தேவையாய் இருக்கின்றன. அங்ஙனம் கருவிகரணங்கள் எல்லாம் ஒடுங்கியவிடத்து சமாதி நிலையில் மெய்ப்பொருள் முற்றிலும் தன்மயமாய் ஒளிர்கிறது. ஆத்ம சாதகன் அடைய வேண்டிய முடிவான பாரமார்த்திகப் பெருநிலையை ஆங்கு அவன் அடைந்தவன் ஆகிறான். அதைப் பாராது பார்ப்பதே ஏது சாதனமற்ற பரம அனுபூதி என்னும் சொல்தொடரில் தாயுமானவர் விளக்குகிறார்.

பரம அனுபூதி என்பது முடிவான அனுபவம் எனப் பொருள்படுகிறது. அனுபூதியின் உட்பொருள் நமக்கு விளங்கவேண்டும். அதை அறிந்துகொள்ளுதற்குச் சான்று ஒன்று எடுத்துக்கொள்வோம். மனிதன் ஒருவன் படுத்து உறங்கச் சென்றான். கதவை உட்புறம் தாளிட்டுக்கொண் டான். அறையில் அவனைத்தவிர வேறு யாரும் இல்லை. அயர்ந்து தூங்கினான். சிறிது நேரத்தில் கனவு ஒன்று உண்டாயிற்று. அதில் உலக வியவகாரநிலை வந்தது. யாரோ ஒரு மனிதனைச் சந்தித்தான். அவனுக்கும் இவனுக் கும் பேச்சுவார்த்தை வந்தது. பிறகு அது சண்டையாக வடிவெடுத்தது. இவனோடு சண்டை போட்டவனுக்குப் பெருங்கோபம் மூண்டுவிட்டது. கத்தியை எடுத்து அவன் நெஞ்சைத் துளைத்துக்கொண்டு போகும்படி குத்திவிட்டான்! செத்தேன் என்று சொல்லிக்கொண்டு கனவுகண்ட இந்த மனிதன் கீழே விழுந்தான். அந்த உணர்வில் இவன் திடுக்கிட்டு எழுந்திருந்தான். தான் கண்டது கனவு என்று உணர்ந்தான். அறை தாளிட்டபடி இருந்தது. உள்ளே யாரும் வந்துவிடவில்லை. தன் உயிருக்கும் சேதம் உண்டாக வில்லை. எனினும் கண்ட கனவின் விளைவாக விழித்துக் கொண்ட பிறகும் நெஞ்சம் துடிதுடித்தது. சற்று நேரத்துக்

குப் பிறகு இவன் முற்றிலும் தெளிவடைந்தான். சொப்பனத்திலிருந்து விழித்துக்கொண்ட பிறகே தனக்கு ஆபத்தில்லாத சொந்த நிலையைப்பற்றிய மெய்யுணர்வு இவனுக்கு உண்டாயிற்று. இந்தப் பாங்கில் மனிதனுக்குத் தனது நிஜ சொரூபத்தைப்பற்றிய மெய்ஞானம் வருகின்றது. தான் பெற்றிருந்த பிறப்பு இறப்பு என்பனவெல்லாம் வெறும் மதி மயக்கத்தால் வந்தவைகள் என்பதை அப்பொழுது அவன் அறிந்துகொள்கிறான். அது பரம அனுபூதி என்று சொல்லப்படுகிறது. சாதனங்கள் எல்லாம் மனதைப் பண்படுத்துதற்குப் பயன்படுகின்றன. மனது பண்பட்டான பிறகு அது இருக்கும் இடம் தெரியாது மறைந்து போய்விடுகிறது. மனதற்ற நிலையில் தனது நிஜ சொரூபமாகிய ஆத்மபோதம் அல்லது பரபோதம் சாதகனுக்கு வந்துவிடுகிறது.

கனவு கண்டுகொண்டிருந்தபொழுதும் அந்த அறையினுள் தூங்கிக்கொண்டிருந்த மனிதன் தனது நிஜசொரூபத்தினின்று வழுவியவன் அல்லன். தான் கொலையுண்டதாகத் தானே கற்பித்துக்கொண்டான். அந்தக் கற்பனையினின்று விழித்தெழுந்தான பிறகு அவன் செய்துகொண்ட கற்பனை அவனுக்குப் பொருளற்றதாய்ப் போய்விட்டது. கனவு கண்டுகொண்டிருந்தது அக்ஞான நிலை. அதைவிட்டு விழித்துக்கொண்டதற்கு எது உபாயமாய் இருந்ததோ அது சாதனம். இதுகாறும் இயம்பிய நித்திய அநித்திய வஸ்து விசாரம், மந்திரஜபம், ஞான ஒளி, சங்கல்ப விகல்ப மற்ற மனவெளி, உபாசனை மூர்த்தியாகிய உருவம், அதன் பெயராகிய நாதம் அல்லது ஒலி ஆகிய யாவும் சாதனங்களாக வாய்க்கலாயின. அந்தச் சாதனங்களே நேராக சாதகனுக்குப் பரபோதத்தை உண்டுபண்ணிவிடவில்லை. அவனுடைய மனதை வெல்லுதற்கு அவை யாவும் பயன்

பட்டன. தனக்குச் சொந்தமாயுள்ள பரபோதத்தை அறிந்து கொள்ளுதற்கு மனது என்னும் திரை நீங்கப்பெற வேண்டும். சாதனங்கள் யாவும் அதற்கு உபாயமாய் இருந்தன. இக்கருத்தை பரம அனுபூதி வாய்க்கும் பண்பென்று உணர்த்தியது என்று தாயுமானவர் இயம்புகிறார். பண்பு என்னும் சொல் இங்கே உபாயம் எனப் பொருள் படுகிறது.

இத்தகைய பார்வையைப் பெற்றான பிறகு அந்த அனுபூதிமானுக்கு மற்றொரு சிறிய அவா வந்துவிடுகிறது. அது அக்ஞானத்தின் விளைவால் வருவதன்று. ஞானத்தின் முதிர்ச்சியால் வருகின்ற அவா அது. அத்தகைய உயர்ந்த மனநிலையை சாதாரணமான உலக மக்களுக்கிடையில் உண்டாகும் ஒருவித வாஞ்சையோடு ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் ஒப்பிட்டுக் கூறுகின்றார். கஞ்சாக் குடித்துப் பழகிய ஒரு மனிதனுக்கு அம்மயக்கத்தில் ஒருவித ஆனந்தம் உண்டாகிறது. அவன் திரும்பத் திரும்பக் கஞ்சாவெறியை நாடுகின்றான். ஆனால் தனியாக அதை அனுபவிக்க அவன் விரும்புவதில்லை. கஞ்சாக் குடிகாரர்கள் எங்கே இருக்கிறார்கள் என்று அவன் தேடியலைகின்றான். அத்தகைய குடிகாரர்கள் அகப்பட்டுவிட்டால் அவன் பூரிப்பு மிகக்கொள்ளுகின்றான். சில வேளைகளில் அத்தகைய குடிகாரர்கள் ஒருவரை ஒருவர் அன்பால் கட்டித் தழுவிக்கொள்வதுண்டு. கஞ்சாவைக் கசக்கி, குழாயில் வைத்து தீ மூட்டி, அவர்கள் வட்டமிட்டு உட்கார்ந்து பேருக்கு ஒரு தம் இழுக்கின்றபொழுதே அவர்களுக்குப் பரமானந்தம் உண்டாகிறது! ஈசுவரானுபூதி வாய்க்கப்பெற்றவர்களுடைய நிலை இத்தகையது. தாம் அடையப்பெற்ற பரம அனுபூதியை அடைந்துள்ள வேறு சான்றோர்களைக் காண்கின்றபொழுது அதனால் அவர்களுக்கு

வரும் பரமானந்தம் சுவானுபூதியில் தாம்பெற்ற பரமானந்தத்தைவிடப் பன்மடங்கு உயர்ந்ததாகிறது. அத்தகைய நல்லார் இணக்கத்தின்பொருட்டு உடல் வாழ்க்கையிலேயே கொஞ்சம் நிலைத்திருக்கவும் அப்பெருமக்கள் விரும்புகின்றனர். இக்கருத்தைத் தாயுமானவர் இங்ஙனம் இயம்புகின்றார்: பண்பென்று உணர்த்தியது பாராமல் அந்நிலை பதிந்த நின் பழ அடியர்தம் சீராயிருக்க நினதருள் வேண்டும் ஐயனே. அனுபூதிமான்கள் பரம்பொருளில் இரண்டறக் கலந்துவிடுகின்றனர். தாங்கள் பெற்ற பெரும் பேறு அதனைப் பாரினில் உள்ளோர்க்குப் பகர்தற்கு அவர்கள் வருவதில்லை. அப்படி வருகின்ற யாரோ சிலர்தான் இத்தகைய சத் சங்கத்தில் பேரானந்தம் கொள்ளுகின்றனர். நாம் ஈண்டு கஞ்சாக் குடிகாரர்களைச் சான்றாக எடுத்துக் கொண்டோம். ஆனால் கஞ்சா வெறியில் அவர்கள் சீராயிருப்பதில்லை. சீர்கெட்டவர்கள் ஆய்விடுகின்றனர். பாரமார்த்திகப் பெருநிலைக்குச் சென்றவர்களோ மறந்தும் ஒழுங்குப்பாட்டினின்று தவறிவிடுவதில்லை. ஜாக்கிரதம், சொப்பனம், சுஷுப்தி ஆகிய மூன்று அவஸ்தைகளிலும் சீராயிருப்பதே அவர்களின் பெருமை. சீர்கெட்ட நிலை ஞானியென்று சொல்லிக்கொள்பவர் ஒருவரிடம் தென்படுமாகில் அவருடைய ஞானத்தைப்பற்றி மற்றவர்கள் எச்சரிக்கையாயிருக்கவேண்டும். அத்தகைய போலி ஞானி ஒருவர் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரிடம் வந்துசேர்ந்தார். அவர் காமத்துக்கு வசப்பட்டிருந்தவராகத் தென்பட்டார். உலகமே வெறும் தோற்றம் என்று சொல்லிக்கொண்டிருந்தவர் அப்படி முறைதவறி நடந்துகொள்ளுவது சரியாவென்று பரமஹம்ஸர் கேட்டார். பொய்யான உலகில் இந்தக் கூடா வொழுக்கம் எப்படி மெய்யாகும் என்று அந்த ஞானி தமது

தீச்செயலுக்குச் சமாதானம் சொல்லவந்தார். உமது வேதாந்தத்தின்மீது நான் மூத்திரம் பெய்கிறேன் என்று பரமஹம்ஸர் வெளியேபோய் சிறுநீர் கழித்துவிட்டு வந்து விட்டார். உண்மையான ஞானிகளோ சீர்மையே வடிவெடுத்தவர்கள். அவர்களோடு தொடர்வு வைக்கின்றவர்களுக்கெல்லாம் அச்சீரிய நிலை விரைவில் கைகூடிவிடுகிறது. எனவே நல்லார் இணக்கம் பாரமார்த்திகப் பேர் அனுபவத்தைவிட ஒருவிதத்தில் இனியதாய் இருக்கிறதென்று தாயுமானவர் போற்றுகின்றார்.

கடவுளுக்கும் மனிதனுக்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமையை ஆன்றோர் ஒருவர் அரிய பாங்கில் விளக்கினார். மனது என்னும் ஒரு தத்துவத்தைக் கடவுளோடு இணைத்து வைத்தால் அப்பொழுது கடவுள் என்னும் பொருள் மனிதனாய் விடுகிறார். மனிதன் முயற்சிகள் பல எடுத்துக்கொள்கிறான். அவைகளுள் செயற்கரிய செயல் மனது என்னும் கற்பனையைத் தன்னிடத்திருந்து அகற்றுவதாம். அது அகன்று போய்விட்டால் மனிதன் தெய்வமாய் விடுகிறான். சித்தாந்த முத்தி முதலே என்னும் சொல் தொடரில் இக்கோட்பாடு அடங்கியிருக்கிறது. இக்கருத்துக்கள் எல்லாம் மேற்கூறிய பாடலில் அமைந்துள்ளன.

---

## சின்மயானந்த குரு - 10

போதமாய் ஆதிநடு அந்தமும் இலாததாய்ப்
புனிதமாய் அவிகாரமாய்ப்
போக்குவர வில்லாத இன்பமாய் நின்றநின்
பூரணம் புகலிடமதா
ஆதரவு வையாமல் அறிவினை மறைப்பதுநின்
அருள்பின்னும் அறிவின்மைதீர்த்
தறிவித்து நிற்பது நின்அருளாகில் எளியனேற்(கு)
அறிவாவ தேதறிவிலா
ஏதம்வரு வகையேது வினையேது வினைதனக்
கீடான காயமேதென்
இச்சா சுதந்தரஞ் சிறிதுமிலை இகபரம்
இரண்டினுள் மலைவுதீரத்
தீதிலருள் கொண்டினி யுணர்த்தியெனை யாள்வையோ
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிண மூர்த்தியே
சின்மயா னந்தகுருவே.

மெய்ப்பொருளுக்குக் கடவுள் என்னும் பெயர் வந்துள்ளது. கடவுளுக்குக் கணக்கற்றபேர் கணக்கற்ற விளக்கங்களைக் கொடுத்திருக்கிறார்கள். ஒருவர் கொடுத்துள்ள விளக்கம் மற்றொருவருக்கு விளங்குவதில்லை. கடவுள் மனம் மொழிக்கு எட்டாதவர் என்பதும் கோட்பாடு. இந்த மெய்ப் பொருளின் தத்துவத்தை அறிந்துகொள்ளுதல் மிகமிக எளிது என்று இன்னொரு கூட்டத்தார் இயம்பி வந்திருக்கின்றனர். பொய்யைப் புகலுகின்றவர்கள் அதற்குப் பெரும் பாடுபடவேண்டும். மெய்யை எடுத்து இயம்புதற்கு சிரமம்

ஒன்றுமில்லை. உள்ளதை உள்ளபடி குழந்தை கூறுகிறது. அதற்குப் பொய் சொல்லத் தெரியாது. வளர்ந்து மனதில் கோணல்கள் பல அமையப் பெற்றிருக்கின்றவனே பொய் சொல்லுதலில் நிபுணன் ஆகின்றான். பொய்யைப் பத்துபேர் பத்துவிதமாகச் சொல்லலாம். மெய்யை எத்தனைபேர் எடுத்துரைத்தாலும் அதன்கண் உள்ள மெய்ம்மை அத்தனை பேருக்கும் பொதுவாகும். கடவுளுக்குக் கொடுத்துள்ள விளக்கங்களுள் மிகமிக எளியது प्रज्ञानं ब्रह्म - ப்ரக்ஞானம் பிரம்ம என்னும் மஹாவாக்கியம். அதைத்தமிழில் சொல்லு கின்ற இடத்து பேரறிவே பரம்பொருள் என்பதாகிறது. அறிவே கடவுள். அறிவு எந்த உயிரிடத்து இல்லாதிருக் கிறது? எல்லா உயிர்களிடத்தும் சற்று ஏறத்தாழ அறிவு இருக்கிறது. அறிவுக்கு உச்சநிலை என்பது உண்டு. உச்ச நிலையில் இருக்கின்றபொழுது அது பரம்பொருள் என்று அழைக்கப்படுகிறது. பேரறிவை விளக்குதற்கு இன்னும் பல பதங்கள் இருக்கின்றன. அவைகளுள் போதம் என்பது ஒன்று. இருக்கிறேன் என்கிற உணர்ச்சி கல்லினுள் மறைந்து கிடக்கிறது. இருக்கிறேன் என்கிற உணர்ச்சி மனிதனிடத்து மேன்மையடைந்திருக்கிறது. இருக்கிறேன் என்கிற உணர்ச்சிக்குப் போதம் என்று பெயர். பரம்பொரு ளுக்கு விளக்கம் கொடுத்துள்ள தாயுமானவர் போதமாய் என்று இயம்புகிறார்.

மக்களாகிய நாம் பெற்றுள்ள போதத்தில் பல படித் தரங்கள் இருக்கின்றன. அவைகளுள் மூன்று படித்தரங்களை முக்கியமானவைகள் என்று மொழியலாம். விழித்திருக்கி றோம். போதத்தில் இது ஒரு படித்தரம். கனவு காண்கிறோம். இது மற்றொரு படித்தரம். கனவில்லாத அயர்ந்த உறக்கம் வருகிறது. அதுவும் ஒரு படித்தரமாகிறது. அயர்ந்து தூங்கு

கின்ற நிலையில் நமக்கு ஒன்றும் தெரிவதில்லை எனினும் அது உணர்வற்ற நிலையன்று. ஆங்கும் உணர்வு அல்லது போதம் இருக்கிறது. அயர்ந்த உறக்கத்திலுள்ள போதத்துக்குத் துவக்கம் என்றும் நடுநிலை என்றும் முடிவு என்றும் பாகு பாடில்லாது இருக்கிறது. ஒடுங்கிய போதத்தில் அமைந்துள்ள அந்த நிலை மிகமிக உயர்ந்த போதமாகிய நிர்விகல்ப சமாதியிலும் உண்டாகிறது. பரம்பொருளிடத்துள்ள உயர்ந்த உணர்வுநிலை நிர்விகல்ப சமாதியை அடையப் பெற்றுள்ள ஆத்ம சாதகனுக்கு அமைகிறது. பேச்சுக்கு எட்டாத அந்த உயர்ந்த அனுபவத்துக்குத் துவக்கம் என்பதும் இடைநிலை என்பதும் கடைநிலை என்பதும் உண்டாவதில்லை. மற்றொரு உபமானத்தைக்கொண்டு இதை அறிந்து கொள்ள முயலலாம். இசை வல்லவன் ஒருவன் உயர்தரத்திலுள்ள இசையைக் கேட்டு ரசிக்கிறான். அதை ரசிக்கின்ற பொழுது அவன் பெற்றுள்ள போதம் அல்லது உணர்வு உயர்ந்ததாகிறது. அவன் ரசித்துக்கொண்டிருக்கிற பெரு நிலைக்குத் துவக்கம், இடைநிலை, முடிவு என்பது அற்றுவிடுகிறது. ரசிக்கும் நிலையை விட்டு சாதாரண வியவகார நிலைக்கு வருகிறபொழுது அதற்குத் துவக்கம் இருந்ததாகவும் முடிவு அடைந்துவிட்டதாகவும் பொருள்படுத்துகிறான். இசையை ஆழ்ந்து ரசிக்கின்ற வேளையில் அவன் காலத்தையே கடந்தவனாய் விடுகின்றான். ஆதலால் ரசித்தல் என்னும் அனுபவத்துக்கு ரசித்துக்கொண்டிருக்கிற வேளையில் ஆரம்பம், முடிவு என்கின்ற வரையறைகள் அற்றுவிடுகின்றன. பரம்பொருள் பேருணர்வு சொரூபமாக இருக்கிறது. அந்தப் பேருணர்வுக்கு இன்ன காலத்தில் இன்ன இடத்தில் இன்ன செயல் மூலமாக உணர்வு துவங்கியது என்று பாகுபடுத்த முடியாது. அந்த உணர்வுக்கு ஒரு முடி

வும் உண்டாவதில்லை. அது முற்றிலும் பேருணர்வு மயமா கவே இருந்துவருகிறது. எக் குறியிலும் அது கட்டுப்படுவ தில்லை. இக்கோட்பாட்டை ஆதி நடு அந்தமும் இல்லாத தாய் என்று தாயுமானவர் சொல்லுகின்றார்.

உலகப் பொருள்களைப் புனிதமானவைகள் என்றும் புனிதமற்றவைகள் என்றும் நாம் பாகுபடுத்துகிறோம். புனிதம் என்றால் என்ன என்பதை நாம் அறிந்துகொள்ளவேண்டும். ஒரு பொருள் முற்றிலும் தன்மயமாய் இருக்குமாகில் அது புனிதம் வாய்க்கப்பெற்றது. அதற்கு அன்னியமான மற்றொரு பொருள் அதில் வந்து சேர்ந்துவிடுமாகில் அது புனிதத்தை இழந்துவிடுகிறது. கறந்தெடுத்த ஆவின்பால் இருக்கிறது. அதில் வேறு பொருள் எதையும் நாம் சேர்க்க வில்லை. அப்பொழுது அது தூய நிலையில் இருக்கிறது. வானத்தினின்று மழைநீர் பொழிகிறது. பூமியில் படுதற்கு முன்பு அது தூய நிலையில் இருக்கிறது. பூமியில் பட்ட வுடன் அதன் புனிதம் கெட்டுவிடுகிறது. பூமியில் படாத தூய மழை நீரைப் புனிதமானது என்று பகரலாம். பிறகு அந்த மழைநீரை எடுத்துப் பாலில் கலக்கினால் பாலின் தூய்மை போய்விடுகிறது. ஏனென்றால் தூய நன்னீரும் பாலுக்கு அன்னியமான பொருள். ஒரு பொருள் மற்றொரு பொருளோடு கலக்கப்பெறுமிடத்து அதன் புனிதம் போய் விடுகிறது. பரம்பொருளோடு எதையும் நாம் கலக்க முடியாது. அத்துடன் கலக்குதற்கு ஆகிய அன்னிய பொருள் எதுவும் இல்லவே இல்லை. யாண்டும் அது தன்மயமாய் இருக்கிறது. ஆதலால் பரம்பொருளைக் குறித்து புனிதமாய் என்று அவர் இயம்புகின்றார்.

விகாரப்படுதல் என்னும் சொல்லுக்கு நாம் பொருள் கண்டுபிடிக்கவேண்டும். தடாகத்திலுள்ள நல்ல நீர் காற்று

அடிப்பதால் அலை வீசுகிறது. அலைவீசுதல் அந்த நீரினிடத்து உண்டாயிருக்கும் விகாரமாகும். காற்று புனிதமானதாகவும் அமைதியுற்றதாகவும் இருக்கிறது. பிறகு அது வேகமாக அடித்து மண் முதலியவைகளைக் கிளப்பித் தன்னோடு சேர்த்துக் கொள்ளுமாகில் அக்காற்று விகாரப்பட்டதாய் விடுகிறது. கண்ணாடி ஒன்று மேடுபள்ளம் இல்லாது ஒப்பமாயும் ஒழுங்காயும் அமைக்கப்பெற்றிருக்கிறது. அது விகாரமற்ற நிலை. அப்படியல்லாது அக்கண்ணாடி மேடுபள்ளங்கள் அடைந்தோ கரடுமுரடு ஆன அமைப்பு உண்டாகியோ இருந்தால் அது விகாரப்பட்ட நிலையாகிறது. விகாரப்பட்ட கண்ணாடியின் மூலமாக வெளியில் உள்ள பொருள்களைப் பார்த்தால் அப்பொருள்களும் விகாரப்பட்டவைகளாகத் தென்படும். ஒப்பமாயுள்ள நல்ல கண்ணாடியின் மூலமாக வெளியில் உள்ள பொருள்களைப் பார்த்தால் அவைகளின் காட்சியில் திரிவு ஒன்றும் ஏற்படாது. உள்ளபடி அவைகள் தோன்றும். அத்தகைய நேரான தோற்றத்துக்கு விகாரப்படாத நிலை அல்லது அவிகாரமுள்ள நிலை என்னும் பெயர் வந்துள்ளது. மக்களாகிய நாம் மனது என்னும் கண்ணாடியைக்கொண்டு புறவுலகைப் பார்க்கிறோம். வெவ்வேறு விகாரங்களை எடுப்பது மனதின் இயல்பு. துன்புறுதல், இன்புறுதல், பொறாமை கொள்ளுதல், விசனப்படுதல் ஆகிய நிலைகள் எல்லாம் மனதுக்குரிய விகாரங்கள் ஆகின்றன. அந்தந்த விகாரத்துக்கு ஏற்ற பிரகாரம் புறப்பொருள்களின் தோற்றம் மாறுபட்டு நமக்கு விளங்குகின்றது. பரம்பொருள் உலகப் பொருள்களோடு ஒப்பிடப்படுவதன்று. மனது என்னும் கண்ணாடியின் மூலமாகக் காணப்படுகிற பொருளும் அன்று. மனதற்ற நிலையில் உரு எடுக்கின்ற பேருணர்வே பரம்பொருள் ஆகிறது. அது யாண்டும் தன்

மயமாய் இருப்பதனால், அதனிடத்து எந்தவிதமான மாறுதலும் உண்டாகாதிருப்பதனால், அதை அவிகாரமாய் என்று தாயுமானவர் இயம்புகின்றார்.

உயிர்கள் அனைத்தும் வாழ்க்கையில் பெரும் பற்றுதல் வைத்திருக்கின்றன. ஏன் அவைகள் பற்றுவைக்கவேண்டும் என்னும் கேள்வி எழலாம். வாழ்வில் இன்பமுண்டு. இன்பத்தைப் பெருக்கவும் அதைக் காத்து வைப்பதற்கும் வாழ்வு பயன்படுகிறது. இன்பத்தில் மக்கள் பற்று வைத்திருப்பதால் வாழ்க்கையிலும் அவர்கள் பற்று வைத்திருக்கிறார்கள். இன்பத்துக்குப் பிறப்பிடம் அல்லது இருப்பிடம் எது என்னும் கேள்வி எழலாம். இன்பம் உண்மையில் கடவுள் சொரூபம். இன்பம் வேறு கடவுள் வேறு அல்ல. இன்பத்துக்கு ஆனந்தம் என்பது மற்றொரு பெயர். ஆனந்தம் பிரம்மம் என்பது ஒரு மஹாவாக்கியம். ஆனந்தத்தை நாடுகிற உயிர்கள் எல்லாம் உண்மையில் பரம்பொருளையே நாடுகின்றன. ஆனால் எவ்வுயிர்க்கும் நிலைத்த இன்பம் வந்து வாய்ப்பதில்லை. பகலைத் தொடர்ந்து இரவு வருவது போன்று இன்பத்தை நாடுகிறவர்களுக்கெல்லாம் துன்பமும் ஒரு புறம் வந்துகொண்டே இருக்கிறது. பெரும்பாலான உயிர்களுக்கு இன்பத்தைத் துன்பத்தோடு சீர்தூக்கிக் காட்டினால் மட்டும் அது விளங்குகிறது. அதை ஒரு சான்றால் விளக்கலாம். பசி என்னும் துன்பத்தை அனுபவித்துப் பார்க்கின்றவர்களுக்குத்தான் புசித்தல் என்னும் இன்பத்தை அனுபவிக்க முடிகிறது. பசியே இல்லாது போய் விட்டால் புசிப்பதில் யாரும் இன்பத்தைப் பெற முடியாது. பசித்திருப்பதும் பிறகு உணவு உண்பதும் மாறி மாறி வந்து கொண்டிருக்கின்றன. அதாவது துன்பமும் இன்பமும் மாறி மாறி வந்துகொண்டிருக்கின்றன. அதேவிதத்தில் மரணத்தில்

துன்பம், ஜனனத்தில் இன்பம். இவ்வுலக வாழ்க்கையில் ஒன்றைத் தொடர்ந்து மற்றது வருவது இயல்பு. இக்கோட்பாட்டை வேறு ஒரு பாங்கில் பகருமிடத்து உயிர்கள் அடைகின்ற இன்பத்துக்குப் போக்குவரவு உண்டு. போக்குவரவற்ற இன்பம் உண்டா என்னும் கேள்வி அடுத்தபடியாக வருகிறது. இம்மண்ணுலகில் இரவும் பகலும் மாறிமாறி வருவதுபோன்று உயிர்களுக்கு இன்ப துன்பங்கள் மாறிமாறி வருகின்றன. சூரியனுக்கு இரவு பகல் என்கிற மாறுபாடு இல்லை. அது யாண்டும் சுயம்பிரகாசமானது. அதேவிதத்தில் பரம்பொருள் யாண்டும் இன்ப சொரூபம். உயிர்கள் அடைகின்ற இன்பம் இடையிடையே மறைக்கப்படுவது போன்று பரமாத்மாவிடத்துள்ள இன்பத்தை எதுவும் மறைப்பதில்லை. அது யாண்டும் பரமானந்த சொரூபமாய் இருக்கிறது. இக்கோட்பாட்டைப் **போக்கு வரவில்லாத இன்பமாய் நின்றநின்** என்ற சொல்லடுக்கில் தாயுமானவர் விளக்கிக் காட்டுகின்றூர்.

இயற்கையில் நிறைநிலை என்றும் குறைநிலை என்றும் இரண்டு இயல்புகள் இருக்கின்றன. காற்று நிறைந்திருக்கும் இடம் ஒன்று உண்டு. அது குறைந்திருக்கும் இடமும் இருக்கிறது. நிறைந்த இடத்திலிருந்து குறைந்த இடத்துக்குக் காற்று போவது இயல்பு. கடலில் நீர் நிறைந்திருக்கிறது. தடாகத்தில் நீர் இடையிடையே குறைந்து போகிறது. அதன் குறையை நிறைவேற்றுதற்குக் கடலினின்று நீர் ஆவியாகக் கிளம்பி மேகமாக மாறி மழையாகப் பெய்து ஓடையாக வந்து தடாகத்தின் குறையை நீக்கி வைக்கிறது. இங்ஙனம் குறைவுகளை யெல்லாம் நிறைவுபடுத்தும் செயல் இயற்கையில் இருந்து கொண்டிருக்கிறது. நிறைநிலைக்குப் பூரணம் என்று பெயர். எதற்குப் போக்கும்

வரவும் புணர்வும் இருக்கிறதோ அது நிறை பொருள் ஆகாது. எது யாண்டும் தன்மயமாய் நிறைவாய் இருக் கிறதோ அது பூரணப் பொருள். பூரணத்தை அடைதலே வாழ்க்கையின் குறிக்கோள். குறைபட்டிருக்கும் எதனிடத் தும் மனிதனுக்குத் திருப்தி உண்டாவதில்லை. நிறைந்திருப் பதனிடத்தே அவனுக்குத் திருப்தி வருகிறது. கடலை எட்டு கின்ற நதி ஒரு விதத்தில் பூரணத்தை எட்டியதாகிறது. மேற்கொண்டு அது செய்வதற்குச் செயல் ஒன்றுமில்லை. அதேபாங்கில் பூரணத்தை மனிதன் எட்டிவிடுவானுகில் மேலும் அவன் பெறுதற்கு ஒன்றுமில்லை. கடவுள் பூரணன் என்று பகரப்படுகிருர். கடவுளை அடைகின்ற உயிர்கள் எல்லாம் பூரணத்தை அடைந்தவர்கள் ஆகின்ருர்கள். உயிர் களுக்குப் புகலிடமாய் இருப்பதும் அந்தப் பூரணமே. இக் கோட்பாட்டைத் தாயுமானவர் பூரணன் புகல் இடமதாய் என்று இயம்புகின்ருர்.

இம்மண்ணுலக வாழ்க்கையில் உயிர்களுக்கு நிலைத்த ஆதரவு ஒன்றுமில்லை. மக்கள் இங்கு பெறுகின்ற ஆதரவு கள் எல்லாம் தாற்காலிகமானவைகள். நதிக்குப் புகலிடம் கடல். அதை அடைந்தான பிறகு தகுந்த ஆதரவை அது பெற்றுவிட்டது எனலாம். மக்களுக்கு ஆதரவாய் இருப்பது பரம்பொருள். பரம்பொருளை அடைந்தான பிறகு ஆதரவைப் பெற்ருய் விட்டது. அதைப் பெறுதற்கு முன்பு மனிதனுக்கு ஓய்வு ஒழிவு இல்லை. முயற்சிகளும் ஓயாது நடைபெற்றுக் கொண்டே இருக்கும். அத்தகைய வியவகார நிலையை ஆதரவு வையாமல் என்று அவர் இயம்புகின்ருர்.

இன்பத்தைப் பெறுதற்கும் பூரணத்தை அடைதற்கும் உயிர்கள் முயன்று வருகின்றன. ஏதோ சிறிதளவு இன் பத்தை இடையிடையே பெறுவதும் பூரணத்தை எட்டி

விட்டதாக சிற்சில வேளைகளில் எண்ணிக் கொள்வதும் மக்களுடைய இயல்பு. அங்ஙனம் இன்பத்தைப் பெறுதற்கும் பூரணத்தை அடைதற்கும் ஏதுவாய் இருப்பது அறிவு. மக்கள் பெற்றுள்ள அறிவு நிலைத்த அறிவன்று. மேகங்களுக்கிடையிலுள்ள சூரியன் அல்லது சந்திரன் தொடர்ந்து வெளிச்சம் கொடுப்பதில்லை. வெளிச்சம் கொடுப்பதும் பிறகு அது கொடாது மறைந்து போவதும் சூரிய சந்திரர்களுக்கிடையில் நடைபெற்று வருகிறது. நாம் பெற்றுள்ள அறிவும் இடையிடையே மறைக்கப்படுவதாகவும் பிறகு தெளிவு பெறுவதாகவும் மாறி மாறி அமைந்து வருகிறது. அறிவு தெளிவு பெற்றிருக்கின்ற வேளையில் தகுந்த நல்வினைகளை ஆற்றுகிறோம். அறிவு மறைந்துகிடக்கின்ற வேளைகளில் தகாத தீவினைகளையும் சில சமயங்களில் செய்துவிடுகின்றோம். நிலைத்துள்ள தெளிந்த அறிவு நம்மிடத்து இல்லாதிருப்பதே இதற்குக் காரணமாகிறது. ஜீவர்களுக்கு ஜீவபோதம் இருக்கும் பரியந்தம் அறிவில் மறைவும் தெளிவும் மாறிமாறி அமைந்துகொண்டே இருக்கும். இறைவனுடைய பிரபஞ்ச நடைமுறை என்னும் பெருந்திட்டத்தில் அமைந்திருப்பது இதுவேயாம். இக்கோட்பாட்டை அறிவினை மறைப்பது நின் அருள் பின்னும் அறிவின்மை தீர்த்து அறிவித்து நிற்பது நின் அருள் ஆகில் என்று தாயுமானவர் சொல்லுகின்றார்.

ஈண்டு ஒரு கேள்வி எழுகின்றது. ஜீவர்கள் யாண்டும் சுய அறிவு படைத்தவர்களா அல்லது இறைவன் அப்போதைக்கப்போது தருகின்ற அறிவை தாற்காலிகமாய்ப் பெறுகின்றவர்களா என்பது அக்கேள்வி. சந்திரன் பிரகாசத்தைப் பெறுவதும் பிறகு அதை இழப்பதும் மாறி மாறி அமைந்துகொண்டிருக்கிறது. சந்திரனுக்கு சுயம்பிரகாசம்

இல்லை. சூரியனிடத்திருந்து இரவல் வாங்கிய வெளிச்சம் சந்திரனிடத்து வளரவும் நிறைநிலை எய்தவும் பிறகு தேயவும் மாறி மாறி நிகழ்ந்து வருகிறது. ஜீவர்களிடத்து ஜீவபோதம் இருக்கும் பரியந்தம் அவர்களுடைய அறிவும் அது மறைந்திருக்கும் நிலையும் இப்படி மாறி மாறி அமைந்து வருகிறது. திரும்பத் திரும்ப ஜீவர்கள் தவறுதல்கள் செய்து விடுகிறார்கள். அதைத் தொடர்ந்து துக்கம் வருகிறது. நாம் படுகிற துக்கத்துக்குக் காரணம் என்ன என்கின்ற கேள்வியைச் சர்வகாலமும் நாம் கிளப்பி வருகிறோம். மனிதன் ஏன் துக்கப்படுகிறான் என்கிற இந்தக் கேள்வி பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு எழுந்தது.' அதே கேள்வி இன்றைக்கும் பலர்க்கிடையில் எழுந்து கொண்டிருக்கிறது. பல்லாயிரம் ஆண்டுகளுக்குப் பின்பும் இக்கேள்வி எழும். எனவே இது எக்காலத்துக்கும் பொதுவான கேள்வி. இதற்கு விடை இல்லையா என்று மேலும் நாம் கேட்கலாம். எக்காலத்திலும் இதற்கு விடையும் இருக்கிறது. மனிதன் படுகிற துக்கத்துக்கெல்லாம் அடிப்படைக் காரணம் அக்ஞானம். அக்ஞானத்தில் அவன் குற்றம் செய்கின்றான். குற்றம் துன்பமாகப் பரிணமிக்கிறது. மனிதனிடத்து எவ்வளவு காலத்துக்கு அக்ஞானம் இருக்கிறதோ அவ்வளவு காலத்துக்கு மாறி மாறி அவன் ஏதோ குற்றங்களைச் செய்து கொண்டே இருப்பான்; துன்பத்தையும் அனுபவித்துக் கொண்டே இருப்பான். அறிவு மனிதனுக்குச் சொந்தமல்லாதுபோய்விட்டால் அதை இழக்கின்ற பொழுதெல்லாம் அவன் குற்றத்தைச் செய்தே ஆகவேண்டும். பிறகு அதற்கு வருந்தியும் ஆகவேண்டும். உண்மையில் இத்தகைய பரிதாபகரமான நிலையிலா மனிதன் இருக்கின்றான்? இக் கோட்பாட்டை எளியனேற்கு அறிவாவது ஏது அறிவிலா

ஏதம் வரும் வகையேது ? என்கிருர் அவர். இங்கு ஏதம் என்னும் சொல் குற்றம் எனப் பொருள்படுகிறது.

ஜீவாத்மாவுக்கு அமைந்துள்ள பல விளக்கங்களுள் அவன் கர்ம சொரூபம் என்பது ஒன்று. ஜீவபோதம் இருக்கும் வரையில் அவன் கர்மம் செய்து கொண்டிருக்கிருன். கர்மத்துக்குத் தன்னை கர்த்தாவாக எண்ணுவதும் அவனுடைய இயல்பு. தான் கர்த்தா என்கிற எண்ணம் படைத்திருக்கின்றவன் வினைப்பயனை ஓயாது வளர்த்துக் கொண்டு போகிருன். வட்டிக்குக் கொடுத்துள்ள பணம் அல்லும் பகலும் ஓயாது வளர்வது போன்று ஜீவாத்மனுக்கு வினை வளர்ந்து கொண்டே இருக்கிறது. அப்படி அவனிடத்து வினை வளர்வதற்குக் காரணம் அவன் படைத்துள்ள அக்ஞானமேயாம். நடந்து செல்லுகின்ற மனிதன் தனது மூட்டையையும் கையில் அல்லது தலையில் எடுத்துச் சென்ருகவேண்டும். ஆனல் அம்மனிதன் இருப்புப்பாதை வண்டி ஒன்றனுக்குள் ஏறியான பிறகும் தன் சுமையைத் தலையிலேயே வைத்திருப்பானுகில் அது பரிதாபகரமான நிலையாகிறது. வண்டியில் ஓர் இடத்தில் சுமையை இறக்கி வைத்துவிட்டால் அது தன்னேடு வந்துகொண்டிருக்கும். அதைச் சுமக்கவேண்டிய சிரமம் அவனுக்கு இல்லை. இறைவனுடைய அருளை அறிந்துகொள்கிற வரையில் அவரவர் வினை என்னும் மூட்டையை அல்லும் பகலும் சுமந்து கொண்டேயிருக்கின்றனர். இறைவனுடைய அருளால் எல்லாம் நிகழ்கின்றன என்று அறிகின்றவர்கள் தங்கள் வினையை இறைவனுடைய வினை என்று உணர்ந்து இறைவனிடம் ஒப்படைத்து விடுகிருர்கள். பிறகு அவர்களுக்கு வினை வளர்வதில்லை. வினைக்கு அவர்கள் கர்த்தாக்கள் ஆவதும் இல்லை. இக்கோட்பாட்டைத் தாயுமானவர் வினையேது என்று இயம்புகின்ருர்.

காயம் என்பது உடல். காயத்தைப் படைத்திருப்பது ஜீவாத்மனுடைய மற்றொரு கூறு ஆகிறது. காயம் வெங்காயம் போன்றது. வெங்காயத்தின் மேல் சருகை உரிக்க உரிக்க உள்ளிருக்கும் பகுதி சருகு ஆக மாறி அமைகிறது. ஜீவாத்மனுக்கு வினையிருக்கும் வரையில் அதன் புறத் தோற்றமாக உடல் வாழ்வு அவனுக்கு வந்து அமைகிறது. விதவிதமான உடலங்களை எடுத்தவர்களாக எண்ணிறந்த ஜீவாத்மாக்கள் தென்படுகிறார்கள். அவரவர் வினையை நிறைவேற்றிக் கொள்வதற்கான உடலங்களை அவர்கள் எடுத்து வருகிறார்கள். விலங்கின் உடல், பறவையின் உடல், மக்களின் உடல், தேவர்களின் உடல் ஆகிய எல்லா உடலங்களும் அவரவர் செய்யும் கர்மத்துக்கு ஏற்ற பாங்கில் வந்து அமைந்திருக்கின்றன. கர்மம் எத்தகையதோ உடல் அத்தகையது. கர்மம் இருக்கும் வரையில் உடல் எடுப்பதை யாரும் நிறுத்திவிட முடியாது. தான் செய்யும் கர்மங்களை யெல்லாம் இறைவனுக்கு உரியவைகள் என்று அவனிடம் ஒப்படைத்துவிட்டால் புதிய உடல் எடுக்கும் அவசியம் இல்லாது போய்விடுகிறது. இக்கோட்பாட்டினை வினை தனக்கு ஈடான காயமேது என்று தாயுமானவர் சொல்லுகின்றார்.

இச்சா சுதந்தரம் என்னும் முரண்பாடு ஒன்றனுக்கு உட்பட்டிருப்பவன் ஜீவாத்மன். இச்சா சுதந்தரம் என்றால் என்ன என்பதை நாம் அறிந்துகொள்ள வேண்டும். நமக்கு உணவு படைக்கப்படுகிறது. வேண்டுமென்றால் அவ்வுணவை உண்கிறோம். வேண்டாமென்றால் அதை ஒதுக்கி வைத்து விடுகிறோம். இது இச்சா சுதந்தரம். காலையில் நீராடுவதா அல்லது வேலையெல்லாம் செய்து முடித்தான பிறகு மாலையில் நீராடுவதா என்னும் கேள்வி பிறக்கிறது.

இச்செயலுக்கு நாம் இச்சா சுதந்தரம் படைத்திருக்கிறோம். எந்த உடையை எப்பொழுது அணிவது என்னும் கேள்வி பிறக்கிறது. நமக்கு நாமே தீர்மானித்து அதன்படி உடை அணிந்து கொள்கிறோம். அதுவும் இச்சா சுதந்தரம். யாரு டன் உறவாடுவது, யாரிடத்திருந்து விலகியிருந்து கொள்ளு தல் என்னும் கேள்வி எழுகிறது. எண்ணிப்பார்த்துவிட்டு நம் இஷ்டம் போல் உறவாடுகிறோம். அதுவும் இச்சா சுதந்தரம். இனி மற்றொரு கேள்வி எழுகிறது. நம்மிடத் துப் பூரண இச்சா சுதந்தரம் உண்டா என்பது அக்கேள்வி யாகும். அதையும் சிறிது ஆராய்ந்து பார்ப்போம். ஒரு நாளைக்கு அல்லது சில நாட்களுக்கு நாம் உணவில்லாது இருந்துவிடலாம். உணவே அருந்துவதில்லை என்று தீர் மானித்து அதன்படி நடந்து கொள்ளும் இச்சா சுதந்தரம் நமக்கு உண்டா? பத்து நாளைக்குத் தேவையாய் இருக்கும் உணவை ஒரே வேளையில் ஏற்றுக்கொண்டு அதைத் தொடர்ந்து பத்து நாளைக்குச் சிறிது சிறிதாகச் சேமித்து வரும் இச்சா சுதந்தரம் நமக்கு உண்டா? உயிர் வாழ்ந்திருக் கும் பரியந்தம் உறங்குவதில்லை என்று தீர்மானித்து அதன் படி நடந்து கொள்ளும் இச்சா சுதந்தரம் நமக்கு உண்டா? துன்பம் நிறைந்துள்ள இம்மண்ணுலகில் வாழ்ந்திருப்பதில்லை என்று தீர்மானித்து உயிரை உடலினின்று ஓட்டி விடுகிற இச்சா சுதந்தரம் நமக்கு உண்டா? நாம் எண்ணிய எண் ணங்களையெல்லாம் நிறைவேற்றி வைத்தல் பொருட்டு நெடுங்காலம் இம்மண்ணுலகில் வாழ்ந்திருக்க வேண்டும் என்று இச்சித்து அவ் இச்சையைப் பூர்த்தி பண்ணி வைக் கும் இச்சா சுதந்தரம் நமக்கு உண்டா? நமது இச்சா சுதந் தரத்தை ஆராய்ந்து பார்க்கிற இடத்து ஓர் உண்மை விளங் குகிறது. சிற்சில செயல்களுக்கு நமக்கு இச்சா சுதந்தரம்

கிடையாது. நமது அமைப்பையும் வாழ்க்கை முறையை யும் இன்னும் நன்ருகத் துருவி ஆராய்ந்துபார்த்தால் இச்சா சுதந்தரம் ஏதோ சிறிதளவு படைத்திருப்பவர் போன்று தென்படும் நமக்கு உண்மையில் இச்சா சுதந்தரம் இல்லவே இல்லை என்பது விளங்கும். உள்ளிருக்கும் அருள் சக்தி ஒன்று ஆட்டுவிக்கிற பிரகாரம் நாம் ஆடுகின்ருேம், பேசு விக்கின்ற பிரகாரம் நாம் பேசுகிருேம். அதற்கிடையில் நாம் இச்சா சுதந்தரம் படைத்தவர்களாக நம்மைப்பற்றி எண்ணி இறுமாப்பு எய்துகிருேம். நீராவி யந்திரத்தை நீராவி இயக்குவது போன்று நம்முள் உள்ள அருள் சக்தி நம்மை இயக்குகிறது. இக்கோட்பாட்டை என் இச்சா சுதந்தரம் சிறிதுமில்லை என்று தாயுமானவர் சொல்லுகிருர்.

ஜீவர்களாகிய நமக்கு மண்ணுலக வாழ்வு என்பது ஒன்று இருக்கிறது. நாம் எடுத்துள்ள உடலத்தை உகுத் தான பிறகு பரவாழ்வு என்பது நமக்கு அமைகிறது. அது மண்ணுலக வாழ்வைவிட மேலானது என்று நாம் கருதி வருகிருேம். தேவர்கள் என்று இயம்பப்பெறுகிறவர்கள் எல்லாம் மக்களைவிட மேலானவர்கள் என்று கருதுகிருேம். ஆனல் உண்மையில் மக்களாக இருப்பவர்களும் தேவர் களாக இருப்பவர்களும் ஒருவித மயக்கத்துக்கு உட்பட்ட வர்களேயாம். தேவர்களுக்கெல்லாம் தலைவனுய் இருக்கிற தேவேந்திரனுக்கே மலைவு வந்துவிடுகிறது என்பது ஐதிகம். மலைவு என்ருல் மயக்கம் அல்லது பிராந்தி. ஒருகாலத்தில் தேவேந்திரன் அடைந்த நிலையை அதற்குச் சான்ருக எடுத் துக்கொள்ளலாம். யாது காரணத்தாலோ தேவேந்திரன் தான் பன்றி ஆய்விட்டதாக எண்ணிக்கொண்டான். குட்டி கள் பலபோட்டு அவைகளுடன் அவன் இன்புற்று வாழ்ந்து வந்தான். சேற்றில் உழன்று கிடந்தது சொர்க்கவாழ்வு

போன்று அவனுக்குத் தென்பட்டது. அவனுடைய பரிதாப கரமான நிலையைப் பார்த்துத் தேவர்களுக்கே வெட்கம் வந்துவிட்டது. தங்களுடைய கோமான் அத்தகைய கீழ் மையில் உழன்றது வெட்ககரமான காரியம். அவனிடம் போய் தேவர்கள் உண்மையை எடுத்து ஓதினர்கள். தன்னை ஒரு பன்றி என்று எண்ணிக்கொள்ளுதல் பொருந்தாது. அவ்வெண்ணத்தை உதறித் தள்ளிவிட்டுத் தன்னுடைய பெரும் பதவிக்குத் திரும்பிவர வேண்டுமென்று அவர்கள் வேண்டினர்கள். பன்றியின் வாழ்க்கைக்கு மிக்கானது உலகில் யாது இருக்கிறதென்று அது பெருமை பாராட்டிற்று. அந்த மலேவினின்று அதை மாற்றுதற்கு அவர்களுக்கு இயலவில்லை. கடைசியாக அப்பன்றியைப்பிடித்து அவர்கள் சாங்கப் புடைத்தார்கள். அது துன்பப்பட்டது. ஏன் தனக்கு இந்தத் துன்பம் வந்தது என்று விசாரித்துப் பார்த்தது. விசாரித்துப் பார்த்ததன் மூலம் அதற்கு மெய்யறிவு வந்தது. கீழான இயல்பையும் கீழான வாழ்க்கையையும் உதறித் தள்ளிவிட்டுத் தனது பெரும் பதவிக்கு இந்திரன் திரும்பிச் சென்றுன். அத்தகைய மலேவு எல்லா உயிர்களுக்கும் இருக்கிறது. கடவுள் சொரூபமாக இருக்க வேண்டிய உயிர்கள் வெவ்வேறு ஜீவ சொரூபங்களாகத் தங்களை எண்ணிக்கொண்டு துன்புறுகின்றனர். மலேவு என்பது இதுவே. இறைவனுடைய அருளுக்குப் பாத்திரமாகின்றபொழுது இந்த மலேவு தானே அகன்று போய்விடுகிறது. இக்கருத்தை இகபரம் இரண்டினுள் மலேவு தீர என்று தாயுமானவர் சொல்லுகின்றூர்.

மலேவு நிறைந்த வாழ்வை மருள் நிறைந்த வாழ்வு எனலாம். அதற்கு நேர் எதிரிடையாய் இருப்பது அருளைப் பெற்றுள்ள வாழ்வு ஆகும். ஜீவனுக்குச் சொந்தம் என்று

கருதப்படுகின்ற அனைத்தையும் கடவுளுக்குச் சொந்தம் என்று உணர்தல் வேண்டும். இறைவனுடைய அருள் கிட்டிவிட்டால் இந்த உணர்வும் தானே வந்துவிடுகிறது. தனக்குச் சொந்தம் ஒன்றும் இல்லை, எல்லாம் இறைவனுக்குச் சொந்தம் என்கின்ற மனநிலையைப் பெறுவதால் ஜீவனுக்கு வருகிற லாபம் என்ன என்கின்ற கேள்வி எழக்கூடும். ஜீவபோதம் நிறைந்துள்ள வாழ்வே யாண்டும் தீங்கு நிறைந்த வாழ்வு ஆகிறது. நலம் கேடு ஆகிய இரண்டும் கலக்கப்பெற்றிருப்பது ஜீவர்களுடைய வாழ்வு. இன்னும் அதை ஆழ்ந்து ஆராய்ந்து பார்க்கிற இடத்து நலத்தை விடத் தீங்கு அதிகமாக ஜீவர்களுடைய வாழ்க்கையில் அமைந்திருக்கிறது. இடையிடையே சிறிதளவு இன்பம் ஜீவர்களுக்கு எட்டுகிறது. அந்த இன்பத்தைப் பெறுதற்காகப் பலவிதமான தீங்குகளுக்கு ஜீவன் ஆளாக வேண்டும். உடல் வாழ்க்கையில் ஒவ்வொரு படித்தரத்திலும் தீங்கே பெரிதும் நிறைந்திருக்கிறது. அதற்கிடையில் ஒரு சிறிதளவு நலமும் நலத்தினின்று வருகிற இன்பமும் கிட்டுகிறது. இந்தச் சிறிய ஊதியத்துக்காக அவ்வளவு பெரிய அல்லலுக்கு மனிதன் ஆளாகவேண்டுமா என்கின்ற கேள்வி வருகிறது. மனிதன் அருளுக்குத் தன்னைப் புறம்பாக வைத்துக்கொள்கின்ற வரையில் தீங்குகள் அதிகரிக்கின்றன. அருளுக்குப் பக்கத்தில் வரவர தீமைகள் குறைகின்றன. குளிரில் வருந்துகின்றவன் நெருப்புக்குப் பக்கத்தில் வரவர குளிரின் கொடுமையினின்று விடுபடுவது போன்று இறைவனுடைய அருளுக்கு உரியவன் ஆகின்ற அளவு ஜீவனுடைய தீமை குறைந்துவிடுகிறது. முற்றிலும் இறைவனுடைய அருளுக்குப் பாத்திரமாய்விட்டால் தீது அறவே அகன்று போய் விடுகிறது. ஜீவனுக்கு அப்பொழுது பாரமார்த்திகப் பெரு

வாழ்வு துவங்குகிறது. கடலுக்குப் பக்கத்தில் வந்துவிட்ட நதி கிட்டத்தட்ட கடல்போன்று அகன்றதாகத் தென்படுகிறது. அருளுக்கு முற்றிலும் பாத்திரமாயிருக்கின்ற ஜீவன் தெய்வப் பெற்றியே நிறைந்தவன் ஆய்விடுகின்றான். இக் கருத்தைத் தீதுஇல் அருள்கொண்டு இனி உணர்த்தியென ஆள்வையோ என்று தாயுமானவர் சொல்லுகின்றார்.

மனது அற்றுப்போன நிலையில் மிளிரும் தெய்வமே, முக்திக்கு முதல் காரணமாய் இருப்பவனே, சிரகிரியின்மீது தென்முகமாக எழுந்தருளியிருக்கும் பரமாசாரிய வடிவினனே, ஞான சொரூபமாக இலங்கும் குருவே என்னிடத்துப் புகுந்திருக்கும் ஜீவபோதத்தைப் போக்கிவிட்டு உன் பரபோதத்திலேயே நான் நிலைத்திருக்கும்படி அருள்புரிவாயாக என்று அவர் வேண்டிக்கொள்கிறார்.] இக்கருத்துக்கள் யாவையும் தொகுத்து அவர் மேற்கூறிய பாடலில் பகர்ந்துள்ளார்.

---

## சின்மயானந்த குரு - 11

பத்திநெறி நிலைநின்றும் நவகண்ட பூமிப்
பரப்பைவல மாகவந்தும்
பரவையிடை மூழ்கியும் நதிகளிடை மூழ்கியும்
பசிதாக மின்றியெழுநா
மத்தியிடை நின்றும்உதிர் சருகுபுனல் வாயுவினை
வன்பசி தனக்கடைத்தும்
மௌனத் திருந்தும்உயர் மலைநுழைவு புக்கியும்
மன்னுதச நாடிமுற்றுஞ்
சுத்திசெய் தும்மூல ப்ராணனோ டங்கியைச்
சோமவட் டத்தடைத்துஞ்
சொல்லரிய அமுதுண்டும்அற்பவுடல் கற்பங்கள்
தோறும்நிலை நிற்கவீறு
சித்திசெய் தும்ஞான மலதுகதி கூடுமோ
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிண மூர்த்தியே
சின்மயா னந்தகுருவே.

குறியும் நெறியும் இணைபிரியாதவைகள். குறி உள்ள இடத்தில் நெறி உண்டு. நெறி உள்ள இடத்துக் குறி உண்டு. கையாளும் உபாயத்துக்கு நெறி என்று பெயர். மார்க்கம் என்றும் வழி என்றும் அது பொருள்படுகிறது. கையாளுகிற ஒவ்வொரு உபாயமும் ஏதேனும் ஒரு நிலையில் கொண்டு சேர்க்கும். அங்ஙனம் அடையப்பெறுகிற நிலைக்குக் குறி என்று பெயர். குறிகள் அனைத்திலும் தலையாயது கடவுளை அடைதல். அதற்குமேல் மனிதன் அடையக்கூடிய குறி ஒன்றுமில்லை. இனி அதற்குக் கீழ் பல படித்தரங்

களில் பலதரப்பட்ட குறிகள் இருக்கின்றன. அடைதற்குரிய குறிகளுள் தலையாயது ஆகிய கடவுளை அடைதற்கு உபாயம் யாது என்னும் கேள்வி எழுகிறது. உபாயங்கள் எண்ணிறந்தவைகள் உள. அவைகளுள் முக்கியமானவை சிலவற்றை ஆராய்வது அவசியமாகிறது. உபாயங்களுள் உயர்ந்தது பக்தி. உயிர்கள் அனைத்தும் அன்பு சொரூபம். மானுடப் பிறவியில் அன்பு பெரிதும் தெளிந்த நிலைக்கு வந்துவிடுகிறது. இந்த அன்பு முழுதையும் கடவுளிடத்துத் திருப்பிவிட்டால் அதற்கு பக்தி என்னும் பெயர் வருகிறது. பக்தியைப் பெருக்குதற்கு உபாயங்கள் பல இருக்கின்றன. இறைவனுடைய திருநாமத்தை ஓயாது ஓதுதல், அவனுடைய பெருமைகளைத் திரும்பத் திரும்பக் கேட்பது அல்லது அவனுடைய பெருமைகளைத் திரும்பத் திரும்பப் பிறர்க்கெடுத்துச் சொல்லுவது, அவனை ஆராதிப்பது, அவனுக்குக் குற்றேவல் புரிவது—ஆகிய இம்முறைகளைத் தொடர்ந்து கையாண்டு வந்தால் பக்தி பெருகுகிறது. மனிதன் ஆழ்ந்து எதை விரும்புகின்றானோ அந்த மயமாக அவன் மாறிவிடுகின்றான். கடவுள் பக்தி அதிகரிக்குமளவு மனிதனே கடவுள் மயமாக மாறிவிடுகிறான். கீழான இயல்புகளை ஒழிப்பதற்கும் கடவுள் தன்மைவாய்ந்த மேலாம் இயல்புகளை வளர்ப்பதற்கும் பக்திக்கு நிகரான சாதனமில்லை. இக்கோட்பாட்டை பத்தி நெறி நிலை நின்று என்று தாயுமானவர் பகர்கிறார்.

பக்தியை அடிப்படையாக வைத்துக்கொண்டு புரிகிற ஏனைய சாதனங்களும் கடவுளை அடைதற்கான நல்ல சாதனங்கள் ஆய்விடுகின்றன. பரந்த மண்ணுலகிலுள்ள வெவ்வேறு நாடுகளைச் சுற்றிப் பார்ப்பதன் மூலம் மனிதனுக்கு அனுபவம் அதிகரிக்கிறது. உலகைப் பற்றிய அறிவும்

விரிவடைகிறது. வெவ்வேறு தரப்பட்ட மக்களைக் காணும் வாய்ப்புக் கிடைக்கிறது. நானாவகைப்பட்ட பழக்க வழக்கங்களைக் காண்பதும் சாத்தியமாகிறது. வெவ்வேறு நாடுகளுக்குப் போகிற பயணத்தைத் தீர்த்த யாத்திரையாக வைத்துக்கொள்வது இன்னும் சிறந்ததாகிறது. பக்தி நிறைந்திருப்பவர்களே ஸ்தல யாத்திரையைச் சிறப்புடன் செய்து முடிப்பார்கள். வெறும் வியாபாரத்துக்காக வெவ் வேறு ஊர்களுக்குப் போகிறவர்கள் இருக்கிறார்கள். வேடிக்கை விநோதங்களைப் பார்ப்பதற்கு வெளியூர்களுக்குப் போகிறவர்கள் இருக்கிறார்கள். வைத்தியத்துக்காக வென்று வெளியூர்களுக்குப் போகிறவர்கள் இருக்கிறார்கள். இவர்களையெல்லாம்விட பக்தியினால் தூண்டப்பெற்று அருள் நாட்டம் கொண்டவர்களாக வெளியூர்களுக்குப் போகின்ற வர்கள் மேலோர் ஆகின்றனர். அவர்கள் கொண்டுள்ள சீரிய மனப்பான்மையின் விளைவாக யாத்திரையின் முழுப் பயன் அவர்களுக்குக் கிட்டுகிறது. பார்க்கும் இடங்களை யெல்லாம் கடவுளோடு இணைத்துப் பார்ப்பது ஸ்தல யாத் திரையின் முக்கியமான பயன் ஆகும். மற்ற பிரயாணிகள் வெவ்வேறு ஊர்களை உலக வியவகாரங்களோடு இணைத் துப் பார்க்கின்றனர். யாத்திரை வாசிகளோ அவ்விடங் களையெல்லாம் இறைவனோடு இணைத்துப் பொருள்படுத்து கின்றனர். அந்த அளவில் யாத்திரை போவது அவர் களுக்கு நல்ல ஆத்ம சாதனமாகிறது. ஆங்காங்கு நிகழ் கின்ற இன்ப துன்பங்களையெல்லாம் ஏனைய பிரயாணிகள் உலக இயல்போடு இணைத்துப் பொருள்படுத்துகின்றனர். இன்பத்தைப் பெருக்குதற்கு உலக இயல்பையே அவர்கள் பயன்படுத்துகின்றனர். துன்பத்தைத் தவிர்ப்பதற்கும் உலகம் அளிக்கின்ற வசதிகளையே அவர்கள் பயன்படுத்து

களில் பலதரப்பட்ட குறிகள் இருக்கின்றன. அடைதற்குரிய குறிகளுள் தலையாயது ஆகிய கடவுளை அடைதற்கு உபாயம் யாது என்னும் கேள்வி எழுகிறது. உபாயங்கள் எண்ணிறந்தவைகள் உள. அவைகளுள் முக்கியமானவை சிலவற்றை ஆராய்வது அவசியமாகிறது. உபாயங்களுள் உயர்ந்தது பக்தி. உயிர்கள் அனைத்தும் அன்பு சொரூபம். மானுடப் பிறவியில் அன்பு பெரிதும் தெளிந்த நிலைக்கு வந்துவிடுகிறது. இந்த அன்பு முழுதையும் கடவுளிடத்துத் திருப்பிவிட்டால் அதற்கு பக்தி என்னும் பெயர் வருகிறது. பக்தியைப் பெருக்குதற்கு உபாயங்கள் பல இருக்கின்றன. இறைவனுடைய திருநாமத்தை ஓயாது ஓதுதல், அவனுடைய பெருமைகளைத் திரும்பத் திரும்பக் கேட்பது அல்லது அவனுடைய பெருமைகளைத் திரும்பத் திரும்பப் பிறர்க்கெடுத்துச் சொல்லுவது, அவனை ஆராதிப்பது, அவனுக்குக் குற்றேவல் புரிவது—ஆகிய இம்முறைகளைத் தொடர்ந்து கையாண்டு வந்தால் பக்தி பெருகுகிறது. மனிதன் ஆழ்ந்து எதை விரும்புகின்றனோ அந்த மயமாக அவன் மாறிவிடுகின்றான். கடவுள் பக்தி அதிகரிக்குமளவு மனிதனே கடவுள் மயமாக மாறிவிடுகிறான். கீழான இயல்புகளை ஒழிப்பதற்கும் கடவுள் தன்மைவாய்ந்த மேலாம் இயல்புகளை வளர்ப்பதற்கும் பக்திக்கு நிகரான சாதனமில்லை. இக் கோட்பாட்டை பத்தி நெறி நிலை நின்று என்று தாயுமானவர் பகர்கிறார்.

பக்தியை அடிப்படையாக வைத்துக்கொண்டு புரிகிற ஏனைய சாதனங்களும் கடவுளை அடைதற்கான நல்ல சாதனங்கள் ஆய்விடுகின்றன. பரந்த மண்ணுலகிலுள்ள வெவ்வேறு நாடுகளைச் சுற்றிப் பார்ப்பதன் மூலம் மனிதனுக்கு அனுபவம் அதிகரிக்கிறது. உலகைப் பற்றிய அறிவும்

விரிவடைகிறது. வெவ்வேறு தரப்பட்ட மக்களைக் காணும் வாய்ப்புக் கிடைக்கிறது. நானாவகைப்பட்ட பழக்க வழக்கங்களைக் காண்பதும் சாத்தியமாகிறது. வெவ்வேறு நாடுகளுக்குப் போகிற பயணத்தைத் தீர்த்த யாத்திரையாக வைத்துக்கொள்வது இன்னும் சிறந்ததாகிறது. பக்தி நிறைந்திருப்பவர்களே ஸ்தல யாத்திரையைச் சிறப்புடன் செய்து முடிப்பார்கள். வெறும் வியாபாரத்துக்காக வெவ் வேறு ஊர்களுக்குப் போகிறவர்கள் இருக்கிறார்கள். வேடிக்கை விநோதங்களைப் பார்ப்பதற்கு வெளியூர்களுக்குப் போகிறவர்கள் இருக்கிறார்கள். வைத்தியத்துக்காக வென்று வெளியூர்களுக்குப் போகிறவர்கள் இருக்கிறார்கள். இவர்களையெல்லாம்விட பக்தியினால் தூண்டப்பெற்று அருள் நாட்டம் கொண்டவர்களாக வெளியூர்களுக்குப் போகின்ற வர்கள் மேலோர் ஆகின்றனர். அவர்கள் கொண்டுள்ள சீரிய மனப்பான்மையின் விளைவாக யாத்திரையின் முழுப் பயன் அவர்களுக்குக் கிட்டுகிறது. பார்க்கும் இடங்களை யெல்லாம் கடவுளோடு இணைத்துப் பார்ப்பது ஸ்தல யாத் திரையின் முக்கியமான பயன் ஆகும். மற்ற பிரயாணிகள் வெவ்வேறு ஊர்களை உலக வியவகாரங்களோடு இணைத் துப் பார்க்கின்றனர். யாத்திரை வாசிகளோ அவ்விடங் களையெல்லாம் இறைவனோடு இணைத்துப் பொருள்படுத்து கின்றனர். அந்த அளவில் யாத்திரை போவது அவர் களுக்கு நல்ல ஆத்ம சாதனமாகிறது. ஆங்காங்கு நிகழ் கின்ற இன்ப துன்பங்களையெல்லாம் ஏனைய பிரயாணிகள் உலக இயல்போடு இணைத்துப் பொருள்படுத்துகின்றனர். இன்பத்தைப் பெருக்குதற்கு உலக இயல்பையே அவர்கள் பயன்படுத்துகின்றனர். துன்பத்தைத் தவிர்ப்பதற்கும் உலகம் அளிக்கின்ற வசதிகளையே அவர்கள் பயன்படுத்து

கின்றனர். ஆனால் பக்தி நெறியில் நிலைநின்று யாத்திரை போகின்றவர், பெறுகின்ற இன்ப துன்பங்களை யெல்லாம் கடவுளின் அருளோடு சேர்த்துவைத்துப் பொருள் படுத்துகின்றனர். இன்பம் வந்து வாய்த்த காலை அது இறைவனுடைய திருவுளத்துக்கு ஒப்ப நேர்ந்தது என்று அவர்கள் கருதுகிறார்கள். துன்பம் வந்து வாய்க்குமிடத்தும் கடவுளின் திருவுளத்துக்கு ஒப்ப அது வாய்த்தது என்று அவர்கள் கருதுகிறார்கள். அத்தகைய மனநிலை நல்ல ஆத்ம சாதனமாகிறது. துன்பத்தைச் சகித்துப் பழகுதலும் இன்பத்தில் ஆர்வம் காட்டாது இருந்து பழகுதலும் மனதை ஒருமுகப்படுத்துதற்கு உற்ற உபாயங்களாகின்றன. ஆங்காங்கு மக்களைச் சந்திக்கின்ற இடத்தும் அவர்கள் எல்லோரும் கடவுளின் குழந்தைகள் என யாத்திரிகன் ஒருவன் கருதிப் பழகுகிறான். பக்தி மிக நிறைந்தவனாக ஒருவன் ஸ்தல யாத்திரை பண்ணுகின்றபொழுது மனபரிபாகம் அவனுக்கு வந்து அமைகிறது. இக்கோட்பாட்டை நவகண்ட பூமிப் பரப்பை வலமாக வந்தும் என்று தாயுமானவர் இயம்புகிறார். வசதிக்காக ஒன்பது பெரிய கண்டங்களாக உலகிலுள்ள பிரதேசங்கள் ஈண்டு பிரித்துப் பகரப்பட்டிருக்கின்றன. அது எங்கும் வியாபித்திருப்பதால் பரப்பு என்று பகரப்பெறுகிறது. சுற்றி வருகின்றபொழுது நடுநாயகமாக இருக்கின்ற இடத்தை வலது கை சார்ந்திருக்குமாகில் வலம் வருதல் என அது பெயர் பெறுகிறது. கோவிலுக்குள் வலம் வருகின்றபொழுது அவனுடைய வலது கை கோயிலில் எழுந்தருளியிருக்கும் மூர்த்திக்குப் பக்கத்தில் இருக்கிறது. இடதுகை எட்டியிருக்கிறது. இதே பாங்கு நதியை வலம் வருதலிலும் பூமியை வலம் வருதலிலும் கையாளப்படுகிறது. வலம் வருதலைப் பிரதக்ஷிணம் பண்ணுதல் என்றும் பகர்கிறோம்.

நெடுந்தூரத்துக்குத் தீர்த்தயாத்திரை போகின்ற பொழுது வெவ்வேறு இடங்களில் கடலைக் காண்பது சாத்தியமாகிறது. கடலுக்குப் பரவை என்பது மற்றொரு பெயர். பக்தி விசுவாசத்துடன் கடலில் நீராடுகின்றபொழுது அது ஒரு புண்ணிய கர்மமெனக் கருதப்படுகிறது. ராமேஸ்வரம், கன்னியாகுமரி, கோகர்ணம், துவாரகை, பூரி, கங்கா சாகரம் ஆகிய இடங்களில் சமுத்திர ஸ்நானம் செய்வது புண்ணிய கர்மமாகக் கருதப்படுகிறது. பல்லாயிரம்பேர் விசேஷ நாட்களில் ஆங்குச் சென்று நீராடுவதைக் காணலாம். அப்படி நீராடுகின்றபோது அவர்கள் கடவுள் சிந்தனையில் ஆழ்ந்திருக்கின்றார்கள். தங்களுடைய பாபங்கள் எல்லாம் நீங்கிவிட்டதாகவும் அவர்கள் உணர்கின்றார்கள். கடல் முழுக்கை முகாமையாக வைத்துக்கொண்டு தங்களைப் புனிதம் அடைந்தவர்களாக மக்கள் கருதுவார்களாகில் அச் செயலும் அங்கீகரிக்கப்பட்டுள்ள நல்ல ஆத்ம சாதனமாகும். இக்கருத்தை பரவையிடை மூழ்கியும் என்று தாயுமானவர் பகர்கின்றார்.

நதிகளையெல்லாம் தெய்வீகம் வாய்க்கப்பெற்றவைகள் என்று கருதுவது நம்நாட்டு ஐதிகம் ஆகும். அந்த நதிகளுள் மிகப் புனிதம் வாய்ந்தவைகளாக ஏழு நதிகள் அங்கீகரிக்கப் பட்டிருக்கின்றன. கங்கை, யமுனை, சரஸ்வதி, நர்மதை, கோதாவரி, சிந்து, காவேரி ஆகிய இவ்வேழும் சிறப்பாகப் புனிதம் வாய்க்கப் பெற்றவைகள். இவ்வேழினுள் இன்றைக்கு சரஸ்வதி தோற்றத்தில் இல்லை. இப்புண்ணிய நதிகளுள் கங்கைக்குச் சிறப்பான மதிப்பு உண்டு. பிரம்ம வாரி என்று அது பகரப்பெறுகிறது. அது வெறும் குருட்டு நம்பிக்கையல்ல; அதற்கேற்ற ஆதாரம் இருக்கிறது. கங்கா ஸ்நானத்தின் மூலம் மனிதனுக்கு மனபரிபாகம்

விரைவில் அமைகிறது என்பது ஆன்ருேர்கள் கண்டறிந் துள்ள உண்மையாகும். ஸ்தல யாத்திரை போகின்றவர்கள் இப்புண்ணிய நதிகளில் எல்லாம் சீரிய மனப்பான்மையுடன் நீராடுகிருர்கள். தெய்விகச் சிந்தனையில் மூழ்கியவர்களாக இருந்து நீராடுகிருர்கள். இந்த நதிகளையே தெய்வ சொரூபமாக அவர்கள் உணருகிருர்கள். அதற்கேற்ற அளவு அவர்களுடைய மனம் திருந்தி அமைவது திண்ணம். இச்செயலை நதிகளிடை மூழ்கியும் என்று அண்ணல் இயம்புகின்ருர்.

நெருப்புக்கு எழுநா என்பது ஒரு பெயர். ஏழு நாக்கு களை உடையது என அது பொருள்படுகிறது. கொழுந்து விட்டு அது எரியும்போது நாக்குகளை உயர நீட்டுவது போன்று அதன் கொழுந்துகள் தென்படுகின்றன. மனிதன் ஒரு நல்ல மனநிலையை தனக்குத்தானே உண்டுபண்ணிக் கொள்வாளுகில் தீயின் வெப்பம் தன்மீது தட்டாத பாங்கை அவன் பெற்றுவிட முடியும். பாமரர்க்கிடையில் பலபேர் ஆண்டுதோறும் தீயின்மீது நடப்பதை இன்றைக்கும் காண் கிருேம். தீயில் அவர்களுடைய தேகம் காந்திப் போவ தில்லை. பூவின்மீது நடப்பதுபோன்று தீயின்மீது அவர் கள் நடக்கின்றனர். தீ மிதியை பூ மிதி என்றே அவர்களில் பலர் பகர்கின்றனர். நல்ல மனநிலையைக் கொண்டு வந்து விட்டால் தீயின் வெப்பமே மனிதனுடைய உடலைத் தாக் காது போய்விடுகிறது என்பதற்கு இச்செயல்கள் சான்று ஆகும். மனிதன் புரிகின்ற தபசுகளில் பஞ்சாக்னி தபசு என் பது ஒன்று உண்டு. தரையில் ஓர் இடத்தில் மனிதன் அமர்ந்துகொள்கிருன். நான்கு திக்குகளிலும் சுடர்விட்டு எரியும் தீ மூட்டப்பெறுகிறது. தலைக்குமேல் சூரிய வெப்பம் இருக்கிறது. ஆக, இந்த ஐந்தும் சேர்ந்து பஞ்சாக்கினி

என்று பகரப்பெறுகின்றன. ஆங்கு அமர்தற்கு முன்பு அத் தகைய தபஸ்வி தான் பசியினாலும் தாகத்தினாலும் பாதிக்கப் படுவதில்லை என்று ஆழ்ந்து தீர்மானிக்கின்றான். ஆழ்ந்த தீர்மானத்துக்கு உறுதியான சங்கற்பம் என்பது மற்றொரு பெயர். அப்படி எண்ணுவதின் விளைவாக நெடுநாளைக்கு மனிதனுக்குப் பசியும் தாகமும் உண்டாவதில்லை. உணவைப் பற்றிய எண்ணம் வருவதில்லை. நீர் அருந்தாது அவன் நெடு நாள் உயிர் வாழ்ந்திருக்கிறான். நாலா பக்கமும் தீ வாட்டிக் கொண்டிருப்பதையும் அவன் பொருள்படுத்துவதில்லை. எண்ணத்தின் வலிவு எவ்வளவு பெரியது என்பதை இச் செயல் எடுத்துக்காட்டுகிறது. சாதாரணமான வாழ்க்கை யில் மனிதன் பசி தாகத்துக்கு அடிமைப்பட்டவனாகிறான். வெந்தழலின் வெப்பம் அவனைத் துன்புறுத்தக்கூடியது. ஆனால் உயர்ந்ததோர் மனநிலையை வரவழைத்துக் கொண் டாலோ இவை யாவையும் மனிதன் வென்றவன் ஆய்விடு கின்றான். இக்கோட்பாட்டை பசிதாகமின்றி யெழுநா மத்தியிடை நின்றும் என்று தாயுமானவர் சொல்லுகிறார்.

வேறுசிலர் மற்றொரு போக்கில் கடுந்தவம் புரிவதுண்டு. அப்படித் தவம்புரிந்து கொண்டிருப்பதற்கிடையில் பசியுண் டானால் அதைப் போக்குதற்கு ஏற்ற எளிய உபாயங்களைக் கையாளுகின்றனர். மரத்திலுள்ள பச்சை இலைகளையோ, காய்களையோ, கனிகளையோ அவர்கள் கொய்வதில்லை. மேலும் கனிவர்க்கங்கள் காலமெல்லாம் அகப்பட மாட்டா. எக்காலத்திலும் எளிதில் அகப்படக்கூடிய உதிர்ந்த சருகு களைச் சேகரித்து வைத்துக்கொண்டு ஏதோ குறிப்பிட்ட சில வேளைகளில் தண்ணீரில் ஊறவைத்து மென்று விழுங்குகின்ற னர். உடலுக்கு முற்றிலும் அவசியமாக இருக்கின்ற நீரை யும் சிறிது அருந்துகின்றனர். புனல் என்பது நீருக்கு அமைந்

துள்ள மற்றொரு பெயராகும். மனிதன் சருகைத் தின்று உயிர் வாழ்ந்திருக்க முடியுமா என்பது கேள்வி. சாஸ்திரம் அதை ஆமோதிக்கின்றதா என்பது அடுத்த கேள்வி. சருகு மனிதனுக்குப் பொருந்திய உணவு ஆகாது. வைக்கோல் சோளத்தட்டு போன்ற உலர்ந்த புல்வகைகளை ஆடு மாடு கள் தின்கின்றன. ஆனால் அவைகளும் பச்சைப் புல்லைத் தின்றுவிட்டால் நன்கு புஷ்டியடைவதில்லை. மனிதனுடைய உடலமைப்பு கால்நடைகளினுடைய உடலமைப்பைவிட மெல்லியதும் நுண்ணியதும் ஆனது. சத்துடைய சிறந்த உணவு வகைகளையே மனிதன் உட்கொள்ளுதல் அவசியமா கிறது. அவனுடைய மூளை வளர்ச்சிக்கும் அத்தகைய உணவு வகைகள் முற்றிலும் இன்றியமையாதவைகள். அப்போதைக் கப்போது சமைத்து ஆயத்தப்படுத்தியுள்ள சத்து நிறைந்த சுவையான உணவையே மனிதன் உட்கொள்ள வேண்டு மென்பது சாஸ்திரப் பிரமாணம். பிறகு சருகைத் தின்று உடல் மெலிந்திருப்பது யோகியர்களுக்கும் தவசிகளுக்கும் பொருந்தாது. எனினும் உடல் உணர்வைக் கடந்த நிலை யில் யாரோ சிலர் கடுந்தவம் புரிபவர்கள் இருக்கின்றார்கள். அவர்கள் பல நாளைக்கு ஒரு தடவை சருகு போன்ற சத்தற்ற உணவை உட்கொண்டு உடலை மறந்திருக்கின்றனர். அதற் கிடையில் வாயு ஸ்தம்பனம் என்னும் ஒருவகை சாதனத் தைச் செய்கின்றனர். அதன் வாயிலாக நெடுநாளைக்குப் பசியைப்பற்றிய உணர்வே மனிதனுக்கு இல்லாது போய் விடுகிறது. இத்தகைய சம்பவம் இயற்கையில் அசாதாரண மானதன்று. மற்ற உயிர்களிடத்திருந்தும் மனிதன் இப் பாடத்தைக் கற்றிருக்கிறான். உறைபனி நிறைந்துள்ள இமயமலை, வடதுருவம் போன்ற இடங்களில் வசிக்கும் ஜந்துக்கள் பனி காலத்தில் நாவை நாசித்துவாரத்தில்

விட்டு அடைத்துக்கொண்டு பூமிக்குள் புதைந்து கிடக்கின்றன. அப்போது பசியில்லை, தாகமில்லை, சுவாசிக்கவேண்டிய அவசியமுமில்லை. அத்தகைய நிலையை ஆத்ம சாதகன் ஒருவன் யோகப்பயிற்சியால் வரவழைத்துக் கொள்ளுகின்ருன். பாம்பு தவளை போன்றவைகள் பூமிக்குள் புதைந்து கிடக்கும் நிலையை இந்த யோகி தரையில் அமர்ந்திருக்கின்றபொழுதே வரவழைத்துக் கொள்கின்ருன். ஆனல் சுவாசிப்பது போன்ற செயல்களை யெல்லாம் நிறுத்தி வைத்திருப்பதால் பேசுவதையும் நிறுத்திவிடுவது அவசியமாகிறது. மௌனம் சாதிப்பது அப்போது எளிதாய்விடுகிறது. நெடுநாளைக்கு அத்தகைய நிலையிலிருந்து நிஷ்டை புரிவது ஒரு சாரார்க்குச் சாத்தியமாகிறது. இக்கருத்தை உதிர் சருகு புனல் வாயுவினை வன்பசி தனக்கு அடைத்தும் மௌனத் திருந்தும் என்று தாயுமானவர் இயம்புகின்ருர்.

இனி ஆத்ம நிஷ்டை புரிவதற்கு உயரமாயிருக்கின்ற மலைக்குகை மிகப் பொருத்தமானது. குகைக்கு நுழைவு என்பது மற்ருெரு பெயர். மலையிலே மேலே போகப்போக வெப்பம் குறைவு, குளிர்ச்சி அதிகம். உயரமாயிருக்கின்ற மலையிலே குகைக்குள்ளே போய்விட்டால் ஆங்கு வெப்பம் குளிர் ஆகிய இரண்டினுடைய கொடுமை கிடையாது. உடலுக்கு ஆயாசம் உண்டாவதில்லை. வியர்வை வருவதில்லை. குளிரால் நடுக்கம் எடுப்பதில்லை. தளர்வடையாத முறையில் உடல் இருக்கிறது. இனி குகைக்குள்ளே எந்த விதமான ஓசை, ஒலியும் எட்டுவதில்லை. இயற்கையினுடைய அமைதிக்கு நிலைக்களம் மலை நுழைவு. ஆங்கு அமர்ந்திருக்கின்றவன் தன்னுடைய ஹிருதயம் துடிப்பதால் உண்டாகிற ஓசையைக் கேட்கமுடியும். ஆனல் இயற்கையின் வேறு எந்த ஓசையையும் அவன் கேட்பதில்லை. தன் மனம் ஒடுங்கி

இருந்தால் அவனுக்கு எல்லாம் அமைதி. மனதிலே எண்ணம் என்னும் அலைகள் உதித்தால் அந்த எண்ணமே பெரும் ஓசைகளாக அவனுக்குப் புலப்படும். எண்ணம் ஒன்றையும் எண்ணாது, இயற்கையின் ஓசை எதையும் கேளாது தன்னில் தானாய் அமைதியுற்றிருப்பதற்கு மலைக் குகை பொருத்தமான இடமாகும். அக்கருத்தை உயர் மலை நுழைவு புக்கியும் என்று அவர் பகர்கின்றார்.

மனிதனுக்கு உடல் வாழ்வு நடைபெற்று வருவதை நாடிகள் விளக்கிக்காட்டுகின்றன. ஓயாது ஹிருதயம் அடித்துக் கொண்டிருப்பதையும், ரத்தக்குழாய்கள் வழியாக ரத்தம் ஒழுங்காகச் சென்று கொண்டிருப்பதையும் நாடிகள் விளக்குகின்றன. நாடியின் செயலின் மூலமாக ஒரு மனிதன் உடல் நலமுற்றிருக்கின்றானா அல்லவா என்பதை அறிந்துகொள்ள முடியும். நாடியின் செயலுக்கும் சுவாசத்தினுடைய போக்கு வரவுக்கும் தொடர்வு இருக்கிறது. பிராணாயாமம் செய்தல் மூலம் சுவாசத்தினுடைய போக்கு வரவு ஒழுங்காகிறது. பிராணனுடைய செயலும் அதனால் ஒழுங்குப்படுகிறது. அத்துடன் பிராணாயாமத்தின் துணைகொண்டு உடலில் அடித்துக் கொண்டிருக்கின்ற நாடிகளைச் சுத்தப்படுத்தலாம். நாடிகள் சுத்தியடைந்து வருங்கால் மானுட உடலம் ஓர் அற்புதமான கருவி என்பதும் ஆத்ம சாதகனுக்கு விளங்கும். வீணை ஒன்றிலிருக்கின்ற கம்பிகளையெல்லாம் முறையாகச் சுதி மீட்டி வைத்தால் அந்த வீணையின் வாயிலாக ஓசையைப்பற்றிய ஓர் அற்புதம் விளங்கும். வீணைக்குப் பக்கத்தில் மற்றோர் இன்னிசைக் கருவியில் ஏதேனும் ஒரு ராகத்தைக் கிளப்பினால் வீணையிலும் அந்த ராகம் எதிரொலிப்பது புலனாகும். பக்கத்திலிருக்கும் இசைக் கருவியில் ராகத்தைக் கிளப்பிய செயலை இடையில் திடீரென்று நிறுத்திவிட்டாலும் அந்த

ராகம் வீணையில் தொடர்ந்து ஒலித்துக் கொண்டிருக்கும். வீணையும் அதன் கம்பிகளும் ஒழுங்காக அமைக்கப் பட்டிருப்பதே அதற்குக் காரணமாகும். காற்றில் உண்டாகிற சலனங்களை முறையாக வாங்கிக்கொள்ளுதற்கும் அந்த வீணைக்கு சாத்தியமாகிறது. மானுட உடலை அந்த வீணைக்கு ஒப்பானதாகச் செய்யலாம். நாடிகளைச் சுத்தம் செய்வதே அதற்குற்ற உபாயமாகும். முறையான பிராணாயாமத்தின் மூலம் நாடிகள் சுத்தியடைந்துவிட்டால் மானுட சரீரத்துக்குள்ளேயே அரிய ஓசைகளைக் கேட்கலாம். அரிய ஜோதி தர்சனத்தையும் உள்ளம் என்னும் பெருங்கோயிலினுள் காணலாம். நாடி சுத்தியினுடைய விளைவு அவ்வளவு மேலானதாய் இருக்கிறது. சரீரத்தில் நாடிகள் பல இருப்பினும் அவைகளுள் பத்து மிக முக்கியமானவைகளாகக் கருதப்படுகின்றன. தசநாடிகள் என்று அவைகள் இயம்பப் பெறுகின்றன. சரீர வாழ்வு நடைபெற்றுக்கொண்டிருக்கும் பரியந்தம் நாடியின் செயலும் நிகழ்ந்துகொண்டே இருக்கிறது. மன்னுதல் என்னும் சொல் நிலைபெற்றிருத்தல் எனப் பொருள்படுகிறது. சரீரம் வாழ்ந்திருக்கும் வரையில் நாடிகள் அதனுள் நிலைபெற்றிருக்கின்றன. இக்கோட்பாட்டை மன்னுதசநாடி முற்றும் சுத்தி செய்தும் என்று தாயுமானவர் சொல்லுகின்றார்.

பிராணாயாமத்தை முறையாகச் செய்துகொண்டு வருவதன் மூலம் யோகி ஒருவன் மற்றொருவித பரிபாகத்தை அடைய முடியும். அவனுடைய சரீரத்தில் ஆறு ஆதாரங்கள் இருக்கின்றன. அவைகளுள் சரீரத்தின் அடிப்பகுதியில் இருப்பது மூலாதாரம். வீட்டுக்கு அஸ்திவாரம் மிகக் கீழான பகுதியாக இருப்பதுபோன்று மூலாதாரம் ஆத்ம சாதனத்துக்கு அடிப்படையான இடமாகிறது. மானுட

வாழ்க்கைக்குத் துணையாய் இருப்பது பிராணன். என்ன பாங்கில் அது துணையாய் இருக்கிறது என்பது சாதாரண மனிதன் ஒருவனுக்கு விளங்காது போய்விடலாம். ஒரு உபமானத்தைக்கொண்டு அதை விளக்குவது அவசியமாகிறது. மோட்டார் வண்டி ஒன்றனுடைய ஓட்டத்துக்குப் பிராணனாக அமைந்திருப்பது பெட்ரோல் எண்ணெய். அதை முறையாகப் பயன்படுத்துகின்ற அளவுக்கு வண்டி ஒழுங்காக ஓடும். உடல் வாழ்க்கையில் பிராணன் ஒழுங்காகப் பாதுகாத்து வைக்கப்பட்டிருக்குமளவு ஆயுள் நீடிக்கும், வாழ்வு திட்பமுடையதாகும். அங்கி என்னும் சொல் அக்னி எனப் பொருள்படுகிறது. பிராணன் சரியாக செயல் புரிந்துகொண்டிருக்கின்றபொழுது உடலெங்கும் கதகதப்பு இருக்கிறது. அது அக்னியின் செயலாகிறது. மூலாதாரத்தில் பிராணனும் அக்னியும் ஒழுங்காகச் செயல்புரிந்துகொண்டிருக்கின்றபொழுது வாழ்வும் சரியாக நிகழ்கிறது. பிராணாயாமத்தின் மூலம் மூலாதாரத்திலிருக்கின்ற பிராணனையும் அக்னியையும் சரீரத்தின் மேல் பகுதியிலிருக்கின்ற ஏனைய ஆதாரங்களுக்குச் செலுத்துவது சாத்தியமாகிறது. ஆறு ஆதாரங்களுக்குமேல் ஏழாம் ஞானபூமியாகிய கபாலத்தில் சோமவட்டம் அல்லது சந்திரமண்டலம் என்பது ஒன்று இருக்கிறது. பிராணனும் அக்னியும் இந்தச் சந்திர மண்டலத்துக்கு எழுப்பப்படுங்கால் மனதுக்குச் சீரியதேக்கம் உண்டாகிறது. சமாதி நிலை என்று அதைப் பகரலாம். இரவு பகலற்ற இடம் என்றும் அது இயம்பப்பெறுகிறது. காலம் கடந்து சென்றுகொண்டிருப்பது ஆத்மசாதகனுக்கு அப்பொழுது கருத்தில் சிறிதேனும் பதிவதில்லை. காலத்தைக் கடந்த நிலையில் அவன் அமைதியுற்றிருந்து விடுகிறான். இந்நிலையை மூலப் பிராணனோடு அங்கியைச் சோமவட்டத்து அடைத்தும் என்று அவர் பகர்கின்றார்.

அக்னியும் சூரியனும் சந்திரனும் பிராணனும் ஏழாம் ஞான பூமியில் ஒன்று கூடுங்கால் அமிர்ததாரை என்பது ஒன்று யோகிக்கு உச்சந்தலையில் உண்டாகிறது. சிவபெருமானுக்கு உச்சந்தலையிலிருந்து கங்கை பொழிவதுபோன்று அமிர்ததாரை யோகியினுடைய சகஸ்ராரத்தினின்று வடிகிறது. யோகியானவன் அதைப் பானம் பண்ண ஆரம்பித்து விடுகிறான். அப்பொழுது அவன் அடைகின்ற ஆனந்தம் சொல்லற்கரியதாகிறது. அந்த அமிர்தத்தை உண்டு ஆனந்த பரவசத்தில் யோகி இருந்து விடுகிறான். இக் கோட்பாட்டை சொல்லரிய அமுதுண்டும் என்று அண்ணல் இயம்புகின்றார்.

உடல் நிலையற்றது என்பது யாரும் அறிந்த விஷயம். தத்வ விசாரம் இல்லாதவர்களும் உடல் ஏதோ ஒருநாள் அழிந்துபட்டுப்போம் என்பதை உணர்ந்திருக்கிறார்கள். எனினும் அதை நன்கு பாதுகாத்து வைப்பதில் உயிர்களனைத்தும் ஊக்கம் கொண்டிருக்கின்றன. அவைகள் எடுத்துக்கொள்கின்ற முயற்சிகள் அனைத்தும் உடலை நெடிது பாதுகாத்து வைத்தல் பொருட்டேயாம். அதற்கு அமைந்திருக்கின்ற பெயர்களே அது நிலையற்றது என்பதைக் குறிக்கின்றன. எது தகனமாய்க் கொண்டிருக்கிறதோ அது தேகம். எது ஜீரணமாய்க் கொண்டிருக்கிறதோ அது சரீரம். அது அழியும் தன்மையுடையது என்பதை இங்ஙனம் அதற்கு அமைந்துள்ள பெயர்களே காட்டித்தருகின்றன. ஆயினும் நெறியான வாழ்க்கையின் மூலமாகவும் பொருத்தமான உணவின் மூலமாகவும் தகுந்த தேகப்பயிற்சியின் மூலமாகவும் தேகத்தின் ஆயுள் குறைந்துபட்டுப் போகாதிருக்கும்படி பாதுகாக்கலாம். தேகத்தை ஒரு தேவாலயமாகக் கருதி அதை நன்கு பயன்படுத்துவதே ஒருவித ஆத்ம சாதனமாகும்.

மணி, மந்த்ரம், ஔஷதம் ஆகியவைகளின் துணைகொண்டு காயகற்பம் அல்லது காயசித்தி செய்வது சில யோகியர்களுக்குச் சாத்தியமாகிறது. காயசித்தி செய்வதன் மூலம் நெடுங்காலத்துக்கு அது அழிந்துபட்டுப் போகாது பாதுகாத்து வைக்கலாம். ஒரு கல்ப காலம் வரையிலும் ஒரு சரீரம் நிலைத்திருக்கும்படிச் செய்யலாம் என்னும் ஐதிகம் மக்களுக்கிடையில் இருந்து வருகிறது. ஆனால் ஸ்தூல சரீரத்தை நானூறு அல்லது ஐந்நூறு வருஷங்களுக்குமேல் வைத்திருந்த மகான்களைப்பற்றி உலகம் ஒன்றும் அறியாது. மிக அண்மையில் காசியில் இருந்த திரைலிங்க சுவாமிகள் சுமார் ஐந்நூறு வருஷகாலம் அவருடைய உடலுக்குக் காய சித்தி செய்து காப்பாற்றி வைத்திருந்தார். அதன் பிறகு அது அழிந்துபட்டுப் போய்விட்டது. சித்தர்களில் சிலர் காயத்துடன் இன்னும் இருந்து வருகிறார்கள் என்னும் கொள்கை மக்களுக்கிடையில் உலவி வருகிறது. ஆனால் அவர்களை நேரில் கண்டவர்கள் யாரும் இல்லை. உடலை நெடுங்காலம் காப்பாற்றி வைக்க யோகிக்கு முடியும் என்னும் உண்மை மறுக்கமுடியாதது. அதற்கேற்ற மேலான சாதனமுறைகளைக் கையாளுவது அவசியமாகிறது. வீறு சித்தி என்னும் சொல் மேலான சாதனமுறை எனப்பொருள் படுகிறது. இப்படி உடலைப் பாதுகாத்து வைக்கும் யோகியர்களுடைய பழக்கத்தை அற்ப உடல் கற்பங்கள்தோறும் நிலை நிற்க வீறுசித்தி செய்தும் என்று தாயுமானவர் இயம்புகின்றார். திரும்பத் திரும்பத் தேகங்களை எடுத்துக் கொண்டிருப்பதற்குப் பதிலாக எடுத்துள்ள ஒரே தேகத்தைக்கொண்டு தங்கள் பிறவிப் பிணியை நீக்கிவிடவேண்டுமென்று தீர்மானம் செய்கின்றவர்கள் இத்தகைய காய சித்தியைச் செய்கின்றனர்.

இத்தனை விதமான சாதனங்களையெல்லாம் செய்வது உயர்ந்த சாத்தியம் ஒன்றை அடைதல் பொருட்டேயாம். நெடுந்தூரம் பாய்கிற நதி கடைசியில் கடலைப்போய்ச் சேர்ந் தாகவேண்டும். கடலை அடைதல் அதன் குறி. அதன் பொருட்டு ஓயாது அது ஓடிக்கொண்டிருப்பது அதன் நெறி. அதே பாங்கில் ஜீவாத்மன் பல பிறவிகளை எடுக்கின்றான்.. அவைகளின் வாயிலாக படிப்படியாகத் தன்னை மேல்நிலைக் குக் கொண்டுவருகின்றான். பிறவிகளுள் பெரியதாகிய மானுடப் பிறவியைப் பிறகு எடுக்கின்றான். மானுடப் பிறவி யில் ஆத்ம சாதனங்கள் பல செய்வது சாத்தியமாகிறது. அந்த சாதனவகைகளுள் பலவற்றை இப்பாடலில் இது காறும் ஆராய்ந்தோம். அவைகள் செயற்கரிய செயல் களாக இருக்கின்றன. ஞானத்தைப் பெறுதல் ஜீவாத்மா வுக்கும் பரமாத்மாவுக்கும் உள்ள இணக்கத்தை அறிந்து கொள்ளுதலாம். சிறந்த இந்த அறிவைத்தான் ஞானம் எனப் பெரியவர்கள் பகர்ந்துள்ளார்கள். ஜீவனுக்கும் பரமாத்மாவுக்கும் உள்ள இணக்கத்தை அறிந்துகொண்ட ஜீவன் பிறகு பரமாத்மாவிலேயே சேர்ந்துவிடுகிறான். கடலை யடைந்த நதி, நதி என்னும் சிறிய வியக்தியை இழந்துவிட் டுக் கடல் என்னும் பெரிய வியக்தியைப் பெற்றுவிடு கிறது. பரமாத்மாவை அறிகின்ற ஜீவன் ஜீவ போதம் என்கின்ற சிறிய வியக்தியை இழந்துவிட்டு பர போதம் என்கின்ற பெரிய வியக்தியைப் பெறுகின்றான். அதைப்பெற்றுவிடுவதுதான் ஜீவனுக்கு அமைந்துள்ள முடி வான குறி ஆகிறது. ஆனால் அதைப் பெறாது இதுவரையில் சொல்லியுள்ள சாதனங்களையெல்லாம் ஏராளமாகச் செய்து கொண்டு போவதால் ஜீவன் முடிவான நன்மையை அடைந் தவன் ஆகமாட்டான். ஞானத்தைப் பெறுவது தீவிர சாதகர்

களாக இருக்கின்ற சிலருக்கு மிக எளிதாய் விடுகிறது. கடலினின்று மேலே ஆவியாகக் கிளம்பிய நீர் மீண்டும் மழைத்துளியாகக் கடலுக்குள்ளே விழுந்துவிடுமாகில் புறப் பட்ட இடத்துக்கு அது எளிதில் வந்து சேர்ந்த நீர்த்துளி யாகிறது. ஆனால் அதற்கு மாறாக அது நெடுந்தூரத்துக்கு அப்பால் ஒரு மலை உச்சியின்மீது உறைபனியாக விழுந்து பல்லாயிரம் ஆண்டு காத்திருந்து, பிறகு உருகி நீராக நதி யில் சேர்ந்து, பல மாறுபாடுகளுக்கு உட்பட்டு, கடலை அடையுமானால் குறியைஅடைதற்கு அது எடுத்துக்கொண்ட முயற்சிகள் மிகக் கடினமானவைகளே என்பது சொல்லா மலே விளங்குகிறது. கடலைப் போய்ச் சேருதல் என்னும் செயல் அதன் பிறகாவது பூர்த்தியாகிவிடுகிறது. அதே பாங்கில் ஜீவாத்மன் இத்தனை விதமான சாதனங்களையெல் லாம் செய்வது தேவையில்லாத பல சாதனங்களைச் செய்வ தற்கு ஒப்பாகிறது. அவைகளையெல்லாம் செய்தானபிறகும் அவன் குறியை வந்து அடையாது போய்விடுவானாகில் அவன் எடுத்துக்கொண்ட முயற்சிகள் எல்லாம் அனர்த்த மாய்ப் போய்விடுகின்றன. தமது முயற்சி அனர்த்தமாய்ப் போய்விடலாகாது என்னும் உணர்வினால் ஞான மலதுகதி கூடுமோ என்று தாயுமானவர் பரம்பொருளிடத்துப் பணி வுடன் விண்ணப்பிக்கின்றார். ஞான நெறியில் முறையறிந்து போகின்றவர்களுக்கு சாதனங்கள் ஒருநாளும் கடின மானவைகள் ஆகமாட்டா. நீரினுள் செல்லுவது மீனுக்கு எவ்வளவு சுலபமானதோ அவ்வளவு சுலபமானது ஞானிக் குத் தனது யதார்த்த சொருபத்தை அறிந்து அதில் நிலை நிற்பது. ஆனால் மனபரிபாகம் அடையாத அவிவேகிகள் நேர்வழியை அறிந்துகொள்ளாது என்னென்னவோ முறை களைக் கையாண்டு பெரும் பாடுபடுகிறார்கள். அயர்ந்து

தூங்குகின்ற ஒரு மனிதனுக்கு சொப்பனம் உண்டாகிறது. பொருந்திய சொப்பனம் இன்பம் தருகிறது. பொருந்தாத சொப்பனம் துன்பம் தருகிறது. சொப்பனத்தின் மூலம் ஒருவன் சுவர்க்கத்தில் இருப்பதுண்டு; நரகத்தில் இடர்ப் படுவதும் உண்டு. கனவில் படாதபாடுபட்டுப் பொருள் சம்பாதிப்பவருமுண்டு; ஆத்ம சாதனங்கள் செய்கின்றவர் களும் இருக்கின்றனர். மனபரிபாகம் அடைந்திருப்பவர் களுக்கு நல்ல கனவு; கெட்ட மனமுடையவர்களுக்குத் தீய கனவு. பிறகு கனவினின்று விழித்துக் கொண்டால் நலம் கேடு, பாடுபடுதல், சாதனம் புரிதல் ஆகிய அனைத்தும் பறந்தோடி விடுகின்றன. ஞானத்தைப் பெறு வது சொப்பனத்தினின்று விழித்துக்கொள்ளுதற்கு ஒப்பா னது. தனக்கும் தன் தலைவனுக்கும் உள்ள தொடர்வு ஆங் குத் தெளிவுபட விளங்குகிறது. ஞானத்தைப் பெறுவது ஒன்றே வாழ்க்கையின் குறிக்கோள்.

பரம்பொருள் மனதுக்கு அப்பாற்பட்டது. முக்திக்கு அதே வித்து ஆகிறது. தென்முகக் கடவுளாக அவர் சிரகிரி யில் சிறப்புற்று விளங்குகின்றார். ஞான வடிவினராய் உள்ள பரமகுருவும் அவரே. இக்கருத்துக்கள் யாவையும் தொகுத்து தாயுமானவர் மேற்கூறிய பாடலில் பகர்ந்துள்ளார்.

# தர்ம சக்கரம்

**மாத சஞ்சிகை**

ஆசிரியர் சுவாமி நித்தியானந்தர்

1952 ஜனவரி முதல் வெளிவந்துகொண்டுள்ளது

| *ஆண்டு சந்தா* | | *தனி இதழ்* |
|---|---|---|
| *உள்நாடு* | *ரூ. 10-00* | *ரூ. 1-00* |
| *வெளிநாடு* | *ரூ. 20-00* | *ரூ. 2-00* |

*ஆண்டுதோறும் சந்தா செலுத்திப் புதுப்பிப் பதற்குப் பதிலாக ரூபாய் நூறு டிபாசிட் செய்துவிட் டால் தொடர்ந்து மாதந்தோறும் பத்திரிகை வந்து கொண்டிருக்கும். பத்திரிகை வேண்டாம் என்று கருதும்பொழுது டிபாசிட் செய்த முழுத்தொகை யாகிய ரூபாய் நூறையும் திரும்பப்பெற்றுக்கொள்ள லாம். டிபாசிட் முறை வெளிநாட்டுக்கு இல்லை. விபரத்திற்கு எழுதக்கோருகிறோம்.*

***ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்***
***திருப்பராய்த்துறை 639 115***
***திருச்சி ஜில்லா***

